# முத்தொள்ளாயிரம்

உரை விளக்கம் : வே. கபிலன்

பதிப்பாசிரியர் : அருணன்



அருணோதயம்

இராயப்பேட்டை : : சென்னை-14,

தமிழ்த்துறைத் தலைவர்

பேராசிரியர் மா. இராசமாணிக்கம், M.A.,

## அணிந்துரை

கால நிலையுணர்ந்து மக்கள் மனநிலையறிந்து இலக்கியங்களை அறிமுகப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் இலக்கியங்களின் பெருமையை மக்கள் உணர்வார்கள். இந்நெறியில் நின்று இலக்கியங்களின் சுவையை மக்கள் உணர உணர்த்தி வருகின்றார், ஆசிரியர் வே. கபிலன். அவரின் முத்தொள்ளாயிரம் சுவைமிகுந்த இலக்கியங்களில் ஒன்று. கற்பனைகளும், தற்குறிப் பேற்றங்களும் காணுமிடமெங்கணும் பேரொளி விட்டு விளங்கும், இந்நூலின்கண். ஆசிரியரின் நடைச் சிறப்பாலும், முறையாலும் அனைவரும் இவற்றின் சுவையை யுணர்ந்து இன்பங் கொள்வார்கள் என்பதில் ஐயமின்று. ஆசிரியரின் தொண்டு மேலும் மேலும் சிறப்புற்றோங்குவதாகுக. அருணோதயத்தார் இதனை மலிவுப் பதிப்பாக வெளியிட்டு தமிழிலக்கியத்திற்குத் தொண்டு புரிய முன் வந்ததைப் பாராட்டுகிறேன்.

ம. இராசமாணிக்கம்.

சென்னை புதுக்கல்லூரி தமிழ் விரிவுரையாளர்
நா. பாண்டுரங்கன் எம். ஏ.

## பாராட்டுரை

முத்தொள்ளாயிரம்! தமிழ் இலக்கிய வானில் தகதகவென ஒளிவீசிக் கொண்டிருக்கும் தங்க நிலா அது! தங்க நிலாவைக் கண்டால் எவர் உள்ளத்தில் தான் உவகை பொங்கி வழியாது?

கடைவாயில் அடக்கிக்கொண்டு சிறிது சிறிதாக உமிழ்நீரால் கரைத்து நீண்ட நேரம் சுவைப்பதற் குரிய கற்கண்டுக் கட்டியை ஒத்தது, முத்தொள் ளாயிரப் பா ஒவ்வொன்றும்!

கற்கண்டுக் குவியலை கண்ணைப் பறிக்கும் வெள் ளித்தட்டிலே கொட்டி வரிசை வழங்குவதைப் போல முத்தொள்ளாயிரத்தை மலிவுப் பதிப்பு எனும் வெள்ளித்தட்டிலே வைத்துத் தமிழகத் துக்கு வழங்குகிறது "அருணோதயம்."

எளிமையையும் எழிலையும் ஒன்ருக்கி இனி மையை அதனுடன் இழைத்து அதையே நடையாக் கித் தருவதில் வல்ல எழுத்தாளர் கபிலன் விளக் கம் தீட்டியுள்ளார்! தமிழகம் அவருக்கு நன்றி கூறும் கடப்பாடு உடையது!

நா. பாண்டுரங்கன் எம். ஏ.

## கடவுள் வாழ்த்து !

மன்னிய நாள்மீன் மதிகனலி என்றிவற்றை
முன்னம் படைத்த முதல்வனைப்—பின்னரும்
ஆதிரையான் ஆதிரையான் என்றென்(று) அயருமால்
ஊர்திரைநீர் வேலி உலகு

(வி-ரை) வானத்திலிருக்கின்ற நட்சத்திரங்கள் (மீன்) சந்திரன், சூரியன், ஆகிய எல்லாவற்றையும் முன்னம் படைத்த முழுமுதற் கடவுளை, அவர் படைத்தது திருவாதிரை நட்சத்திரம் ஒன்றைத்தான் என்று கருதி, 'ஆதிரையான், ஆதிரையான்' என்று சொல்லி மயங்குகிறது உலகம்! என்ற பொருள் படப் பாடியுள்ளார்.

# முத்தொள்ளாயிரம்

## 1. சேரன்

### மதியும் மன்னனும்!

கொடிகட்டி வாழ்ந்தாலும் கோதை! யாரவன்? எந்த ஊருக்கு உரியவன்?—என்று நம்மை நாமே கேட்டுக் கொண்டால் பழங்காலப் பனுவல்களைத்தான் புரட்ட வேண்டும். அப்படிப் புரட்டிப் பார்க்கும்போது அவனது பெருமை முழுமையும் உணர்ந்து கொள்ளும் அளவிற்கு உள்ள நூலே தேவைப்படக் கூடியதாகும். அவ்விதம் உறு துணை பயக்கும் நூலிலேதான் அவன் புகழ் கண்டேன்! அகழ் வாரைத் தாங்கும் நிலம்போல உறுதி கொண்டு பணி புரிந்த வேந்தனைக் கண்ணுற்றேன். ஆகா! அந்த இன்பந்தான் என்னே?

விண்ணைப் பற்றி எண்ணிப் பார்த்தால்—அதோடு, பொருத்தி வைத்துப் பார்த்தால் இம் மண்ணுலகம் ஒரு சேர நமக்குத்தோன்றுகிறது. உண்மை. ஆனால், வானத் தாரகைக்கு ஈடாக நிற்பவர் யார்? இந்தக் கேள்வி சிறிது. பொருளோ பெரிது! ஆராய்ந்தால் நுட்பமானது! சிற்றரசர் களுக்கு ஒத்தது. சரி, இதுவும் தீர்ந்தது. இந்த சிற்றரசர் களுக்கு ஒரு பேரரசன் இருப்பான் அல்லவா? அவனுக்கு எதை உவமை யாக்குவது? சற்று சிந்தனை! சில நிமிடங்கள் மனப் போராட்டம்! அதன் பிறகு தெளிவு. அதுதான் நிலவு. விண்ணுக்கும் மண்ணுக்கும் குளிர்ச்சியூட்டும் பால் நிலவு. விண்முட்டும் அளவிற்கு உள்ள கொல்லிமலைப் பேரரசனை கோதையென்னும் கொற்றவனுக்கே அந்த நிலவை ஒப்பிட் டுப் புலவர் வரைந்துள்ளார். அவன் யார்? கொல்லிமலையிலே கூடியுள்ள மக்களுக்குத் தலைவன்; அது எத்தகையதென்றால் கணக்கற்ற விண்மீன்களுக்கு முழுமுதற் தலைவனாக விளங்கும்

நிலவைப் போல, எத்தகைய உவமை! என்ன இனிமை! சொல்லும் சொல்லிலேதான் எவ்வளவு குழைவு! அதில் எத்தனை உட்பொருள்?

1. வானிற்கு வையகம் ஒத்ததே வானத்து
மீனிற்கு அனையார் மறமன்னர்-வானத்து
மீன்சேர் மதியனையன் விண்ணுயர் கொல்லியர்
கோன்சேரன் கோதையென் பான்.

(வி-ரை) கோதைக்குரிய நிலப்பரப்பு எந்த அளவிற்கு இருந்ததென்று யாரோகேட்பதுபோல எண்ணி அதற்கு வானத்தையொத்த பரந்த நிலமென்று புலவர் குறிப்பிடுவதை எண்ணும்போது உண்மையிலேயே தெளிவு ஏற்படுகின்றது. அவன்கிழ் அமைந்துள்ள சிற்ரசர்களுக்கு எடுத்துக்காட்டாக விண்மீன்கள்! கொடைவளத்திற்கும் நல்ல வல்லமைக்கும் சான்ருகத் திங்கள்! கொல்லி மலையின் உயரமோ வானத்தை முட்டும் அளவு.

ஒத்தது-ஏற்றது ; மீன்-நட்சத்திரம் ; கோன்-அரசன்.

* * *

## புகழோடு கூடிய புரவலன்!

களமெல்லாம் ஒரே கூப்பாடு! வேல் கொண்டு தாக்கப்பட்ட காரணத்தால் களத்திலே துடிதுடித்து அழுது கொண்டிருக்கும் களிறுகள்! இரத்த வெள்ளத்திலே மாற்ருர் கலசங்கள் மிதக்கும் காட்சி. இத்தனைக்குமிடையே சேரன். அவன் வீரன்! புறங்காட்டும் புல்லர்களை விரைந்தோடிப் பிடிக்கும் சுபாவமுடையவனல்ல...அஞ்சும் வஞ்சகர், அஞ்சிய படியே ஓடட்டும்! நம் புகழ் பாடட்டும்! பணிவோடு நம்மை நாடட்டும் என்று உள்ளத் திண்மையோடு சொல்லும் மன்னன். அத்தகைய சிங்கம், களத்திற்குப் பிறகு வெற்றியின் சின்னமாக வாகை மாலை சூடினன். போர்ப் பரணி பாடி உலா வந்தான். அதுவும் அன்று அலர்ந்த வாகைப்பூ வைத்தான் அணிந்து கொண்டான். புத்தம்புது மலர்களைக்

காண்பது மன்னர்களுக்கு இயற்கையான சுபாவம். அவர்களுக்கு மட்டுமா? மக்களுக்கும்தான். புதிய ஒரு பொருள் என்றால் யாருக்குமே பார்க்கச் சற்று மனம் விரும்பும். அவனும் அப்படித்தான் விரும்புவதுபோல் தோன்றினன். மாற்றுரை வென்று வருபவனல்லவா? ஆகவே அந்நாட்டினர் அவனைத் தொழுதனர். களத்திலே துள்ளி விளையாடிய வேலுக்குப் புகழ்; சிறப்பு! ஒளிபடைத்த வேலின் ஓர் ஓரத்தில் மரணத்தை முத்தமிட்டவர்தம் மாமிசத் துண்டு; மற்றொரு பக்கத்தில்—அதன் பிடியிலே சந்தன நறுமணம்! இந்த இரண்டு வாடைக்குமிடையே சிறு நரிகள்! இவ்வளவும், போர்க்களக் காட்சிகள் புலால் நாற்றத்தால் குடிபுகுந்த நரிகள்; நறுமணம் கமழும் செஞ்சாந்தின் மணங்கண்டு வட்டமிடும் வண்டுகள்; பண்ணிசைக்கும் கூட்டம். இவற்றிற்கிடையே கோதை.

2. அரும்பவிழ்தார்க் கோதை அர(சு)எறிந்த ஒள்வேல்
பெரும்புலவும் செஞ்சாந்தும் நாறிச்—சுரும்பொடு
வண்டாடு பக்கமும் உண்டு; குறுநரி
கொண்டாடு பக்கமும் உண்டு

(வி-ரை) போர் முடிந்த பிறகு அந்தப் போர்க்களத்திலே விழுந்து கிடக்கும் வேலின் நுனியில் சதைத் துண்டுகள் தொங்கும்! அதன் பிடியிலே சந்தன மணம் கமழும். இந்த இரண்டிற்கும் இருகூட்டமுண்டு. ஒன்று, நரிகள்; மற்றொன்று, வண்டுகள். புலால் நாற்றங் கண்டு வரும் குள்ளநரி; நறுமணங் கண்டு வரும் வண்டு, இந்த இரண்டுமே களம் கண்ட பிறகு அங்கு புடைசூழ்ந்து இருக்கும் கூட்டம்.

வீர வாளுக்கும் வேலுக்கும் வெற்றி விழா! மாமன்னனுக்கு மலர்மாலை!

அரும்பு அவிழ்-அன்று விரிந்த ; தார்-மாலை ; சுரும்பு-வண்டு ; புலவு-ஊன்.

* * *

## நாட்டு வளம்!

தன் நாட்டைப் பற்றிப் புகழ்வதிலே யாருக்கும் ஐய மில்லை. ஆனல் அப்படி புகழாமல் மாற்ருர் நாட்டைப் புகழ்ந்து கொண்டிருந்தால்—? அத்தகையவர்களை மன்னித்து விட வேண்டியதுதான்! அதோடு அவர்களை மறந்துவிட வேண்டியதுதான்! இப்படி, இந்த விஷயத்தில் பாகுபாடு பார்த்துக்கொண்டு இருக்கும் சூழ்நிலை அன்றில்லை. காலத் தால் கழிந்த நாகரிகம், கலை கலாச்சாரம் ஏராளம்! ஆயினும் உண்மைத் தோற்றம் மறைந்ததில்லை. இப்போது பாருங் கள் !

சேர நாட்டின் ஒரு பகுதி. வயல், அந்த வயலைச் சுற்றி அணி செய்யும் இனிய பொய்கைகள்; அப்பகுதியைச் சூழ்ந்து அழகு செய்யும் மாளிகைகள்; அங்கு கொங்கு நாட்டு மங்கை யர்கள்! பொங்கிச் சிரிக்கும் புன்னகை! தங்கி நிற்கும் மாம் பழக் கன்னம்! இத்தனையும் அங்குண்டு. ஆனல் புலவர் கண் களுக்குப் பட்டவர்கள் யார் என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டாமா?

இதோ, இரு அணங்குகள்!

அந்த இருவரில் ஒருத்தி தலைவி; மற்ருெருத்தி அவளது பாசத்திற்குரிய தோழி. இருவரும் ஒரு நாள் வயலோரமாக வந்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் புறப்பட்டு வந்த நேரம் மாலை. பொதுவாக மாலை வேளை என்ருலேயே இல்லாத எண்ணங்கள், எழில் மிகுந்த கருத்துக்கள் தோன் றும் வேளை அது. இக்கருத்திற்கேற்ப இருவரும் திகழ் கின்றனர்.

ஆரவாரமின்றி அமைதியோடு இருக்கும் ஊரைக்கண்டு தலைவியின் உள்ளத்தில் புதுப்புதுக் கேள்விகள் தோன்றித் தோன்றி மறைகின்றன. கதிரவன் மறையும் நேரம்; இருள் உதயமாகும் சமயம். உடன் வந்த தோழியோ, 'தலைவி! இருள் நெருங்குகிறது; விரைவில் வீட்டுக்குப்போக வேண் டும்!' என்கிருள்.

அதற்கு அன்னவள், ''தோழி! அஞ்ச வேண்டாம். அஞ்சக் கூடிய அவலநிலை நம் நாட்டில் இல்லை. நஞ்சினும் கொடியதொரு வேல் நம் கொற்றவன் கையிலே உள்ளது. அது கண்டே அயலவர் அஞ்சுகின்றனர்.

நாம் அடிக்கடி பல நாடுகளைப்பற்றிக் கேள்விப்படு கிறோம். அங்கெல்லாம் அயலவர் வந்து தீ வைத்து வீட்டை யும் நாட்டையும் கொளுத்திவிடுகின்றனர். அதனால் அங் கெல்லாம் பெருத்த ஆரவாரம் எழுகின்றது. இங்கு அப்படி யில்லை. எந்த ஆரவாரமும் இங்கு கேட்க இயலாது!'' என்கிறாள்.

தோழிக்கு ஏதேதோ எண்ணம் மேலிடுகிறது. இதற் கிடையே இருவரும் ஒரு குளத்தை நெருங்குகிறார்கள். அந்தக் குளத்துக்குள் சில காட்சிகள் தலைவியின் எண்ணத்தைத் தோற்கடிக்கும் வகையில் அமைந்திருப்பதைக் காண்கிறாள்!

செவ்வாம்பல் என்று ஒரு மலர். அந்த மலர் சிவந்து காணப்படும். நெருப்பினும் மேலான நிறம் கொண்டது. அது கண்ட அங்குள்ள பறவைகள், ஏதோ தீப்பற்றி எரிகிற தென்று நினைத்து, தம் குஞ்சுகளை சிறகுக்குள் ஒதுக்கி வைத்துக் கொள்கின்றன. இந்தக் காட்சியைத்தான் அவள் பார்த்தாள்.

'' தலைவியே! ஆரவாரமில்லையா...இதோ பார்! பறவை களெல்லாம் சிறகடித்துக் கொண்டிருக்கின்றன. இது ஆர வாரமில்லையா?'' என்று நகைப்போடு சொல்கிறாள். இவ்வள விற்கும் காரணம் தன் நாட்டைப் போற்றும் தலைவியின் குணநலன்தான். இந்தப்பற்று எந்த நாளிலும் யாவருக்கும் இருக்க வேண்டும்.

3. அள்ளல் பழனத்து அரக்காம்பல் வாய்அவிழ
வெள்ளம்தீப் பட்ட(து) எனவெரீ இப்—புள்ளினம்தம்
கைச்சிறகால் பார்ப்பொடுக்கும் கவ்வை
உடைத்தரோ
நச்சிலைவேல் கைக்கோதை நாடு.

(வி-ரை) நாட்டைப் போற்றும் நங்கை ; காட்சியாக்கிக் காட்டும் கற்பனையின் வன்மையை என்றென்றும் போற்றக் கூடிய முறையாகும்.

அள்ளல்-சேறு ; பழனம்-நீர் நிறைந்த குளம் ; அரக் காம்பல்-சிவந்த ஆம்பல் மலர் ; அவிழ-விரிவுடைய.

* * *

## கள்ளும் களிறும்

சேர நாட்டின் எந்தப் பகுதியைப் பார்த்தாலும் மறவர் தான்! வாளோடும் வேலோடும் பேசும் போர் வீரர்கள்தான். அத்தகையவர்களுக்கென்று ஒரு விருந்து இருந்து வந்தது. அதுவும், அவர்கள் விரும்பும் விருந்துதான். மது ! வஞ்சி நகரத்துத் தெருவீதியிலே கள்ளை விற்பவர்கள் சூழ்ந்திருப்பர். அவர்களைக் காணும் அடலேறுகள் அருகில் சென்று புத்தம் புதுக் கள்ளை வாங்குவர். வாங்கிய கள்ளின்மீது உள்ள நுரையைக் கீழே தெளிப்பர். அதே வழியாகக் களிறுகள் கூட்டங் கூட்டமாக வரும். அப்படி வருகின்ற காரணத்தால் நுரை யாவும் சேருகிவிடும் ; அதோடு, எங்கு பார்த்தாலும் ஒரே ஈரமாகி விடும்.

4. களிகள் களிகட்கு நீட்டத்தம் கையால்
களிகள் விதிர்த்திட்ட செங்கள்-துளிகலந்(து)
ஓங்கொழில் யானை மிதிப்பச்சே ருயிற்றே
பூம்புனல் வஞ்சி அகம்

(வி-ரை) சேர நாட்டின் தலைநகரமான வஞ்சி சோலைக் குப் பேர் போனதென்பது இப்பாடலால் . தெளிவாகத் தெரிகிறது. குளிர்ச்சியூட்டும் வகையில் ஈரம் இருந்து கொண்டே இருந்ததென்பதற்கு, ‘கையால் விதிர்த்திட்ட’ என்ற வரியால் விளக்கமாகிறது. எவ்வளவு மறவர்கள் இருந்திருந்தால் களிறுகள் மிதிப்பதால் சேருகி யிருக்கும் ? அத்தகைய மறவர்கள் சூழ்ந்திருந்த நகரம்தான், ‘பூம்புனல் வஞ்சி அகம் !’ என்பதாகும்.

விதிர்த்திட்ட - தெளித்திட்ட; களிகள் - களிப்பை ஊட்டும் கள்.

*   *   *

## விண்ணும் வில்லும்!

போரொலி! கப்பங் கட்ட மறுத்து வேற்று மன்னர்கள் சேரன் எல்லேக்கு அடுத்தாற்போல அணி அணியாகச் சூழ்ந் திருந்தனர். திறை கட்ட வேண்டுமா? இல்லே. நான் கட்டப் போவதில்லேயென்று உறுதி பூண்டு போர்க்களத்திலே நின்றுகொண்டிருப்பவரை நோக்கிச் சேர நாட்டுப் படைத் தலேவன் வந்தான்.

ஆகா! அவன் நடந்து வரும் நடையில்தான் எவ்வளவு வீரம்; தோளின் அசைவிலேதான் என்ன கம்பீரம்! முகத் திலேதான் என்ன பொலிவு!—இது அயலவர் உள்ளத்தின் கொதிப்பு. வந்தவன் சொன்னுன்:

''பல்வகையான யானேகளேப் போர்க்களத்திலே நிற்க வைத்திருப்போரே! திறை செலுத்த மறுப்போரே! மரண மடைய உரங்கொண்டிருந்தால் உறையிலே உறங்கும் வாளுக்கு வேலே கொடுங்கள். இல்லேயேல் வணங்கி வாழுங் கள்! விண்ணும் வணங்குகிறது, எம் மன்னரைக் கண்டு! நீங்கள் எம்மாத்திரம்! வண்ணப் பூக்களுக்கிடையே வாடாத நறுமலரை அணிந்த விண்ணும் சேரனேக் கண்டு, 'என்னே விட்டுவிடு! உனக்கு நான் பணிந்தவன்!' என்னும் முகத்தால் பூட்டிய வில்லே எழுதி உயிர் பிழைத்து வாழ்கிறது. அங்ஙனமே நீங்களும் ஓவியரை வரவழைத்து நுமது கோட்டை மதிற்சுவரிலே எமது வேலவனின் பூட்டிய வில்லே வரைந்து திறை செலுத்தி உயிர் வாழுங்கள்! கொடியிலுள்ள வில்லேப் பொறித்துக்கொண்டு பணிவோடு வாழுங்கள்!'' என்று கூறுகிருன்.

5. பல்யானே மன்னீர் படுதிறை தந்(து) உய்ம்மின்
மல்லல் நெடுமதில் வாங்குவில்—பூட்டுமின்

வள்ளிதழ் வாடாத வாஞேரும் வானவன்
வில்எழுதி வாழ்வார் விசும்பு.

(வி-ரை) சேரன் இரக்கங் கொண்டவன்; அதனுல்தான் படைத்தலேவனே விட்டுப் பணிந்து போகும்படி கேட்டுக் கொள்கிருன். காரணம் வீணுகக் களிறுகள் இறந்துபடுமே! பல காளேயர்கள் தம் உயிரை இழக்க நேருமே என்ற ஒரே நோக்கத்தால்தான் பணிவை நாடச் சொல்கிருன். படைத் தலேவனும் உள்ள நிலேயை உரைக்கிருன். விண்ணும் எம் மன்னனே வணங்கி நிற்கிறது என்பதற்கு வானத்து வில்லே வளேத்துக் காட்டுகிருன்.

படுதல் - தோன்றுதல்; வானவன் - சேரமன்னன்; படு திறை - நாட்டில் விளேயும் பொருளின் பொருட்டுப் போடு கின்ற வரி; விசும்பு - வானம்.

## யானேக்குள்ள வீரம்!

ஓங்காரக் கூச்சல் ஒடுங்கியது! கோதையை எதிர்க்க வந்த கணக்கற்ற காளேயர்களில் சிலர் மரணத்தை நாடிச் சென்றனர். கோதையின் சிவந்த கண்களேக் கண்டு குதிரை கள் மருண்டு ஓடின. எப்படியோ மாலே வந்தது; போர் ஓய்வு பெற்றது. ஆனுல்—?

சேரனின் சீற்றம் மட்டும் தணிந்தபாடில்லே. அவன் மட்டுமா அப்படி? அவன்கீழ் அமைந்துள்ள மதம் பிடித்த யானேகளுக்கும்தான்! இடி முழக்கம் செய்தவாறு களிறுகள் இருந்தன, கூடாரத்திற்குள் இருந்த சேர நாட்டுப் படைத் தலேவனும் அவனது ஆருயிர்த் தோழனும் வெளியில் வந்து பார்த்தனர்.

அப்போது, "என்னரும் நண்பா! பார்த்தாயா, நம் நாட்டுக் களிறுகளே! என்னே வீரம்! காலேயிலெல்லாம் மாற்ருரை மண்டியிடச் செய்யும் வண்ணம் போரிட்டு அவர் களது மன்னர்தம் வெண்கொற்றக் குடையை கிழித் தெறிந்தது. முத்து மாலேகள் தொங்கவிடப்பட்ட குடை அசடு வழியக் கீழே விழுந்தது; முத்துக்கள் சிதறின.

யாரால்? அதோ...அந்தக் களிறின் வீரந்தான். ஆனுல், இன்னும் அதன் ஆத்திரம் தணிந்தபாடில்லே. இப்போது விண்ணிலே விளேயாடிவரும் பொன்னிலவையும் வெண் கொற்றக் குடையாகக் கருதி, அதைக் கிழித்தெறிய விண்ணே நோக்கி கையை நீட்டுகிறது. இஃதன்ருே வீரம்!' எனக் கூறுகிருன்.

6. வீறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற எறிந்த பரிசயத்தால்—தேருது
செங்கண்மாக் கோதை சினவெங் களியானே
திங்கள்மேல் நீட்டும்தன் கை.

(வி-ரை) சேர நாட்டில் வாழும் களிறுக்கு எத்தகைய ஆற்றல் இருந்தது என்பதற்கு இப்பாடலே தக்க சான்று. வெண்கொற்றக் குடைக்கும் வெண்ணிலவுக்கும் உள்ள வேற்றுமை காணுது கடுஞ் சீற்றத்தோடு தன் தும்பிக்கையைத் தூக்கி நிற்கும் வீரம்தான் விளக்கமாக விளங்குகிறது.

வீறுசால் - பெருமை மிக்க; தாமம் - மாலே; பாற - நொறுங்க.

* * *

## களக் காட்சி!

சேரனே எதிர்க்க வந்த சிற்றரசர்கள் எண்ணிக்கைதான் எவ்வளவு? அவர்கள் உயிர் துறந்து கிடக்கும் பிணக் கோலம் தான் என்ன! சேச்சே! பார்க்கவே அருவருப்பு! களம் முழுமையும் தனித் தனி அங்கங்கள்தானு அணி செய்ய வேண்டும்? சேரனே எதிர்த்து நின்று போராடி மார்பிலே அம்பு பட்டு மண்ணில் மறைந்த மாயம்தான் என்ன? உடலோடு உயிர் உலவும்போது என்னென்ன கனவு கண்டனரோ? அத்தனேயும் பாழ், பாழ்! வீழ்ந்த மன்னர்தம் விலாப் புரமெல்லாம் குருதியிலே மூழ்கி இருந்தது. வாளேந்தி நின்ற கைகள் பூமியின் தாளேந்திக்கொண்டு இருந்தன. உயிரோடு இருக்கும்போது அவ்வரசர்கள் எப்படி யெல்லாம் பேசி யிருப்பார்கள்? இப்போது—?

ஊம், அவ்வளவுதான்! சிற்றரசர் அணிந்திருந்த மரகதப் பூண் எங்கே? கையிலே மின்னிக் கொண்டிருந்த வயிரக் கடகம் எங்கே? எல்லாம் ஒழிந்தது! மாமிசம்தான் மிகுதி. அதற்கும் ஒரு கூட்டம் வந்தது. எந்தக் கூட்டம் ? குள்ளநரிக் கூட்டந் தான் மாமிச மணங் கண்டு ஒவ்வொன்ருய் வந்தது. வீழ்ந்து கிடக்கும் மன்னனின் மார்புமீது வந்து உட்கார்ந்து கொண்டு ஊனைத் தின்னத் தொடங்கியது. ஒரு நரிக்குட்டி தோளின் முன்னே உட்கார்ந்துகொண்டு முன் கையை இழுத்தது. அப்படி இழுக்கும் போது வயிரக் கடகம் அதன் தலையில் பட்டது. அவ்வளவுதான். ஓவெனக் கூச்சலிடத் தொடங் கியது. இப்படி ஒரு நரிக்குட்டி மட்டுமல்ல; பல நரிக்குட்டி கள்! எங்கே, போர்க்களத்திலே!

7. மரகதப்பூண் மன்னவர் தோள்வளை கீழா
வயிரக் கடகக்கை வாங்கித்—துயர் உழந்து
புண்ணுற்(று) அழைக்கும் குறுநறித்தே பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார் களம்.

(வி-ரை) களக் காட்சி என்ருலே கலங்கும் காட்சிதான்! நரிக்குட்டிகள் நடமாடும் இடுகாடுதான். அப்படித்தானே சேரனை எதிர்க்க வந்தவர்கள் வாழ்வையும் உயிரையும் பறி கொடுத்துப் பெரும் பயணம் நடத்த முனைந்தார்கள் ? ஏன்? திரை செலுத்த மறுத்து, சேரனை வெறுத்ததால்! நரிக் குட்டி கள் கடித்து இழுக்கவும், வயிரக் கடகம் மோதி அதன் தலை யில் புண் தோன்றவும், வலியைத் தாங்கும் சக்தியின்றி தாயை அழைத்துச் சேதி சொல்லவும்தானே முடிந்தது ? ஐயகோ! வரியால் வந்த வினை! பூழி நாட்டைப் பெற்ற புரவ லனை எதிர்த்த அவல நிலையால் ஏற்பட்ட விபத்து!

களம்-கணக்கற்ருேர் விழுந்து கிடக்கும் போர்க்களம்;

குறுநரித்தே-பற்பல நரிக்குட்டிகள்;

பூழியனைக் கண்ணுற்று-பூழி நாட்டையுடைய சேரனைப் பார்த்து.

* * *

## வாடும் நாடு

செம்மையான கண்களைச் சிவக்க வைத்த சிற்றரசர்களை வென்றான்; அவர்களைக் கொன்றான்; கொடி நாட்டினான். ஆனால் அவர்கள் கட்டியாண்ட நாடோ இடுகாட்டினும் கீழாக மாறியது. வீரம் செறிந்த பெருத்த யானைப் படைகளையும், பெருத்த தோள்களையும் கொண்ட கோதை சாதாரணமானவனல்ல; வில்லிலும் வேலிலும் பயிற்சி பெற்று வெற்றி பெற்றவன்! அவனைத் தோற்கடிக்கும் வல்லமை வேறு யாருக்கும் கிடையாது. அத்தகையவனுடைய கொடுஞ் சீற்றத்திற்கு ஆளாகிப் பாழாகினர். சிற்றரசர்கள் மட்டுமா அப்படி? இல்லை...இல்லை! அவர்கள் ஆண்டு வந்த நாடுகளுந் தான் சீரழிந்து போயிற்று. பூஞ்சோலை புழுதி மேடாகியது; வளமான நாடு சில காலத்திற்குப் பிறகு வறண்ட மணற் பாங்காக மாறியது! இந்தக் கொடுமையான காட்சியைத் தான் புலவர் கண்டார்; கண்ணீர் பொழிந்தார்; கோதையைக் கண்டார். கண்டதைக் கூறினார்.

''கோதைப் பெருமானே! கண்டவற்றைக் கூறுகிறேன் கேள். உன் வேல் போன்ற விழிகளால் மன்னர்கள் மட்டும் மடியவில்லை; அவர்கள் கட்டியாண்ட இனிய பொழில்களும் அழிந்தன. பூஞ்சோலையெல்லாம் நீரின்றி வாடி வறண்ட மணற்பாங்காக மாறியுள்ளது. எதனால்? மக்களில்லாததால்! அவர்களாகிலும் இருந்திருந்தால் செடிக்கு நீர் பாய்ச்சி இருப்பார்கள். என்ன செய்வது? திறை கட்ட மறுத்ததால் எல்லாமே பாழாகிவிட்டது. வெயிலின் கொடுமையால் செடியனைத்தும் கருகிப் போய்க் கிடக்கிறது. இப்போது முட்கள் நிறைந்த செடிகள்தான் வளர்ந்துள்ளன. அங்கு சிறு நரிக் கூட்டம்தான் வாழ்கிறது. அதுவும் இப்போது புசிக்க வழியின்றி அலைந்து திரிகின்றது. முட் செடியும் மறைந்து கொண்டு இருக்கிறது. முள்ளிச் செடியும் தீய்ந்து காய்ந்து மறைந்து விட்டது'' என்கிறார்.

8. கரிபரந்(து) எங்கும் கடுமுள்ளி பம்பி
நரிபரந்து நால்திசையுங் கூடி—எரிபரந்த

பைங்கண்மால் யானைப் பகையடுதோள்க்
கோதையைச்
செங்கண் சிவப்பித்தார் நாடு.

(வி-ரை) படையெடுத்துப் போர் புரிந்ததால் விளைந்த விளைவை புலவர் வெளிப்படுத்துகிறார், மக்கள் நடமாடிய நாட்டில் நச்சுமனங் கொண்ட குறுகிய நரிகள் ஓடுவதை வெளிப்படுத்தும் முறை போற்றக்கூடியதாகும். ஏரியும், ஆறும் வறண்டு போனதால் இனிய பொழில்கள் கருகிய தென்பதை எடுத்துக் கூறும் முறை இனிக்கும் வண்ணம் அமைத்து நமக்குக் காட்டுகின்றார்.

கடுமுள்ளி-கூர்மையான முள்ளையுடைய செடிகள்;

நரிபரந்து-நரிகள் அங்குமிங்குமாக ஓடியாடி;

பைங்கண்-களிப்பு மிகுந்த கண்கள் ; செங்கண்-கோபத்தால் சிவந்த கண்கள்.

* * *

## முசிறியும் முடிமன்னனும் !

கோதை-கொடையாளி! அமைதியின் தலைவன்! இமை காக்கும் கண்ணைப்போல் நாட்டைக் காக்கும் நற்பணியாளன்! அத்தகையவன் சீற்றம் கொள்ளச் செய்தால்—? உறங்கிக் கொண்டிருக்கும் சிங்கத்தின்மீது சிறுநரி பாய்ந்தால் என்னவாகும்? அப்படித்தான் அவன் சீற்றத்தால் அயல் நாடுகள் அழிந்தன. இடுகாடாகியது. அதனால் கோடைக் காலத்தில்கூட தீயைக் காணாத வேருடைய அறுகம்புல் இணைந்து வளர்ந்து நின்றதாலும் சூரை படர்ந்து அவ்வூர் மறைந்திருந்ததாலும் தைவேளைச் செடிகள் நெருக்கமோடு வளர்ந்து பூத்துக் குலுங்கியதாலும் அவ்வூர்கள் உண்டா என்ற சந்தேகக் கணைகள் கிளம்பின. இக்காட்சிகளைக் கண்ணுற்றவர் வேற்றூர்களிலே வாழ வேண்டியவர்களாயினர்.

தும்பைப் பூவால் தொடுக்கப்பட்ட மாலையைப் போருக்குப் போவதற்கு முன்பாகச் சூடுவர்; வெற்றி பெற்ற பிறகு

வாகைப் பூவால் தொடுத்த மாலையைஅணிந்து அகமகிழ்வர். மன்னனும் அப்படித்தான். வெறும் மாலையை அணிந்து மஞ்சத்திலே வீற்றிருந்த கொற்றவனைச் சீற்றங் கொள்ளச் செய்து உள்ள நாடுகளையும் அழிக்கச் செய்தனர். இப்படியும் சிலர் இருந்திருக்கிறார்கள். முசிறி துறைமுகத்தின் தலைவனான அவ்வேந்தனின் விழிகளை சிவப்பாக்கி, உள்ள பொறுமையையும் இழக்கச் செய்தனர். இலையொத்த வேல், மாற்றார் உடலைக் குத்திச் சுவை பார்த்தது.

9. வேரறுகை பம்பிச் சுரை படர்ந்து வேளை பூத்(து)
ஊரறிய லாகா கிடந்தனவே—போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நகையிலைவேல் காய்த்தினார் நாடு.

(வி - ரை) அடங்கியிருந்தவனை ஆவேசம் கொள்ளச்செய்தவர்களின் இழிசெயலை நயம்பட விளக்குகிறார். முசிறி என்னும் துறைமுகம் கோதையின் நிழலிலே நிற்பதாகும். இத்துறைமுகத்தின்கண்தான் வெளிநாட்டோர் வந்து வாணிபம் நடாத்தி மிளகையும், மயில் இறகையும் பெற்றுச் சென்றனர். அதற்குப் பதிலாகப் பொன்னையும் மணியையும் தந்து சென்றனர். அதற்குச் சான்றாக விளங்குவதுதான் வரலாறு!

பம்பி - பரந்து நிற்கும்; முகை - அரும்பு; நகையிலை - ஒளி பொருந்திய.

* * *

## தாயும் சேயும்

மாலை நேரம்!

குயிலின் கூட்டம்! மயிலின் ஆட்டம்! மேகத்தின் முழக்கம்! இத்தனைக்குமிடையே உலா வரும் கோதை! அழகுக்கு அரசன்! அணங்கிற்கும் அரசன்! பொதுவாகச் சொல்லப்போனால் அவன் எல்லாவற்றிற்குமே அரசன்! அன்று அவன் தேரிலேறி ஒவ்வொரு வீதியின் வழியாகவும்

வந்துகொண்டிருக்கிறான். பார்க்கின்ற அணங்குகள் பலர்! அவன் அவர்களைப் பார்த்தானாவென்றால் இல்லை. கூவுகின்ற குயிலோசை கொஞ்சமா? ஆடுகின்ற மயிலாட்டம் கொஞ்சமா? ஒரே பரவசம்! ஊரெல்லாம் ஒரே முழக்கம்.

மன்னர் வருகிறார் என்பது அனைவருக்கும் தெரியும். ஓர் அன்னைக்கும் தெளிவாக விளங்குகிறது. உடனே, வெளிப் புறக் கதவை மூடிவிட்டு, அவள் மட்டும் வெளியே வந்து நிற்கிறாள். எதற்காக மூடினாள் தெரியுமா? தன் மகள் அவனைப் பார்த்துவிடக் கூடாது என்ற ஒரே காரணத்தால்! ஏனென்றால் அவளுடைய மகள் பருவமெய்தி நிற்கும் பாவை; உதடோ, கோவை; உள்ளமோ எளிமை! ஆகவேதான் அவனைக் கண்டு மதிமயக்கங் கொள்ளப் போகிறாள் என்பதற்காக உள்ளே வைத்துப் பூட்டுப் போட்டு விடுகிறாள். 'அம்மா, அம்மா'வெனக் கதவைத் தட்டுகிறாள். அவளோ, 'உள்ளேயே இரும்மா. பிறகு திறக்கிறேன்!' என்று கூறி விட்டு வாசற்படியில் வந்து உட்கார்ந்து கொள்கிறாள்.

பாவையின் உள்ளம் ஊசலாடுகிறது. 'உலா வரும் மன்னரை நான் பார்க்கக் கூடாதா? தாய் பார்க்கத்தான் உரிமையா?' என்று எண்ணிக்கொண்டிருக்கையில் கதவைத் திறக்கிறாள். உள்ளே வருகிறாள், அக்கிழவி! உள்கதவைப் பூட்டிவிட்டுப் பின்பக்கம் செல்கிறாள். அவள் சென்றதுதான் தாமதம்! அவசர அவசரமாக வந்து கதவைத் திறந்து உலா வரும் கோதையை உற்றுப் பார்க்கிறாள். உள்ளே சென் றிருந்த அவளது அன்னை, மறுமுறையும் வந்து கதவை தாளிட்டுச் செல்கிறாள். இப்படிப் பல முறை! அதனால் இரும்புக்குமிழ் ஆடுகிறது. கதவின் குடுமி திறக்கத் திறக்கத் தேய்கிறது.

வண்டு மொய்க்கும் வண்ணமலர் மாலையைச் சூடிவரும் கோதை, அவள் வீட்டுக்கு அருகாமையில் வருகிறான். காதற் கணை வீசுகிறாள். அது, அவன் உள்ளத்தைத் தைத்தால் தானே! பேசாமல் போய்விடுகிறான். அவள் உள்ளம் பேசா மல் இருந்துவிட்டதாவென்றால் அதுதானில்லை. அல்ல

ஆற்றது. அவல நிலையைப் பரிசாகப் பெற்ருள். இதற்குத் தான் அவளது அன்னை கதவை மூடினுள். பார்க்கப் பார்க்க இனிமையுடையதென நினைத்துத்தான் கதவைத் திறந்து கோதையைக் கண்டாள். அவள் கண்டதுபோல் அவனும் கண்டிருந்தால் பரவாயில்லை......அதுதான் இல்லையே! என்ன செய்ய?

10. தாயர் அடைப்ப மகளிர் திறந்திட
தேயத் திரிந்த குடுமியவே — ஆய்மலர்
வண்டுலா அம் கண்ணி வயமான்தேர்க் கோதையை
கண்டுலா அம் வீதிக் கதவு

(வி - ரை) காணவேண்டும் என்ற ஆவல் எழுந்தால் அதை அடக்கும் வல்லமை யாருக்குத்தான் உண்டு? மனம் என்பதுதான் குரங்காயிற்றே! அவளும் அப்படித்தான் அலைந்தாள். காதல் வேகம், சோகத்தில் கொண்டு வந்து நிறுத்தியது. என்ன செய்வாள்? எல்லாம் காதல் செயல்! அந்த வீதி முழுமையும் இதே கதிதான்.

* * *

## இரண்டும் ஒன்ருகுமா ?

ஓர் ஓரங்க நாடகம்! அந்த ஓரங்க நாடகத்தில்தான் எவ்வளவு புதுமை? எத்துணை இன்பம்! என்ருே வந்தானும் எழில் மிகுந்த சேரன். எதற்காக? பிறபெண்களைப் பார்க்கும் பொருட்டா? கிடையவே கிடையாது! நாட்டைக் காணவும், நாட்டிலுள்ள மக்களின் மனவியல்பை உணரவும் வந்தான். 'வந்தவன் மீது நான் காதல் கொண்டேன்!' என்று சொன்ஞல் என்ன பொருள்? எப்படியோ துணிந்து தன் தோழியைச் சேரனிடம் அவள் அனுப்பி வைத்தாள்.

அவள் சென்ருள்!

அரசனைக் கண்டாள்!

''மலையொத்த மார்புடைய மாமன்ன! வணங்காத தலைகளை வணங்க வைப்பதற்காக வரிசையாகக் களத்திற்கென

வேலை வடித்து வைத்திருக்கும் மாந்தை என்னும் ஊருக்கு உரிமையுடையவனே! எம் தலைவி நும்மீது காதல் கொண்டிருக்கிறாள். இதை நீ உணராதது ஏன்? வளையல்கள் அணிந்த அழகு மங்கையின் உடலையும் உள்ளத்தையும் கெடுப்பது நின் செயலுக்கு அழகாகுமோ? அப்பெண்ணைப் பெற்ற அன்னைமார்கள் நீவிர் செங்கோல் படைத்த செந்நெறியுடையவனல்லவெனத் தூற்றுகிறார்கள். இச்செயல், உனக்கு அழகாமோ? காதல் வயப்பட்ட காரணத்தால் எம் தலைவி உல்லாசமின்றி இருக்கிறாள். நல்லதா இது?

11. வரைபொரு நீள்மார்ப வட்கார் வணங்கும்
நிரைபொரு வேல்மாந்தைக் கோவே; —
நிரைவளையார்
தங்கோலம் வவ்வுதல் ஆமோ; அவர்தாய்மார்
செங்கோலன் அல்லன் என.

(வி - ரை) 'செங்கோலன் அல்லன்' என்ற வரியானது நீதிக்கு உட்பட்டவனல்ல எனத் தெளிவாகிறது. உண்மை தானா? அவள் காதல் கொண்டாள்; அவன் காதல் கொண்டு இருக்க வேண்டுமே! அதை எண்ணிப் பார்க்காமல் குற்றம் சொல்லி என்ன செய்வது?

நிரைவளையார் - வளையல்களை அணிந்துள்ள பெண்; வவ்வுதல் - பறித்துக் கொள்ளுதல்; வட்கார் வணங்கும் - பகையாளியையும் வணங்க வைக்கும் அளவிற்கு ஆற்றல் பெற்ற.

* * *

## பொன்னே பெரிது !

அல்லும் பகலும் அவனையே நினைத்து உருகினாள்; கண்ணீர் பெருகியது; உள்ளமோ காதல் வெள்ளத்தில் மூழ்கியது. அதன் விளைவாகப் பசலை பூத்தது; மாமை அழிந்தது. என்ன செய்வாள்? பரிதாபத்திற்குரியவள்! இவளை யார் காதலிக்கச் சொன்னது? இப்படி ஏன் வேதனைப்

படுவது? களத்திலே தாவிப் பாயும் குதிரை பூட்டப்பட்ட தேரணியோடு வீதி வலம் வரும்போது மாமையைக் கவர்ந்து சென்றான், மாமன்னன். அதற்கும் மேலான பொன்னிறத்தைப் பரிசாகத் தந்து சென்றான். இது, அவள் உள்ளத்திற்கு எங்கு தெரியப் போகிறது? ஆகவேதான் தன் நெஞ்சுக்குத் தானே உணர்த்துகிறாள்.

''ஏ, பாழும் நெஞ்சே! உணரும் ஆற்றல் உனக்கில்லையா? மாங்கொழுந்தையொத்த நிறம் சென்றுவிட்டதே என்று வருந்துகிறாயே! அதைவிட மேலான பொன்நிறம் பெற்றிருக்கிறாயே! அது தெரியவில்லையா? மாமையைக் காட்டிலும்பன்மடங்கு உயர்ந்ததாயிற்றே பொன்னிறம்! ஆகவே, வருந்தாதே!'' என, ஆறுதல் கூறித் தன்னைத்தானே தேற்றிக் கொள்கிறாள்.

12. வாமன்தேர்க் கோதையை மான்தேர்மேல் கண்டவர்
மாமையே அன்றோ இழப்பது—மாமையிற்
பன்னூறு கோடி பழுதோஎன் மேனியிற்
பொன்னூறி யன்ன பசப்பு

(வி - ரை) நெஞ்சுக்குச் சொல்லும் விந்தை; அவனைப் பழிக்கும் விந்தை! ஆகா! பெண்ணின் உள்ளந்தான் என்னே! மாமையைக் காட்டிலும் பொன்னிறம் உயர்ந்ததென்பதை விளக்கும் ஆற்றலென்ன ?

வாவுதல்-தாவுதலாகும் ; மாமை - மாந்தளிர் போன்ற நிறம் ; பழுதோ-பயனற்றதோ ?

* * *

ஊராரே கேளுங்கள்!

கோதையின் மீது காதல்! அவள் மட்டும் கொண்ட ஆவலுக்குப் பெயர் காதல்! ஆச்சரியமான செய்தி. எண்ணினாள் ; ஏங்கினாள் ; என்ன செய்வதெனப் புரியாது படுக்கையில் புரண்டாள்.

உடலும் உள்ளமும் ஒருசேரத் தளர்ந்தது. ஒருநாள்! துணிவு பெற்றுள். ஊரார் கேட்கும் வண்ணம் எதையோ பார்த்தபடி சொல்லத் தொடங்கினுள்.

"நீரும் நிழலும்போல உள்ள ஊராரே! என் குறைக்குச் சற்று செவி சாயுங்கள்! என் குறை பெரிது. களத்தைக் காணப் பெரு விருப்பங்கொள்ளும் மதயானையை யுடையவனும் பூழியென்னும் நாட்டிற்குத் தலைவனுமான கோதையின் மீது என் நெஞ்சம் தாவியது. ஆனுல், அதை மீட்டும் ஆற்றல் எனக்கில்லை. அதனுல் என் நெஞ்சம் நெருப்பாகி விட்டது. அந்நெருப்பைத் தாங்கிக்கொள்ளும் இதயம் எனக்கில்லை. அந்த நெருப்பு என் நெஞ்சைக் கொளுத்தி விடும்போல் தெரிகிறது. இதை மாற்றியமைக்க நீங்கள்தான் ஒரு வழி சொல்லவேண்டும். அப்போதுதான் என் உயிர் பிழைக்கும்" என வினவி நிற்கிருள்.

13. நீரும் நிழலும்போல் நீண்ட அருளுடைய
ஊரிரே! என்னை உயக்கொண்மின்—போரிற்(கு)
உழலுங் களியானைப் பூழியர்கோக் கோதைக்(கு)
அழலும் என் நெஞ்சம் கிடந்து
அழலும்-கொதிக்கும் நெஞ்சம்.

* * *

## ஆற்றலற்ற அன்னை!

ஒரு நாள் வந்தான்! கண்ணுல் கண்டாள்! காதல் கொண்டாள். அந்தக் காதல், இரவில் வெறியாக மாறும் என்று அவள் அப்போது உணரவில்லை. நடுநிசியில்தான் அறிந்துகொண்டாள். அலைபோல அலைந்தாள். தூக்கம் வரவில்லை. கோதை மாறனே தெரிந்தான். மாலையில் அவனை எந்தக் கோலத்தோடு கண்டாளோ அப்படியேதான் அந்த இரவிலும் கண்டாள். கலங்கினுள்.

மறுநாளும் வந்தான்! அன்றென்னவோ அவனைப் பார்க்க முடியாதவாறு கதவைத் தாளிட்டுக் காவல்

காத்தாள், அவளது பெற்ற அன்னை. அந்தக் காட்சி, கொடூரக் காட்சியாகவே அவளுக்குப் பட்டது. 'இத்தகைய கல்நெஞ்சங்கூட தாய்க்கு உண்டா?' என்று எண்ணியபடி ஏக்கமோடு உட்கார்ந்துகொண்டு இருந்தாள். தோழி வந்தாள். நடந்ததை ஒன்றுகூட விடாது சொல்ல முயன்றாள்.

"தோழி! கடலொத்த சேனையைத் தன்னகத்தே கொண்டுள்ள கோதை வந்தான். நேற்றுப் பார்த்தேன்; இன்றும் வந்தான். ஆனால், பார்க்க முடியாதபடி கதவை அடைத்துவிட்டாள், என் அன்னை! இந்நிகழ்ச்சி எனக்கு வியப்பாகவே தோன்றுகிறது. கதவை மூடிவிடுவதால் காதல் சிறகடித்துக்கொண்டு பறந்து போய்விடுமா? என் தாயின் பைத்தியக்காரத்தனத்தைக் கண்டு எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது! கதவைத் தாளிட்டுவிட்டால் மட்டும் காதல் இறந்துவிடுமா? கதவை மூடிவிடுவதாலேயே என் உள்ளக் காதலை, அந்தக் காவலனிடம் சொல்லி, ஒன்றுபடுத்திவைக்க நினைக்கும் பெண்களின் வாயையுமா மூடிவிடமுடியும்? ஆரவாரம் செய்யும் அணங்குகளையும் அடக்கிவிடுவாளா என்ன? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!" எனச் சோகத்தோடும் புன்னகையோடும் வெளிப்படுத்துகிறாள்.

14. கடல்தானைக் கோதையைக் காண்கொடாள் வீணில்
அடைத்தாள் தனிக்கதவம் அன்னை—அடைக்குமேல்
ஆயிழையாய் என்னை அவன்மேல் எடுத்துரைப்பார்
வாயும் அடைக்குமோ தான்!

(வி - ரை) காதல் என்ற ஒரு சொல் மனத்திலே ஆழமாகப் பதிந்துவிட்டால் எளிதில் விலகாது. அதைத்தான் இந்தப் பாடல் விளக்குகிறது. உண்மைக்காதல் பொய்த்துப் போகும் சுபாவமுடையதல்ல; உயிரைக் கொடுத்தாகிலும் காப்பாற்றும் தன்மை படைத்தது.

கடல்தானை - கடலையொத்த மறவர்கள்;
காண்கொடாள் - காணவே கூடாதென;
ஆயிழை - தோழியைக் குறிப்பிடுவது;

## கலங்க வைத்த கனவு!

குடத்தைத் தூக்கிக்கொண்டு சென்ருள், ஒரு கொடி இடையாள்! அழகு மயிலென ஒயிலாகச் சென்ருள். அவள் மட்டுமா? அவளோடு சில தோழிகளும்தான்! வழி நெடுக சில கட்டுக் கதைகள். அப்படிச் சொல்லிக்கொண்டு வரும் போது இயற்கைக் காட்சிகளைக் கண்டு இன்புற்று வந்த தலைவி, ''தோழி! இவ்வளவு இயற்கையெழிலோடு விளங்கும் புன்னையும் தென்னையும் எவருக்குச் சொந்தம்?'' என்று கேட்கிருள்.

அதற்குத் தோழி, '' தலைவி! இது தெரியாதா உனக்கு? சேரனைச் சேர்ந்ததுதான். இதோடு மட்டுமல்ல! சுரபுன்னை மலர்களும் ஏராளம்! மணம் பெற்ற மன்னன்! அவன் புகழ், உலகப் புகழ்!'' என்று சொல்லி வருகையில் தேரிலேறி வரும் சேரனைக் கண்டு வெட்கமுற்றுக் குடத்திலே நீரை முகர்ந்து விரைவாக அனைவரும் வீடு சேருகின்றனர். அவள் மட்டும் அவனையே உற்றுப் பார்க்கிருள். 'ஆகா! என்ன அழகு! என்ன பொலிவு என்றவாறு வீடு வந்தடைகிருள்.

அவ்வளவுதான்! அன்றிரவு முழுமையும் அவனைப் பற்றியே நினைப்பு, எப்படியோ தூக்கம் வந்தது. அதோடு கனவும் உடன் சேர்ந்து வந்தது. அந்தக் கனவிலே காவலன் மெல்ல வந்தான். அவளுடைய மெல்லிய ஆடையைச் சற்று விலக்கினன்...! சொல்லவா வேண்டும். அவளுக்கு அப்படிச் செய்வது இன்பமாயிற்றே! அப்படியே இடையைத் தொட்டான். துடிதுடித்தபடி எழுந்தாள். கனவு கலைந்தது; நினைவு வந்தது. அவ்வளவுதான்! அன்று முழுமையும் தூக்கம் வரவில்லை. அது எங்கேயோ ஓடி ஒளிந்தது. இந்தக் கனவை, அவள் யாரிடமும் சொல்லவில்லை. சிலநாள் கழிந்தது.

தோழிகள் வந்தனர். 'அன்றைய நாள் எப்படி இருந்தது?' என்று வினவுகின்றனர். 'கனவிலே கண்ட காட்சி இவர்களுக்கு எப்படித் தெரிந்தது?' என்று எண்ணிய படி அவர்களின் முகத்தைப் பார்க்கிருள்.

15. புன்னுகச் சோலை புனல்தெங்கு சூழ்மாந்தை
நல்நாகம் நின்றலரும் நல்நாடன்—என்ஆகம்
கங்குல் ஒருநாள் கனவினுள் தைவந்தான்
என்கொல் இவர் அறிந்த ஆறு!

(வி - ரை) புன்னையும் தென்னையும் காண மாந்தை நகரத்திற்கு வந்தான் மன்னன். அவனைக் கண்டு காதலித்தாள். அந்த நினைவு கனவாகியது. அதை அவள் தோழிகள் எப்படி அறிந்துகொண்டார்கள் என்பது அவளுடைய கேள்வி. நமக்கோ புலவரே காட்டுகிருர். அகத்தின் அழகு முகம்தானே! அந்த அடிப்படையில்தான் அவளது தோழிகள் அறிந்தனர். எண்ணம் இருக்கிறதே, அதற்குத் தான் எவ்வளவு ஆற்றல்? மனத்தைத் தூண்டிவிடும் நிலையை எங்ஙனம்தான் பெற்று இருக்கிறதோ தெரியவில்லை.

கங்குல்-இரவு; என்ஆகம்-என்னுடைய உடம்பு;

தைவந்தான்-தடவிக்கொடுத்தான்;

புன்னுகம்-புன்னைமரம்; மாந்தை-சேர நாட்டுப் பகுதியைச் சேர்ந்த நகரம்.

* * *

## மணமும்—குணமும்!

ஓடிப் பிடிக்கும் காதல்; தேடிப் பிடிக்கும் காதல் வாடிப் பிடிக்கும் காதல்—இப்படி எத்தனையோ ரகமுண்டு காதற் பகுதியில். ஆனுல் இந்தப் பகுதி—இப்போது வரப் போகும் பகுதி இத்தனையும்விட ஒரு மடங்கு மேலானதென்றே சொல்லவேண்டும்.

கோதி முடித்த கூந்தலில் நறுமணங் கமழும் நல்ல பூவைத் தலையில் சூடிக்கொண்டாள். இரத்தினக் கற்களால் பதிக்கப்பட்ட பொன்னுபரணத்தை அணிந்து கொண்டாள். ‘ஆ...அதோ வந்து விட்டது; அருகே வந்து விட்டது’ என்று பரபரப்போடு ஓடினுள். எதுவரையில்? அதுதான் முக்கியம். வாயிலுக்கு அருகாமையில் போனுள். வெளியே

தலையை நீட்டிக்கூடப் பார்க்கவில்லை. அங்கேயே நின்று கதவை மூடிவிட்டுப் பேசாமல் . திரும்பி வந்து விடுகிருள். எதனுல் வெட்கத்தால் பீடிக்கப்பட்ட காரணத்தால்! திரும்பவும் முன்னே சென்ருள்; நாணத்தால் திரும்பவும் உள்ளே வந்தாள்.

மனம் கிளப்பிவிட்ட வேட்கையால் முன்னே சென்று அவனைக் காணவேண்டுமென விருப்பப்பட்டாள். குண நலனில் ஒன்ருன நாணமோ, அவளுடைய கையைப் பிடித்துப் பின்னே தள்ளியது. என்ன செய்வது! பருவக் கோளாறு என்பதா? உருவமில்லா உலகத்தின் இயல்பெனச் சொல்லித் தப்பித்துக் கொள்வதா? அவளுக்கு, அவ்வேளையில் ஒன்றுமே புரியவில்லை.

நல்ல முறையில் வாழ்ந்த ஒரு குடும்பத் தலைவன் வறுமையால் வருந்தி பணக்காரரை நாடிச் செல்லும்போது சற்றுத் துணிவோடு செல்லுவான். ஆனல், அந்தப் பணக்கார மாளிகைக்கு அருகாமையில் வந்தவுடன் ஏதோ ஓர் அச்சமும் வெட்கமும் புடை சூழ்ந்து கொள்ளத் திரும்பி விடுவான். பிறகு தன்னைத் தானே தேற்றிக்கொண்டு முன்னே செல்வான். அதுபோலத்தான் அவள் நிலையும் இருந்தது.

அவளுடைய உள்ளங் கவர் கள்வனுக விளங்கினுன் கோதை. ஒரே ஒருநாள் அழகு மணியால் பதிக்கப்பட்ட தங்கப்பூண் மார்பிலே மகிழ்வோடு உலவவும், பனம்பூமாலை புரளவும் குதிரைமீது ஏறி நகர்வலம் வந்தான்! அந்தக் காட்சியைத்தான் அவள் கண்டாள்.

அவள் இரும்பானுள்!

அவன் காந்தமானுன்!—ஒன்றையொன்று பற்றி நின்றது; பார்க்கப் பார்க்கப் பரவசமாக இருந்தது, அந்தப் பாவைக்கு!

16. ஆய்மணிப் பைம்பூண் அலங்குதார்க் கோதையைக்
காணிய சென்று கதவடைத்தேன்-நாணிப்
பெருஞ்செல்வர் இல்லத்து நல்கூர்ந்தார் போல
வரும்செல்லும் பேரும்என் நெஞ்சு

(வி-ரை) மனம் நினைத்தது; குணம் தடுத்தது. இதற்கிடையே அவள் ஊடாட வேண்டியவளானாள். அவளுக்கு எவ்வளவு ஆர்வம் இருந்ததோ அதே ஆர்வம் நாணத்திற்கும் இருந்தது. ஆகவேதான் அவள் அல்லலுற்றாள். கொல்லும் மனத்தோடு வீட்டிலே சோர்வு நடை போட்டாள். காதல் வியாதி! மருந்தால் குணப்படுத்த முடியாததொன்று!

ஆய்மணி-தேர்ந்தெடுக்கப்பட்ட மணிகள்;

காணிய-காணவேண்டுமென வேட்கையுற்று;

நல்கூர்ந்தார்-வறுமையால் வாடிக்கிடப்போர்;

* * *

## மனப்பெண்!

இரவு எட்டு மணி இருக்கும். நல்ல இருட்டு. அதோடு கொடுமையான பனி! தெருவிளக்கை மறைக்கும் அளவிலே பனியானது புடைசூழ்ந்து கொண்டிருந்தது. கோதையின் மீது காதல் கொண்டிருந்த அணங்கு உணவருந்தாமல் பேசாமல் படுக்கையில் வந்து படுத்தாள். உறக்கம் மட்டும் வரவில்லை. விழியைத் திறந்த வண்ணம் எதை எதையோ எண்ணி எண்ணித் தன்னை மறந்து இருந்தாள். அவளாலும் குளிர் தாங்க முடியவில்லை. அதே வேளையில், அங்கு அவள் தோழி வருகிறாள்.

''தோழி! எனக்குள்ள குறையை எப்படி எடுத்துச் சொல்லுவேன்? தேர்ந்தெடுத்த மணியோடு பைம்பூணும் அணிசெய்ய நகர்வலம் வந்தான், நாடு காக்கும் நல்லவன்! வெட்கத்தை விட்டுச் சொல்கிறேன். அவன் மீது காதல் கொண்டேன். அதைத் தெரிவிப்பதற்காக என் மனத்தை தூதாக அனுப்பியுள்ளேன். நேரமோ அதிகமாகிவிட்டது. ஆனால், அந்த மனப்பெண்தான் இன்னும் வரவில்லை. சென்ற இடத்தில் யாரேனும் தடுத்து நிறுத்தி இருப்பார்களா? அப்படித் தடுத்து நிறுத்தி இருந்தால் கோட்டை வாயிலின் வெளியேதானே நின்றிருக்க வேண்டும். அப்போது பனி

பெய்யுமே! உள்ளறையில் இருக்கின்ற எனக்கே ஒரு போர்வை தேவைப்படுகிற தென்றால் அதன் விளைவு? ஐயகோ! வேற்று நாட்டவர்மீது சீற்றங் கொண்டது போல் தோன்றும் ஒளிபடைத்த வேலையுடைய வேலனைக் காணும் பொருட்டுச் சென்ற மனப்பெண், பனியின் துயரால் தன் கையையே போர்வையாக்கிக் கொண்டிருக்குமா? அந்தோ, நினைத்தாலே நெஞ்சம் நெகிழ்கிறது தோழி. பனியாலே ஆட்டங் கொடுக்கும் பற்களை, பவனிவந்த பாவலனுக்குப் பறையறைந்தாற் போல் காட்டியிருக்குமா? இல்லையென்றால் அவன் எப்போது வருவது; இவள் எப்போது இங்கே திரும்புவது" என்கிறாள்.

17. கடும்பனித் திங்கள்தன் கைபோர்வை யாக
நெடுங்கடை நின்றதுகொல் தோழி-நெடுஞ்சினவேல்
ஆய்மணிப் பைம்பூண் அலங்குதார்க் கோதையைக்
காணிய சென்றஎன் நெஞ்சு.

(வி-ரை) பனியாலே வாடும் பாவை; துணிவின்றி நிற்கின்ற மனப்பெண்; இவ்விரண்டையும் தலைவியின் வாயிலாகக் கேட்டுக் கொண்டிருக்கும் தோழி. 'கைபோர்வையாக' என்ற வரியை நோக்கும்போது அதன் இனிமைதான் என்ன!

கடும்பனித் திங்கள்-பனிப்பெருக்கம் நிறைந்த மார்கழித் திங்கள்.

* * *

## வெறி தணிந்தால்!

வெறியினும் மேலானது ஒன்றுமில்லை; அதைவிடக் கீழானது வேறில்லை. வெறி என்றாலே எவராலும் அடக்க முடியாத ஒன்று. அதுவும் காதல் வெறி என்றால்?

சொல்லவா வேண்டும்? என்றோ ஒருநாள் சேரனைக் கண்டாளாம்! கண்டு காதல் கொண்டாளாம்! அதற்காகக் கண்டபடியெல்லாம் பேசுவதா? அரசனாயிற்றே என்ற எண்ணமாவது வரவேண்டாமா? அதுதானில்லை.

"குடகு நாட்டுக் கொற்றவனும்! வஞ்சிக் கோமான் என்ற பெரியதொரு பெயர்: இருக்கலாமா, இந்தப் பெயர்?' என் உள்ளத்தை நோகவைப்பதற்கென்றே இந்த வேடம் பூண்டு வருகிறுன் போல் இருக்கிறது!" என்று கண்டபடி தோழியர்கள் மத்தியில் குறைகூறிக் கொண்டிருக்கிருள்.

எதிர்பாராதவிதமாக அவனும் வந்து கொண்டிருந்தான். வளையல் கலகலக்க ஒரே கூப்பாடு போட்டுக் கொண்டிருந்த அப்பொற்கொடியாள் அவனைக் கண்டு தவயோகியாளுள். கோபம் பறந்தது; கனிவு பிறந்தது! அமைதி நிலவியது; ஆரவாரம் அடங்கியது. இல்லாதபோது சொல்லத் தகாத சொற்களையெல்லாம் சொல்லிச் சொல்லி சீற்றங் கொண்டாள். அவனைப் பார்த்தாளோ இல்லையோ, அந்தக் கோபம், இருக்குமிடம் தெரியாமல் மறைந்தது. வெறி உண்டா?

கிடையாது! பழையபடி அவனைப் பற்றிப் புகழ்ந்தேத்தத் தொடங்கினுள். எந்த வாயிலிருந்து வன்சொற்கள் வெளி வந்ததோ அதே வாயிலிருந்துதான் அவனைப்பற்றிய இன் சொற்கள் வெளிவந்தது. உணர்ச்சிக்கு உருவம் ஏது? உள்ளத்திற்குத்தான் உறுதியான நம்பிக்கை ஏது? அதனுல் தான் அப்படிப் பேசினுளோ என்னவோ? எப்படியோ கண்டவுடன் காதல் கசிந்தது; கண்ணீர் மல்கியது.

18. வருக குடநாடன் வஞ்சிக்கோ மான்என்(று)
அருகலர் எல்லாம் அறிய—ஒருகலாம்
உண்டாய் இருக்கஅவ் ஒண்தொடியாள் மற்றவனைக்
கண்டாள்; ஒழிந்தாள் கலாம்!

* * *

## நலம் கவர்ந்த கள்வன்!

ஊரெல்லாம் ஒரே பேச்சு! என்ன பேச்சு அது? 'என்னை அழித்துவிட்டான்; என்னை ஒழித்து விட்டான்!'—இதுதானு வழி முழுமையும் கேட்க வேண்டும். பெண்களே பொல்லாதவர்களா? ஆண்களைத் திட்டுவதற்கென்றே பிறந்த பிறப்பா? சேச்சே!

பேசாமல் போய்க்கொண்டிருப்பவனை, வலிய உற்றுப் பார்த்துக் காதல் கொண்டு விட்டால் அதற்கு அவன் என்ன செய்யமுடியும்? இதை உணரவேண்டாமா? இப்படிப் பேசிக் கொண்டிருப்பது அவன் செவிக்கு எட்டினுல் இவர்கள் கதி என்னவாகும்? களம் கண்டவேல், இந்தக் கன்னியரை யும் காணவேண்டுமா? அல்லது வேலினும் கொடிய விஷக் கண்கள் எங்களுக்கு உண்டு என்பதைச் சொல்லாமல் சொல் கிருர்களா?

என்னவோ, தொலேயட்டும்! இவர்களுக்கு முன் னெருத்தி அவன்மீது பற்று வைத்திருந்தாள். அதனுலேயே அவள் உடம்பு மெலிவு பெற்றது. முகம் சுருங்கியது. அவள் ஒருநாள் முக்கிய காரணமாகத் தெருவழியாகப் போய்க் கொண்டிருக்கிருள். அந்தந்தப் பெண் படபடவெனப் பேசு வது காதில் விழுகின்றது. எல்லாம் அந்த ஆணழகனைப் பற்றித்தான்! அவர்கள் உடம்பும் தன் உடம்புபோல் மெலிந்து காணப்படுவதைப் பார்க்கிருள். என்னே இக் கூற்று? ஒருவன் மீது இத்தனே பேருமா காதல் கொள்வது? இவர்களனேவரையுமா காதலிக்கிருன்?

இல்லேயே! அன்னவன் யார்மீது காதல் கொண்டானே? ஆனுல், 'நலமழிக்க வந்த கள்வன்!' என்று, அனைவரும் கூறு வதை அவள் கேட்டாள். அதை, அவள் தன் தோழியிடம் சொன்னுள்.

19. இவன்என் நலங்கவர்ந்த கள்வன் இவன் எனது
நெஞ்சம் நிறையழித்த கள்வன் என்(று)—
அஞ்சொலாய்
செல்லும் நெறியெலாம் சேரலர்கோக் கோதைக்குச்
சொல்லும் பழியோ பெரிது.

(வி - ரை) காதல் கொண்ட காரிகைக்குத்தான் எவ் வளவு கலக்கம்! ஊராரெல்லாம் உண்மை அறியாது பேசு வதால் அவள் உள்ளந்தான் என்ன பாடுபடும்? 'என் காதலனைக் குறைகூற நீங்கள் யார்?' என்று கேட்டிருப்பாள். ஆனுல், அந்த அளவிற்கு அவள் உள்ளம் இன்னும் தெளிவு பெறவில்லேயே!

நெஞ்சம் நிறையழித்த - உள்ளத்தை அலையாக்கிவைத்த; யழி - பழித்துக் கூறும் சொல்; நிறை - ஓரிடத்தில் மனத்தை நிலைபெற வைக்கும் தன்மை.

* * *

## உணர்வில்லா உள்ளம்!

சேரநாடு முழுமையுமே ஒரே புலம்பல்! எல்லாம் இளம் பெண்கள்! யார் முகத்தைப் பார்த்தாலும் சோர்வின் பிரதி பிம்பம்! காதலித்த காரணத்தால் கைமேல் கிடைத்த பலன். வேண்டும்! இன்னமும் வேண்டும். இவர்களை யார் காதலிக்கச் சொன்னது? அதனுல் ஏற்படுகின்ற விபரீதந் தான் எவ்வளவு?

பாருங்களேன், இந்த அநியாயத்தை! தன் மகள் உண்ண வும் உண்ணுது, உறங்கவும் உறங்காது, சோர்வோடு இருப் பதைப் பார்த்து வேறு வகையாக நினைத்துக் கொண்டாள். அதனுல் தம் மகளுக்கு வெறியாட்டுவிக்க எல்லா ஏற்பாடு களும் செய்து முடித்தாள்.

அதிகாலை. ஒரு மரம்; அந்த மரத்தின்கீழ் சாணம் போட்டு மெழுகிச் சுத்தப்படுத்தினுள். வெள்ளாட்டு இரத்தத்தை அங்கு தெளித்தாள். மாங்குழையோடு அம் மரத்தின்கீழ் ஒரு குடத்தை அமர்த்தினுள். இவ்வளவும் எதற் கென்று கருதுகிறீர்கள்? அதுதான் வேடிக்கை! மகளுக்குப் பேய் பிடித்திருக்கிறது என்பதற்காகச் செய்யும் சோகச் சடங்கு! தேவையா? ஆனுல், அவள் தாய் அதைச் செய்யத் தொடங்கினுள். இதை, அவள் பார்த்தாள். எங்கிருந்து? வீட்டிற்குள் இருந்தவண்ணமே! 'நான் வில்லவனைக் காதலிக் கிறேன். அதனுல் ஏற்பட்ட கோளாறு!' என்று ஒரு நீண்ட வரியைச் சொல்லியிருந்தால் அவள் இந்தப் பிரச்னையில் ஈடு படத் தேவையில்லை. அப்படிச் சொல்லத் துணிவு ஏது? அத னுல்தான் சொல்லாமல் இருந்தாள். அதுசமயம் அங்கு தோழி வந்தாள். "என்னடியம்மா! ஒரே அமர்க்களமாக இருக்கிறது?" என்று கேட்கிருள்.

"அதையேன் கேட்கிறாய்? என் தாய் இந்தக் காலத்தில் இருக்க வேண்டியவளல்ல. பாரேன்! ஒரே வெறியாட்டம் எதற்காக என்று மட்டும் கேட்காதே! எல்லாம்எனக்காக! எனக்கென்னவோ பேய் பிடித்திருப்பதாகக் கருதி, அதற் காவே இதைச் செய்கிறாள். பகைவரை வென்று, வாகை மாலை சூடி, களத்திலேயுள்ள கருப்பொருள்களுக்கு உரிமை உடையவனாக மாறி இருக்கும் மாறன்மீது நான் கொண்ட காதலால் ஏற்பட்ட நோய், அவன் வந்தால்தான் நீங்குமே யொழிய என் அன்னை செய்யும் பேதைமையால் நீங்காது. நீராட்டி நீங்கென்றால் நீங்கும் நோயா என் நோய்! வெற் புடைய வேலவன் என் தோளினைத் தூக்கினாலல்லவோ இந் நோய் போகும்?" என்கிறாள், அவள் தலைவி.

20. காராட்(டு) உதிரம்தூஉய் அன்னை களன் இழைத்து
நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ—போராட்டு
வென்று களங்கொண்ட வெஞ்சினவேல்
கோதைக்(கு)என்
நெஞ்சு களங்கொண்ட நோய் !

(வி - ரை) ஒருவர் உள்ளத்தில் இருப்பது மற்றொருவர் உள்ளத்திற்குத் தெரிவதில்லை. அப்படித்தான் அவள் மகள் மனத்தில் உள்ள உருவத்தைப் புரிந்துகொள்ள முடியாமல் திணறினாள். ஆகவேதான் வெள்ளாட்டு உதிரமும் மாங் கொழுந்தும் தேவைப்பட்டது, அவளுக்கு! அவள் பெற்ற மகளுக்கோ மன்னன் தேவைப்பட்டான். என்ன செய்வது? அந்த வீட்டிலே இந்தக் கோளாறு.

காராட்டு உதிரம் - வெள்ளாட்டின் குருதி;

போராட்டு - களத்திலே;

* * *

மனம் அறியா மன்னன் !

மாந்தை நகரத்து மன்னன்! சந்தன மரத்துக்குச் சொந்தமுடையவன்! கோதைக்கு உறவினன். அத்தகைய

சிறப்பிற்குரியவன் போய்க்கொண்டிருக்கிறான். போகும் வழி யில் ஒருத்தி எதிர்ப்படுகிறாள். அவனும் பார்க்கிறான்; அவளும் பார்க்கிறாள். இருவர் கண்களும் ஒன்றோடொன்று உராய்கின்றன. அந்தப் பார்வையில் என்ன கவர்ச்சி. ஆகா! அப்படியிருந்தும் அவன் மட்டும் வந்த வழியே போய்விடு கிறான். அவளோ, அப்படிப் போக முடியாதவாறு சந்தித்த இடத்திலேயே சற்று நின்று எதை எதையோ ஆழமாகச் சிந்திக்கிறாள். அதன் பிறகு அவ்விடத்தை விட்டு வீட்டுக்கு வருகிறாள். தோழியைக் காணுகிறாள்.

"தோழி! இன்று நீ என்னோடு வராதது பெருங் குறையே! வந்திருப்பாயானால் மாந்தை நகரத்து மாங்கடுங் கோவின் மனத்தை அறிந்திருப்பாய். இன்று அவன் கண் டான். நானும்தான்! பிறரைக் குற்றவாளியெனக் கூறிவிட்டு நான் குற்றமற்றவளெனக் கூறும் கொடியவளல்ல!" என்று கூறிக்கொண்டே இருக்கும் போது வெட்கம் குறுக்கிடுகிறது. பேச்சை மாற்றுகிறாள். "தோழி! இன்று உன்னைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பரவசமாக இருக்கிறது. அதோடு நீ அணிந்திருக்கும் திலகம் என் உள்ளத்தைத் திருப்புகிறது. திருநுதலா இது?" என்று சொல்கிறாள். குறிப்பால் உணரும் ஆற்றல் தோழிக்கு இயல்பாகவே அமைந்திருந்த காரணத் தால் எல்லாவற்றையும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்கிறாள். உடனே அவள், "உயர்ந்தவர்தம் உள்ளத்தை நம் உள்ளத்தோடு பொருத்திப் பார்க்கவேண்டுமானால் அவர் களுடைய இயல்பு அறிதல் வேண்டும்!" என்கிறாள்.

காதல் கண்ட காதலியானாள்!

மோதிவிட்ட கண்ணுக்கு முத்தங் கொடுக்க அவன் என்று வருவான் என்பது அவளது கோரிக்கை.

21. மல்லல் நீர் மாந்தையார் மாக்கடுங்கோக்(கு)
ஆயினும்
சொல்லவே வேண்டும் நமகுறை—நல்ல
திலகங் கிடந்த திருநுதலாய்; அஃதால்
உலகங் கிடந்த இயல்பு

(வி - ரை) கண்ணுக்குத்தான் எவ்வளவு வலிமை. அந்த வலிமையால் குடிகொண்ட பலவீனம்தான் என்ன ? காதல் என்றாலே இந்த இரண்டு குறையும் உண்டுபோல் இருக்கிறது.

* * *

மயக்கத்தில் மனம்!

மன்னன் வருகிறான். அவன் யார் என்று அறியா நங்கை. அன்று அறிந்தாள். அதற்குக்கூடச் சில விநாடிக ளாகின. நெஞ்சோடு பேசினாள், "ஏ, மனமே! இவன் யார் ? இந்திரனா? இல்லை, இல்லை! இருந்திருந்தால் இரண்டு கண்ணா மட்டுமா இருக்கும்? சிவனென நினைத்தால் புராணங்கூறும் பிறை நிலவு இருக்க வேண்டுமே! செவ்வேல் பொருந்திய திருமுருகனா! இல்லை, இல்லை. அவர்களைவிட உயர்ந்து காணப் படுகிறானே...ஓ...மாமன்னன் கோதை!" என்று நினைத்து ஒரு முடிவுக்கு வருகிறாள்.

22. இந்திரன் என்னின் இரண்டேகண் ஏறூர்ந்த
அந்தரத்தான் என்னிற் பிறையில்லை — அந்தரத்துக்
கோழியான் என்னின் முகன் ஒன்றே கோதையை
ஆழியான் என்றுணரப் பாற்று.

ஏர் ஊர்ந்த அந்தரத்தான் - காளையை வாகனமாகக் கொண்ட சிவபிரான்.

* * *

## 2. சோழன்

### திங்களும் திலகமும் !

வெண்கொற்றக் குடை! இதன் பெருமையை உரைக்க நினைத்தால் பெருகும். கடலைப்பற்றிப் பேச நினைத்தால் எவ்வளவும் பேசலாம். அதையே சற்றுக் குறுகிய அளவிலும் கூறி முடிக்கலாம். அது போலவேதான் அவன் புகழ் பற்றி நாம் சொல்லத் துணிவதும்! குடைக்குரிய காரணங்கள் பல. ஆனால், ஒன்று மட்டும் தெரிந்து கொள்வது அவசியமாகும். குளிர்ச்சியூட்டும் நிழலைப் போல் அவன் நாட்டைக் காக்க வேண்டும் என்பதற்காக ஏற்பட்ட குடைதான் அது. அவன் கீழ் அமைந்துள்ள மக்கள், எக்குறையுமின்றி நிழலைப்போல் குளிர்ந்து காணப்பட வேண்டும் என்பதின் விளக்கம்தான். அத்தகையகுடை எத்துணை ஆதரவோடு நிற்கிறதாம் தெரியுமா?

மந்திர மலையைக் காம்பாகவும், நீலவானம் முழுமையும் ஓலையாகவும், நிலவை நடு வட்டமாகவும் கொண்டு இருக்கிறது. அத்தகைய குளிர்ச்சியூட்டும் குடையைப்போல் அவன் ஆட்சி முறை இருந்தது.

23. மந்தரம் காம்பா மணிவிசும்(பு) ஓலையாத்
திங்கள் அதற்கோர் திலதமா—எங்கணும்
முற்றுநீர் வையம் முழுதும் நிழற்றுமே
கொற்றப்போர்க் கிள்ளி குடை.

(வி-ரை) கிள்ளியின் ஆட்சியைப் பற்றிச் சொல்லும் போது குடையையே உதாரணத்திற்கு எடுத்துக்கொண்டு மிக அழகுறப் புலவர் சொல்கிறார். தண்ணளியன் கிள்ளி என்பதற்கு இப்பாடலே போதுமான சான்று.

* * *

மங்கல ஒலி!

சோழ மன்னன் நாட்டில் நெற்களஞ்சியம்தான் ஏராளம்! அதோடு யானைக் கூட்டமும்தான் அதிகம்! சோழ நாடு என்றாலுமே சோறுடைத்து என்று ஒரு பொருள் வழங்கும். அவ்வளவு செழிப்பு மிகுந்த நாடு. விளைச்சலுக்கு குறைச்சலில்லை, அளவிலே வளர்ச்சியுள்ள சோழ நாடு.

வயலிலே அறுவடை செய்து, நெல்லைக் குவித்துக் காவல் காக்கும் காவலர்கள், அந்நெற்களஞ்சியத்தின் மீது நின்று கொண்டு, 'நாவலோஓ!' என்று ஆர்வத்தோடு பிறரைக் கூவி அழைப்பர். போர்க்களமறவர்களும் மன்னனுக்குப் பகையாளியாக விளங்குபவரோடு போர் செய்யும் பொருட்டு யானை மீது நின்று, தம் தோழர்களை, 'நாவலோஓ!' என அழைப்பர். இரண்டிற்கும் ஒரு சொல்லே! இரண்டிற்கும் வேற்றுமை யுண்டு. களம் காண அழைப்பதும், குவித்து விட்ட நெல்லைக் கண்டு களிப்போடு கூவுவதும், சோழநாட்டின் இயல்பாகும்.

24. காவல் உழவர் களத்(து)அகத்துப் போர்ஏறி
நாவலோஓ என்றிசைக்கும் நாளோதை—
காவலன்தன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தால் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு.

(வி-ரை) கிள்ளிக்கு வந்த புகழ் காவிரியால்தான். காவிரித்தாய் இல்லையென்றால் கிள்ளிவளவனுக்குப் புகழில்லை! அந்தச் செல்வச் செழிப்பு இருப்பதால்தான் சோழ நாட்டிற்கே ஒரு தனிச் சிறப்பு! குறியீட்டுச் சொல்லாக அமைந்ததுதான், 'நாவலோஓ' என்பது.

* * *

## காலையும்-மாலையும் !

உறையூர்க் கோமானுடைய நாட்டைப் பற்றிச் சொல்ல வரும் புலவர் பூக்களையே கொண்டு விளக்குகிறார். பூக்கள் நிறைந்த பூம்பொழில்! நறுமணங் கமழும் பெருமைமிக்க வளநாடு! அந்நாட்டில் மலர்கள் ஏராளம்! அம் மலர்களனைத்தும் கிள்ளியின் நகக்குறியால் களைந்து காணப்படுமாம்...... எங்கே ?

அங்காடிக் கடைகளிலே! சோலை ஓரங்களிலே! வீதி வழிகளிலே! அவ்வளவும் பூக்கள்! அத்தனையும் ஒவ்வொரு நிறம்! மணமும் அப்படித்தான்! மாலை வேளையில் பூத்தொடுத்து மாலையாக்கி விற்பவர்கள் அதிகம் பேர்! மிகுந்த பூக்கள் காலையில் காணப்படும்! அதை விற்க வரும்போது கிள்ளி! எறிந்தல்வண்ணப் பூக்கள் வான வில்லைப்போல் தோன்றுமாம் என்ன மாட்சி! எத்துணை விந்தை இத்துணைச் சிறப்போடு உறந்தை நகர் இருந்தது,

25. பாலை விலைபகர்வார் கிள்ளிக் களைந்தபூச்
சாலமிகுவதோர் தன்மைத்தாய்க்—காலையே
வில்பயில் வானகம் போலுமே வேல்வளவன்
பொற்பார் உறந்தை அகம்

(வி-ரை) பூக்களைக் கொண்டே உறந்தையை எடைபோட்டு நமக்கு எடுத்துக்கூறி இருக்கிறார். நகர் வளம் எத்தகையதென்று சொல்வதற்கு பூ மலிந்த பூக்காடெனக் கூறுவது, அதன் பெருமையை நன்கு உணர்வதற்கு ஏதுவாகிறது, இதிலிருந்து நகர் முழுமையும் ஒரே சோலையாகவும் காணத் தகுந்த காட்சிப் பொருள்கள் அடங்கி இருந்தன என்பதும் தெளிவாகிறது.

* * *

## புண்பட்ட புரவலன் !

சோழநாடு சிறியதல்ல; மிகப் பெரியது. பல நாடுகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கக்கூடியது. அத்தனைக்கும்

தலைவன் கிள்ளி-அவன்கீழ் அடங்கியுள்ள சிற்றரசர்கள் தொகை ஏராளம்! அவன் ஒரு நாளை குறிப்பிட்டு இருந்தான். அந்த நாளைக்குள் அனைவரும் கப்பம் கட்டியாக வேண்டும். இல்லையேல் தொல்லைதான். அச் சீற்றத்தைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலற்ற சிற்றரசர்கள் விரைவாக வந்து கப்பங்கட்டிக்கொண்டு இருந்தனர். அந்நெருக்கத்தில் கிள்ளியின் கால் புண்ணாகப் போனது.

மறுநாள் காலை. முன்னாள் கட்டாத சிற்றரசர்கள் சுமக்க முடியாத பொருளைக் கொண்டு வந்து கோட்டைக்கு வெளியே நிற்கின்றனர். அவர்களைக் கண்ட வாயிற் காவலன், "மன்னர்களே! இன்று திறைவாங்கும் அளவிற்கு மன்னர் இல்லை. நேற்றைய நாள் வாங்கிய வரியின் போது ஏற்பட்ட புண் இன்னும் மாறவில்லை. ஆகவேதான் இன்று வாங்க இருந்த திரை, நாளைக்கு வாங்க இருக்கிறார். ஆகவே இன்றுசென்று நாளை வாருங்கள்! எனச் சொல்லி அனுப்புகிறான்.

26. நின்றீமின் மன்னீர் நெருநல் திறைகொணர்ந்து
முன்தந்த மன்னர் முடிதாக்க—இன்றும்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி இலனே
பெருந்தண் உறந்தையார் கோ!

(வி-ரை) விழுந்தடித்துக்கொண்டு திறை கட்டிய காரணத்தால் கிள்ளியின் காலில் புண் ஏற்பட்டது. அது குறித்து நாளை வருமாறு பணித்தான். சிற்றரசர்களுக்கிருந்த அச்சம் ஒன்றுதான். 'குறிப்பிட்ட நாள் வந்துவிட்டதே! கட்டவில்லையானால் கடுஞ்சிறை ஏற்க வேண்டியதாகப் போய்விடுமே என்பதற்காகத்தான் அனைவரும் ஒருசேர வந்தனர். வந்தும் சிலர் பயனின்றித் திரும்பினர். என்ன செய்வது? ஒருவரா? இருவரா? உடனே வாங்கிக்கொள்ள! அப்படி இல்லையே ..

நின்று ஈமின்-சற்றுத் தாமதமாகவே வரியைக் கட்டுங்கள்; திருந்து அடி புண்ணாகி-செம்மை பொருந்திய காலில் புண் ஏற்பட்டு திறை-வரி.

* * *

யானையின் திறன் !

பெரிய மதிற் சுவர்கள்? அதற்கிடையே அழகான கோட்டை! அந்தக் கோட்டை வாயிலில் நீண்டதொரு இரும்புக் கதவு! இக்கதவிற்கு வெளிப்புறத்தில் ஈட்டிகளால் உருவாக்கப்பட்ட கதவு! இவ்வளவும் யாருடையது! ஒரு சிற்றரசனுக்குரியது. அவன் வீணாகச் சோழன் கிள்ளியைப் போருக்கு அழைத்தான். அவ்வளவுதான்! கிள்ளியென்ன சாதாரணமானவனா? படையோடு படைத் தலைவனையும் அனுப்பி வைத்திருந்தான்.

சென்ற அத்தனை பேரும் எதிரியின் மதிற்சுவரைச் சுற்றி வளைத்து நின்றனர். கிள்ளியின் களிறு ஓடோடி வந்தது; எதிரிகளைத் தேடிப் பிடித்துக் கொன்றது. வேல் போன்ற கதவுகளைச் சின்னாபின்னப் படுத்தியது. பகையோடு நிற்கும் மன்னன் வீரத்தில் வல்லவன். ஆனாலும்—? பாய்கின்ற வேகத்தில் மதிற்சுவரைக் குத்தி மேகத்தை முட்டும் அளவிலே தூக்கி நிறுத்தியது. என்னே, வீரம்! அந்தக் கதவும் தந்தத்தில் அகப்பட்டுக் கொண்டுவிட்டது. இவ்வேலை முடிந்தவுடன் பழையபடி சேனையுள்ள இடத்திற்கு மீண்டும் வந்தது. அதன் உருவமோ குளிர்ச்சி பொருந்திய கடலுக்கு இடையே தோன்றும் பாய்மரக் கலத்தை யொத்தது.

யானை—ஒரு மரக்கலம்; உயர்ந்த கை கூம்பு; மதிலோடு ஒன்றுபட்டு நின்ற கதவைப் போன்றது பாய்மரம்! மூன்றும் மூன்று விதம்! களத்திலே நின்று போராடும் பல காளையர்களைப் பற்றிக் கதை கதையாகப் படித்திருக்கிறோம். ஆனால் களிற்றைப் பற்றி—? இப்போது பார்த்து விடுகிறோமே! காளையரைக் காட்டிலும் களிறுக்குள்ள துடிதுடிப்பை!

27. அயில்கதவம் பாய்ந்துழக்கி ஆற்றல்சால் மன்னர்
எயில்கதவம் கோத்(து) எடுத்த கோட்டால்—
பனிக்கடலுள்
பாய்ந்தோய்ந்த நாவாய்போல் தோன்றுமே;
எங்கோமான்
காய்ச்சினவேல் கிள்ளி களிறு.

(வி-ரை) பெருத்த உடல் கொண்டது யானை ; சிறுத்த விழிகளைப் பெற்றது. ஆயினும் அயலவன் என்று அதற்கு அறிவித்து விட்டால் அவ்வளவுதான். வேறு வினையே வேண்டாம். எல்லாம் அதுவே செய்து முடித்துவிடும். இந்தப் பெருமை ஒன்றே போதுமே! கிள்ளிக்கு வேறு என்ன செல்வம் தேவை இருக்கிறது? மறவர் குடியிலே பிறந்த மாவீரர்களுக்குத் தேவையானது ஒன்றே யொன்று. அது தான் வீரம்! எவருக்கும் அஞ்சாத உள்ளத் திண்மை.

ஆற்றல் சால் மன்னர்-போர் புரியும் அளவிற்கு உரம் பெற்ற பகையரசர்; எயில் கதவம்-கோட்டையோடு ஒன்றிய வாசற்கதவு. கோத்தெடுத்த கோட்டால் - தந்தத்தின் வலிமையால் கதவை தூக்கி நிறுத்தியுள்ளதின் விளைவாக.

* * *

## யானைக்குள்ள வெட்கம்.

வெற்றி முரசம் கொட்டுவதற்கு முன்னே...! வேற்று நாட்டு அரசர்களைத் தாக்கச் சென்றோர், கணக்கற்றோர்! களமா அது? இரத்தக் குளம்! எலும்பும் தோலும் அணி செய்யும் இடுகாடு! கொடிகட்டி வாழ்ந்து கொக்கரித்த மன்னனின் சீற்றத்தை ஒடுக்க நாற்படையும் சென்றது. வாளோடு வாள்; வேலோடு வேல்!

போரும் முடிந்தது! கிள்ளிக்கு வெற்றி கிடைத்தது. செருகளம் சென்ற மறவர்கள் தம் தம் மனைவியரைக் காண விரைந்து வீடு சேர்ந்தனர். கிள்ளியும் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றான். ஆனால்—?

யானை மட்டும் பெண் யானையைக் காண வெட்கங் கொண்டு வெளிப்புறத்திலேயே நின்றுவிட்டது. எதனால்? மதிலை உடைக்கும் பொருட்டு மோதும்போது ஒரு தந்தம் உடைந்தது: அது மட்டுமா? மதிலை தன் காலால் மிதித்த வாறு கோட்டைக்குள் சென்று மன்னனை தன் உரம் பெற்ற காலால் குத்திக் கொல்லும்போது கால்நகமும் தேய்ந்தது. இதனால் தன் காதலியைக் காண வெட்கமுற்றது; வெளிப் புறத்தில் நின்றது, துக்கம் கொண்டது!

28. கொடிமதில் பாய்ந்திற்ற கோடும் அரசர்
முடிஇடறித் தேய்ந்த நகமும்—பிடிமுன்பு
பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே
கல்லார்தோள் கிள்ளி களிறு !

(வி-ரை) மனித வர்க்கத்திலேதான் காதலன் அடிபட்டு வந்தால், அந்தப் புண் மறையும் வரையில் மங்கையைக் காணமாட்டான். இது கண்கூடு. யானைக்குமா அப்படி ? இத்தனைக்கும் அது யாரிடமும் அடிபட்டு வரவில்லையே ! எதிர்பாராத வகையிலேதான் கொம்பு முறிந்தது ; நகம் தேய்ந்தது. அது குறித்து அவ்வளவாகக் கவலைப்படத் தேவையில்லை. ஆயினும், அதற்கென்னவோ பெருத்த வெட்கம் ஏற்பட்டிருந்தது. அதனாலேயே பெண் யானையின் முகத்தை அது காணவில்லை. இக்காட்சியைப் புலவர் எவ்வளவு நுணுக்கமாகத் தெளிவுபடுத்துகிறார் !

* * *

## நான்கே கால்கள் !

வெகுண்டெழுந்தான் வேந்தன் ! பொறி பறக்கும் கண்கள் ! புடை சூழ்ந்த படையோடு புறப்பட்ட கோலம் ! உறையிலிருந்து விடை பெற்ற வாள் ! இத்தனைக்குமிடையே கிள்ளி! அவன் களத்திலே துள்ளியாடும் வில்லவன் ! சொலல் வல்லன் ! சோர்வில்லாதவன் ! காவிரித்தாய் பெற்றெடுத்த பைந்தமிழ்ச் செல்வம் ! வளவனின் வழித் தோன்றல் ! கரிகாலனுக்கு இளையவன்! உரிமை முழக்கத்தை எட்டுத் திக்கும் கொட்டும் முரசம் முழங்கியது! ‘காஞ்சி எங்கே ? வளம்மிக்க தஞ்சை எங்கே ? எங்கே ?’ என்று போர் முரசம் அதிர்ந்தது. யானையின் முழக்கம் கேட்டது. வீரர்கள் திரும்பினர். யானை, கிள்ளியைப் பணிந்து, “எங்கள் தெய்வமே ! இதோ என் ஒருகால் காஞ்சியிலே பதிந்து விட்டது ; மற்றொரு கால் தஞ்சையிலே வைத்துவிட்டேன்! சிங்களவர் சிறுமதியடக்க—மங்களத் தமிழரின் வீரத்தை விளக்கும் வண்ணம் ஈழத்தின் மீது மூன்றாவது காலும் பதிந்து விட்டது. ஒரு கால்தான்

இப்போது பாக்கி. நான் உறையூர்க் கோமானின் உல்லாச வாசி என்பதைச் சுட்டிக் காட்டுவதற்காக" என்னும் முகத்தால் மன்னனை நோக்கி, கால்களைத் தூக்கியபடி நிற்கிறது-கிள்ளியானவன், அதைத் தட்டிக் கொடுத்துப் பெருமகிழ்வடைகிறான்.

29. கச்சி ஒருகால் மிதியா, ஒருகாலால்
தத்துநீர்த் தண்தஞ்சை தான்மிதியாப்—பிற்றையும்
ஈழம் ஒருகால் மிதியா வருமே,நம்
கோழியர்கோக் கிள்ளி களிறு.

(வி-ரை) கிள்ளி என்றாலுமே துள்ளி விளையாடும், ஒவ்வொரு பொருளும் உயிரும்! சென்றான்; வென்றான்; மீண்டு வந்தான்; வாகை மாலை சூடினான்—இதுதான் கிள்ளியைப் பற்றிப் புரட்டிப் பார்க்கும்போது வரலாறு சொல்லும் சுயசரிதை! யானைக்கே இந்த வீரம் என்றால் மறவரைப் பற்றித் தனியாக விளக்க வேண்டுமா என்ன?

கச்சி - காஞ்சி; ஈழம் - இலங்கை; களிறு - யானை.

* * *

## நெய் கண்ட விளக்கு!

'புலிக்குப் பிறந்தது பூனையாகுமோ?—இது பழமொழி. நம்மவர்கள் வாயில் அடிக்கடி புரண்டு வரும் ஒரு வரி! இந்த வரியில்தான் எவ்வளவு பெருமை; வீரம்!

சோழனுடைய மகனான செம்பியன் செருகளம் சென்றான்; மாற்றாரை வென்றான்; வீரப் புகழ் நிலைநாட்டினான்? எத்தனைக் களங்கள்! எவ்வளவு பேர் வீர மரணம் கண்டனர்! புறமுதுகு காட்டிப் புழுதியிலே சாய்ந்த தோள்கள் எத்தனை? இத்தனைக்கும் இறுதியிலே என்ன நடந்தது தெரியுமா?

கூடாரங்கள் கலைக்கப்படவில்லை; வீரவாள் உறைக்குள் போகவில்லை. நள்ளிரவு! புள்ளினங்கள் வெண்முகிலுக்கிடையே பறந்துகொண்டு இருந்தன. களம் இருண்டு கிடந்தது! வீரக்காளையர்கள் தம் தம் கூடாரத்திலே உறங்கிக் கொண்டிருந்தனர்.

அதுவேளை!

எங்கிருந்துதான் நரிகள் வந்தனவோ தெரியவில்லை. களம் முழுமையும் ஒரே ஓலம்! முடியோடு கூடிய மண்டை யோட்டை எடுத்து, மூளையை நெய்யாக்கி, கீழே விழுந் திருந்த குடலைத் திரியாக்கி, அந்த விளக்கொளியிலே பிணங் களைத் தின்னும் கொடுமைதான்! அவைகளுக்கு எத்தகைய களிப்பு! இதைஎடுத்துச் சொல்லும் புலவர்தம் உள்ளத்தில் தான் எவ்வளவு சோகம்! சேச்சே!

30 முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாகத்
தடித்த குடர்திரியா மாட்டி—எடுத்தெடுத்துப்
பேஎய் விளக்கயரும் பெற்றித்தே; செம்பியன்
சேஎய் பொருத களம்.

(வி - ரை) புலவரின் புலம்பலைக் கேட்கும்போது நம் உள் ளத்திலும் ஏதோ ஒரு சோகம் கப்பிக்கொள்வது உண்மை. ஏன்? மரணமடைந்தவரின் எண்ணிக்கையைப் பற்றி எண் ணும்போது. இப்பேர்ப்பட்ட கவிதையை ஏன்தான் புனைந் தாரோ? நம்மை எல்லாம் அழவைப்பதற்கா? அல்லது வீரம் குன்றிப்போயுள்ள நேரத்தில் உணர்ச்சியை ஊட்டவா? எப்படியானாலும் இந்த வெண்பாவில் வீரமும் சோகமும் ஒரு சேரக் கலந்து உறவாடுகிறது.

முடித்தலை வெள்ளோட்டு - முடியோடு பொருந்திய மண்டை ஓடு.

* * *

கூகையால் உறக்கம்!

செம்பியன் என்ற பெயருடையவன் இளமை மாருத மாறன்; நல்ல வீரன்! அவனுக்குச் சீற்றம் பிறந்தால் நாடு இடுகாடாய் மாறுவதில் என்ன வியப்பு இருக்கிறது! படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும் புலியின்மீது சுண்டெலி சவாரி செய்ய நினைத்தால் அதன் நிலை என்னவாகும். கடைசியில் அப்படித்தான் முடிந்தது பொன்னி வளநாட்டுப் போர் வீரனை ஒடுக்க யாரால் முடியும்?

செம்பியன் போர்க்களம் நோக்கிச் செல்கிருன் என்ற செய்தியைக் கேட்டவுடன் பெண்களெல்லாம் காட்டை நோக்கிச் சென்றனர். கர்ப்பிணிகளெல்லாம் அங்கு சென்று தங்கினர். சோலையிலே விழுந்து கிடக்கும் சருகுகளின்மீது குழந்தையை ஈன்றனர். தொட்டிலிலே தூங்கவேண்டியவன் மண்தரையிலே தவழவேண்டியவனுனன்! இனிய நாதத்தைக் கேட்டு உறங்க வேண்டியவன் கூகையின் குரல் கேட்டு இமைகளை மூடவேண்டியவனுனன். எதனுல்? செம்பியன் கொண்ட சீற்றத்தால்! அவனை அடக்க நினைத்தவர் அடங்கினர். புலி பாயத் தொடங்கிவிட்டால் எலி என்ன செய்யும்? எருமை என்ன செய்யும்! அப்படித்தான் சிற்றரசர் நிலையும் ஆகியது.

31. இரியல் மகளிர் இலைஞெமலுள் ஈன்ற
வரிஇளம் செங்கால் குழவி—அரை இரவில்
ஊமன் பாராட்ட உரங்கிற்றே செம்பியன்தன்
நாமம் பாராட்டாதார் நாடு.

(வி - ரை) செம்பியன் புகழைப் பற்றிப் பாராட்டாத நாடு ஊமையாகியது. மனிதனுக்குப் பொறுமை என்று ஒன்று உண்டு. ஆனுல், அது பொறுத்துக்கொள்ளும் அளவிற்குத்தான் பயன்படும். அதற்குமேல் சீற்றம்தான்!

இரியல் மகளிர் - கடலொத்த சேரன் சேனை புரண்டு வருவது கண்டு, பெண்கள் ஓடியது. இலை ஞெமலுள் ஈன்ற - படுப்பதற்குப் பாய்கூட இல்லாமல் சருகின் மேலே பிறந்த, ஊமன்-கோட்டான்.

* * *

## களிப்பும்—கவலையும்!

சோழ நாட்டிலே ஒரு திருவிழா உண்டு. அந்தத் திருவிழா தைத்திருநாளைக் காட்டிலும் மேம்பட்டு விளங்கும். அதாவது கிள்ளி பிறந்த நாளை யொட்டித்தான் அத் திருவிழா. அவன் பிறந்த நாள் ரேவதியாகும். அந்நாள்

வருவதற்கு முன்னதாகவே அலங்காரங்களும் அமர்க்களங் களும் தொடங்கும். ஏனெனில், 'மன்னன் உயிர்த்தே மலர் தலையுலக'மெனச் சொல்லியிருக்கிறார்களல்லவா. அதற் காகத்தான்! இலையொத்த வேலை ஏந்தியிருக்கும் கிள்ளியான வன் பிறந்த நாளை முன்னிட்டு தூயவுள்ளம் படைத்தவருக் குத் தகுந்த பரிசுகள் வழங்குவான். மாலைவேளையில் பவனி வருவான்! பசுவையும் பொன்னையும் கொடுப்பான். இது, அவன் வழக்கம். மந்தரமலையைப்போல் உயர்ந்து காணப் படும் களிறுகளைப் பரிசிலாகப் பெற்றுத் தம் வீட்டை நோக்கிச் செல்பவர் அநேகர். ஆனால், அரசன் பவனி வரும் போது ஒரு சோகக் காட்சியைக் கண்டான். அதுதான் சிலந் திப் பூச்சியின் பரிதாபகரமான முடிவு! 'ஏன் அதற்கு அந்த முடிவு?' என்று சிந்தித்தான். விடை வந்தது. வீடுகளுக்கு வெள்ளையடிக்கும்போது நசிய நேரிட்டது. பல்லாயிரக் கணக்கானோர் வாழ்த்துதலைத் தெரிவிக்கும்போது சிலந்திப் பூச்சி மட்டும் மௌனமாக இருப்பது குறித்து அவனுக்கு வருத்தம். என்ன செய்வது? எல்லாமே நல்லதாக முடிய முடியுமா? கூடுகளை இழந்து நிற்கும் பூச்சிகளைக் கண்டு கவலைப்பட்டான் என்றாலும் ஆரவாரத்திற்கிடையே அவன் வருவதால், அந்தச் சோகம் ஒரு நொடிப் பொழுதில் அவனை விட்டு விலகியது.

32. அந்தணர் ஆவொடு பொன்பெற்றார், நாவலர்
மந்தரம்போல் மாண்ட களிறூர்ந்தார்—எந்தை
இலங்கிலைவேல் கிள்ளி இரேவதிநாள் என்னோ
சிலம்பிதன் கூடிழந்த ஆறு

(வி - ரை) வீதியிலே நடந்து செல்லும்போது பல வீடு களைப் பார்க்கிறோம். எல்லா வீடுகளிலுமே இன்பம் இருப்ப தில்லை. அதுபோல துன்பமும் புடைசூழ்ந்துகொண்டிருப்ப தில்லை. இரண்டும் கலந்தே ஒவ்வொரு வீதியும் விளங்குகிறது. ஏதேனும், பொதுவிழா என்றாலும் எங்கேனும் சோகம் இருந்தே தீரும். அப்படித்தான் அவன் பிறந்த நாளைக் குறித்துக் கொண்டாடிக் கொண்டிருக்கும் போது சோகமும் அவன் மனத்தில் குடிக்கொண்டு இருக்கிறது. இது இயற்கை.

அவன் பார்த்திருந்தால் வெள்ளை அடிக்காதவண்ணம் தடுத்து நிறுத்தி இருப்பான். ஆனால், அவன் மாலையில்தானே வந்தான். இப்போது எண்ணி என்ன பண்ணுவது? இன்பத்தோடு துன்பத்தையும் சேர்த்துத்தான் அனுபவிக்க வேண்டும்.

அந்தணர்-தூயவுள்ளம் படைத்தவர்;

ஆவொடு பொன் பெற்றார் - பசுவையும் பொன்னையும் கிள்ளியிடமிருந்து பரிசாகப் பெற்றனர்.

* * *

## பெண் பழி !

*ஆத்தி மாலைக்கு அதிபதி! அவன் மார்பு முழுமையும் மணங்கமழும் மாலைகள்! அத்தகைய மணங்கமழும் மண மாறன் உலா வருகிறான் என்றால் யாருக்குத்தான் பார்க்க மனம் வராது. அதுவும் இளநங்கையரைப் பற்றிக் கூறவா வேண்டும். அதற்காகவே ஆடம்பரமாக அலங்கரித்துக் கொள்வார்களே! அன்றைக்கு அப்படித்தான் முடிந்தது. அவர்கள் அலங்கரித்துக்கொண்டு என்ன பண்ண?*

*கிழவிகள் அவர்களை வெளியே விடவேண்டுமே! அது தானே பெருந்தொல்லை! வயது ஆறும் ஆயிற்று! ஐயையோ! அவர்கள் தொல்லையை இளநங்கையர்களால் சகித்துக்கொள்ளவே முடியவில்லை. எப்போது பார்த்தாலும் பாதுகாப்பு! வெளியே போனால் 'எங்கே?' என்ற கேள்வி. இதெல்லாம் தொல்லைதானே! பெண்ணாகப் பிறந்தால் இவ்வளவும் அனுபவிக்க வேண்டியதாக இருக்கிறது. அப்படியும் அவர்கள் கண்களில் மண்ணைத் தூவி விட்டுத் தம் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளும் நங்கைகளும் உண்டு.*

*ஒருத்தி துணிந்தாள்! செவிலித்தாயை ஏமாற்றிவிட்டுச் சோழனைக் காண வேண்டும் என்ற ஆவலோடு தெருக் கதவைத் திறந்து பார்த்தபடி நிற்கிறாள். உள்ளே இருந்த செவிலித்தாய் பரபரவென்று வெளியே வந்து அவளை இழுத்துக்கொண்டுபோய் உள்ளே விட்டு வெளியே வந்து கதவைத் தாளிட்டுப் பேசாமல் உட்கார்ந்துவிடுகிறாள்.*

அக்கம்பக்கத்தில் அவளையொத்த கிழவிகள் வந்து, "ஏனம்மா, கதவை மூடிவிட்டாய்? திறந்துவிடு! கண்ணால் அச்சோழனைக் காணட்டும். அதன்பயனாக ஏதேனும் தீமைகள் நேர்ந்தால் பிறகு பார்த்துக்கொள்ளலாம். அடைத்து வைத்திருப்பதால் உன் பெண் மரணப் பாதையை நோக்கிப் போய்விடப் போகிறாள். அது நமக்குத்தான் தொல்லை!" என்கிறாள். அவளும் முணுகியவாறு மூடிய கதவைத் திறக்கிறாள்.

33. திறந்திடுமின், தீயவை பிற்காண்டும்; மாதர்
இறந்துபடில் ஏதந்தான் என்னும்—உறந்தையர்
கோன்
தண்ணார மார்பின் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு

(வி - ரை) தமிழர் பெருமானைக் காணும் பொருட்டுத் தான் அக்கன்னிகை கதவைத் திறந்து வெளியே வந்தாள். ஆனால், செவிலித் தாய்க்கு அது புரிந்திருக்க வேண்டுமே! அவள் தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டு கதவை மூடினாள். மற்ற செவிலித் தாய்மார்கள் உண்மையை எடுத்துக் கூறுகின்றனர். இவை யாவும் புலவருக்கு எப்படித் தான் புரிந்ததோ? எங்கேனும் ஒரு மூலையில் நின்றுகொண்டு இந்தக் காட்சியைப் பார்த்தாரோ என்னவோ?

திறந்திடுமின் - விரைவாக வெளிக்கதவைத் திறவுங்கள்; ஏதம் - தீராப்பழி.

* * *

## உனக்கு வெட்கமில்லையா?

சோழன் வருகிறான். அவனை ஏற்றி வருவது பெண் யானை. அந்த யானை மிகவும் விரைவாகச் செல்கிறது. அதனால் அவனைத் திருப்திகரமாகப் பார்க்க முடியாமல் ஒருத்தி துடிதுடிக்கிறாள். அப்போது அவளுக்கு அந்த யானையின்மீது கோபம் வருகிறது. மனத்திற்குள் அதைக் கண்டபடி ஏசுகிறாள்.

"ஏ பெண் யானையே! உனக்கு வெட்கம் இருக்கிறதா? நீ எதற்குச் சோழநாட்டில் பிறந்தாய்? நீலப் பூக்களைப் பறித்து, மாலையாகக் கட்டி, கழுத்தில் போட்டுக்கொண்டு பொன்னிவளவன் உன்மீது ஏறி வருகிறான். நீ பெண்தானே! வெட்கம் இருக்க வேண்டாமா? குளத்திலே பூத்துள்ள நீல மலர்க் குவியலைப்போல் மேகக் கூட்டங்கள் சூழ்ந்த இக்காவிரி நாட்டின் பெண் இயல்பை—கற்பின் பெருமையை உணராத வாறு அச்சமற்றுச் செல்கிறாயே! நீயும் ஒரு பெண்ணா?

34. நீள்நீலத் தார்வளவன் நின்மேலான் ஆகவும்
நாணாதே என்றும் நடத்தியதால்—நீள்நீலம்
கண்தன்மை கொண்(டு) அலறும் காவிரி நீர்நாட்டுப்
பெண்தன்மை அல்ல பிடி.

(வி - ரை) காதல் வெறிக்குப் பெண் யானைதானா பலி யாக வேண்டும். பொறுமைக்கும் ஓர் அளவில்லையா? இப் படியா கண்டபடி பேசுவது? வாயில்லாத ஜீவன் என்பதால் ஏளனம் புரிவதா? இதுவே அவளைப்போல் பெண்ணாக இருந் திருந்தால் பேசி இருக்க முடியுமா? உள்ள பற்களை உடைத்து இருக்க மாட்டாளா? போகுது, நமக்கேன் தொல்லை ...!

* * *

## கண்ணென்ன கண்ணோ?

கண் - காணவும் செய்யும்; பிறரை கவரவும் செய்யும். தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளவும் செய்யும், எதையோ பார்த்து, நினைத்து, நிலையிழந்து போகும். இந்த ஆற்றல் கண் ஒன்றுக்குத்தான் உண்டு. கண்கண்டு சொன் னால்தான் மற்ற எல்லாமே தம் தம் காரியங்களைச் செய்யும். காதலுக்கு முக்கியம் கண்தான். அதன் துணைகொண்டே யாவற்றையும் அறிந்து கொள்ளலாம்; அழித்தும் கொள்ளலாம்.

அப்படித்தான் அன்று நடந்தது. இலையொத்த ஒளி பொருந்திய வேலையுடைய சோழன் பாடலம் என்ற பெய

ருடைய குதிரையின் மீது ஏறி நகர்வலம் வருகிருன். வரும் போது வீதியின் இரு புறத்திலும் உள்ள வீட்டுச் சாளரங்களின் வழியாக விழி வைத்துப் பார்க்கின்றனர், பாவையர்கள். பார்வையில்தான் எவ்வுளவு சோர்வு! இதை அவன் பார்த்திருப்பானுனல் நிச்சயமாக ஒரு வழி செய்து இருப்பான். அதுதான் இல்லையே!

அவன் பார்ப்பதற்குப் பதிலாக வழியில் செல்வோர் சிலர் கண்டனர், அக்காட்சியை! அப்போது அவர்கள் என்ன நினைத்தார்கள் தெரியுமா? ''தொடர்ச்சியாக மன்னனையே பார்க்கும் இப்பெண்களின் கண்கள், மீனை வரிசைப்படுத்தி' வீசி உலரவைக்கும் பரதவர் தம் நீளமான வலையில்கெண்டை மீன்கள் பிறழ்கின்ற காட்சியைப்போல் இருக்கின்றன'' என்று பேசிச் சென்றனர். அந்த அளவிற்கு மாறி மாறிப் பார்த்தனர்.

35. சுடரிலைவேல் சோழன்தன் பாடலம் ஏறி
படர்தந்தான் பைந்தொடியார் காண—தொடர்புடைய
நீலவலையில் கயல்போல் பிறழுமே
சாலேக வாயில்தொறும் கண்.

(வி - ரை) பெண்களின் மனவியல்பை மிகவும் அழகுற எடுத்து விளக்குகிருர், பெரும் புலவர். பைந்தமிழ்ப் பாவலரின் ஆழமான ஒவ்வொரு கருத்தும் நினைத்து நினைத்துப் பார்க்குந் தோறும் நெஞ்சம் துள்ளச் செய்ய வல்லது.

* * *

## இரு பெரும் குற்றவாளிகள் !

சமுதாயத்தில் பல்வகையான குற்றவாளிகள் இருக்கின்றனர். அவர்களைக் காலம் வரும்போதுதான் அறிந்து கொள்ள இயலும். சிலரை, உடனே தெரிந்துகொள்ளலாம். ஆனுல் காதலில்—?

அதுதான் முடியாது. அதன் வயப்பட்டவர்களே சொன்னுல்தான் பிறருக்குத் தெரியும். அப்போதுதான் அவர்களுள் யார் குற்றவாளிகள் என்பது பிறருக்குத் தெரியும்.

ஒருத்தி மிகவும் பரிதாப நிலையிலிருக்கிறாள். சோர்வான முகம். மெலிந்த கைகள். துவண்ட தோள்கள். குறுகிய மனம்—இவற்றிற்கிடையே அவள் நாட்டில் நடமாடுகிறாள்.

தோழி பார்க்கிறாள். பார்த்தவளைப் பார்த்துச் சொல்கிறாள்.

''தோழி! என்னைப் பார்! முன்பெல்லாம் எப்படி இருந்தேன். இப்போது எப்படி இருக்கிறேன். இதெல்லாம் என்ன? எல்லாம் என்னால் வந்ததென்று நீ நினைக்கக் கூடும். உண்மை அதுவல்ல; கண்ணும் மனமும்தான்! அவ்விரண்டும் செய்த கோளாறுதான், நான் இந்நிலைக்கு ஆளாகியதற்கு முதற் காரணம். வெட்கத்தைவிட்டுச் சொல்லுகிறேன். வளவனைப் பார்த்தேன்! நம் வீதியின் வழியாகச் செல்லும்போது என் கண்கள் பார்த்தன; உள்ளமும் பார்க்கத் தூண்டியது! அதன் விளைவால் அவனைக் காதலித்தேன். காதலிக்கச் செய்ததற்குக் காரணம் கண்ணும் உள்ளமும்தான்! அவைகளுக்குத் தக்க தண்டனையளிக்க வேண்டும். இல்லையேல் எனக்கு அமைதி இல்லை. மையுண்ட கண்ணை மயக்கச் செய்த மன்னனே இத்தவறுதலுக்குக் காரணம். அவன்ஏன் வந்தான்? என் கண்கள் ஏன் பார்த்தன; உள்ளம் ஏன் தூண்டியது? இவற்றிற்கு மூலகாரணம் யார்? எல்லாம் வளவனே தான்! ஆனால், என் தோள்களைத் தண்டிக்கின்றனர். அவன் செய்த குற்றத்திற்கு நானா குற்றவாளி, நீயேசொல்!'' என்று முறையிடுகிறாள்.

விசாலமானதும் அழகானதுமான வீதிகளில் அவன் வலம் வருவதையும் அவளின் உள்ளத்தையும் தோழி என்ன சொல்லமுடியும்?

36. கண்டன உண்கண் கலந்தன நல்நெஞ்சம்
தண்டப்படுவ தடமென்தோள்—கண்டாய்
உலாஅ மறுகில் உறையூர் வளவற்(கு)
எலாஅம் முறைகிடந்த ஆறு!

(வி - ரை) தண்டனை அளிக்கின்ற மன்னனே இப்போது குற்றவாளியாக அவள் உள்ளத்தில் நிற்கிறான். ஆனால்,

உலகம் ஏற்றுக் கொள்ளுமா? நீதியின் கீழ் நின்று விளங்கு பவனுயிற்றே! அவனைப்போய் இவள் குற்றஞ் சாட்டினுல் ஏற்றுக்கொள்பவர் யார்? அதுவும் இது காதல் விஷய மாயிற்றே!

கண்டன உண்கண் - மையுண்ட கண்கள் கண்டன;
வளவற்கு - சோழனைப் பொருத்தமட்டில்.

* * *

## நாணும் செயலன்றே !

கிள்ளியைக் கண்டது முதல் எல்லாவற்றையும் இழந் தாள்! நெஞ்சம் நெகிழ்ந்தது; நாணம் அழிந்தது; அழகு ஒழிந்தது. எல்லாவற்றிற்கும் கிள்ளியே காரணம் என்பது அவளது குற்றச்சாட்டு. எப்போது பார்த்தாலும் அவனைப் பற்றிய நினைப்பு. உணவருந்தப் போவாள்; கிள்ளியின் பேராற்றல் நினைவுக்கு வரும். உணவை வெறுப்பாள்! கண் ணுடி முன் நிற்பாள்; அவளைக் கண்டு அது நகைக்கும்,இப்படி எத்தனை நாளைக்குத்தான் இருப்பாள். காதலித்ததைப் பிற ரிடம் சொல்லவோ அச்சம். சொல்லிவிட்டால் என்ன நினைத் துக் கொள்வார்களோ வென்ற குழப்பம்! மனதிற்குள் இருந் தாலோ தூக்கத்திற்குச் சுமை! எவ்வளவு தொல்லை!

அவ்வளவையும் பொறுத்துக்கொள்ள அவளென்ன ஞானியா? ஞானிக்குத்தான் எதையும் தாங்கும் இதயம் உண்டு. வாழ்க்கைப் போரிலே—அதிலும் காதல் போரிலே அன்றுடம் ஊடாடிக் கொண்டிருப்பவருக்குப் பொறுமை ஏது? அந்தப் பொறுமையைத்தான் அவளும் இழந்தாள்! ஆகவேதான் தோழியை எதிர்நோக்கிக் கொண்டு இருந்தாள். அவளும் வந்தாள். வந்தவுடன் அவளால் சொல்ல முடிய வில்லை. தயக்கமுற்ருள்! சொன்னுல் என்ன சொல்வாளோ ? ஏது சொல்வாளோ என்ற கொந்தளிப்பு. எப்படியோ சொல்லத் துணிந்தாள் ! அதில்தான் எத்தனைக் குழைவு !

''தோழி! நீ எவ்வளவு அழகாக இருக்கிருய்? உன் உடல் தான் பார்ப்பதற்கு எத்துணைக் கவர்ச்சிகரமாய் அமைந்திருக்

கிறது! நாகப்பாம்பின் தலையைப் பார்த்தால் அகலமாகவும் பார்ப்பதற்கு அழகாகவும் இருக்கிறது. அதுபோல் உன் அழகிய தொடைக்கு மேலே அகலமான இன்பப் பொருள் அமைந்திருக்கிறது!..."

இதைக் கேட்டவுடன் அவள் தோழியின் முகம் நாணத்தால் சுருங்குகிறது. மேலும் சொல்லுகிறாள்.

'தோழி! வெட்கப்படுகிறாயா, அந்த மறைவிடந்தானே இன்பத்தின் உறைவிடம்! அதைப் பெற்றுள்ளாய் நீ! ஆகவே தான் உன்னிடத்தில் என் குறையைச் சொல்கிறேன். கிள்ளி வளவனைக் கண்டதுமுதல் என்னிடத்திலே தங்கியிருந்த நாணம், அழகு இருக்குமிடம் தெரியாமல் அவனோடு போய் விட்டது. தோழி! நம் மன்னன் மக்களிடமிருந்து வரி வசூலிப்பது ஆறில் ஒன்று. ஆனால் என்னிடத்தில் மட்டும் நாணத்தையும் நலனையும் கவர்ந்து கொண்டு சென்றானே அது நீதிக்குப் புறம்பானதுதானே!'' என்று வினவுகிறாள்.

கேள்விக்குப் பதில் இல்லை!

தோழியின் அகத்திலே ஏதோ ஓர் எண்ணம்! அது வெளியாகும் வரையில் அவள் அகத்திற்கு நிம்மதி இல்லை...!

37. என் நெஞ்சும் நாணும் நலனும் இவையெல்லாம்
மன்னன் புனல்நாடன் வளவன்—என்னே
அரவகல் அல்குலாய் ஆறில் ஒன்(று) அன்றோ
புரவலர் கொள்ளும் பொருள்,

(வி-ரை) 'மன்னன், மக்களிடமிருந்து வரி வசூலிக்கிறான். அந்த வரியைப் பொருளாகத் தருகிறார்கள், சமுதாயத்திலுள்ளவர்கள். ஆனால் என்னிடம் மட்டும் அதிகமாக வரி வசூலித்தது எதற்காக?' எனக் கேள்வி கேட்கும் முகத்தான் இப்பாடல் அமைந்துள்ளது.

அரவம்-பாம்பு; அகல-பரந்த ; அல்குல்-பெண்களின் மறை பொருள் ; புனல் நாடன்-காவிரி பாயும் நாட்டை உடையசோழன்.

* * *

## கண்ணும் நாணமும்!

எவ்வளவும் நினைக்கலாம்! நினைப்பதற்குத் தடையா இருக்கிறது? செயல்பட வேண்டுமே! அஃதில்லையானல் நினைத்து நினைத்து என்ன ஆகப்போகிறது? அந்தச் செய்தி, காதல் வயப்பட்டவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது? அவளுக்கு என்ன சொன்னால்தான் தெரியப் போகிறது? செவிடன் செவியில் ஊதிய சங்கு போலத்தான்! காதல் அத்தகையது.

நிலா முற்றத்தில் நெஞ்சைப் பறிகொடுத்துவிட்டு தனியாக உட்கார்ந்திருக்கிருள்; அங்கு தோழி வருகிருள். கவலையோடு கிடக்கும் கன்னியைப் பார்த்து அவளும் வேதனைப் படுகிருள். தோழி வருவதை, அவள் பார்த்தாள். ஆயினும் பேசவில்லை. மணலில் ஏதோ ஒன்றைக் கீறியவண்ணம் இருந்தாள்.

‘‘ஏம்மா! என்ன கவலை?’’ என்று கேட்கிருள் தோழி.

‘‘தோழி! என் குறையை உன்னிடத்தில் சொன்னால் மட்டும் என்ன ஆகப் போகிறது? வேண்டுமானால் மனத்திலுள்ள பாரம் சற்றுக் குறையும். இதைவிட வேருென்றும் நேராது!’’ என்கிருள்.

‘‘அம்மா! நீங்கள் சொல்வது உண்மைதான். நான் மறுக்கவில்லை. ஆனல், ஆறுதலேனும் பிறக்குமல்லவா? அதற்காகவாவது சொல்லியாக வேண்டும்’ என்று வலியுறுத்துகிருள்.

அது கேட்டவுடன் அவள் அழுகிருள்! அழுதபடிச் சொல்லநேரிட்டாலும் மனதில் உள்ளதை அவளால் மறைக்க முடியவில்லை. எல்லாவற்றையுமே சொல்லி விடுகிருள்.

‘‘தோழி! சொல்கிறேன், கேள்! என்றோ சோழனைக் கண்டேன். அதுவும் ஒரு முறைதான் கண்டேன். காதல் கொண்டேன். அதனல், மறுமுறையும் நம் கண்முன்னே வாராஞ? வந்து இன்பம் தாராஞ?’’ என்றெல்லாம் நினைத்தேன். ஆனல், நான் நினைத்தபடி அவன் வந்திருக்க வேண்டுமே!

வரவில்லை. ஒரு மூன்று நாளைக்கு முன்னுள் கனவிலே வந்தான், அக்காவலன்! என் கண்கள் மூடிக் கிடந்தன. பார்க்க முடியாதபடி இமைகள் இறுக மூடிக் கிடந்தன. என்ன செய்வேன்!

எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. பல நாளைக்குப் பிறகு நேற்று மாலை சோழன் வந்தான். அப்போது நான் விழித்துக் கொண்டுதான் இருந்தேன். நன்ருகப் பார்க்கலாம்; குறைவின்றி இன்பம் காணலாம். ஆனுல், இந்தப் பாழாய்ப் போன நாணமொன்று குறுக்கே வந்து, அவனைப் பார்க்க முடியாதபடி தடுத்து நிறுத்திவிட்டது. கடலலையைக் கிழித்துச் செல்லும் மரக்கலங்கள் நிறைந்துள்ள காவிரிப்பூம்பட்டினத்துக் காவலன் மீதுள்ள காதலோ தணிந்தபாடில்லை. அவன் செங்கோலுக்கு இழுக்கைத் தேடித் தரும் வகையில் கண்ணும் நாணமும் கண்டபடிக் குற்றங்களைச் செய்கின்றன. கண்டிப்பவர் யார் ?" என்று சொல்லுகிருள்.

தலைவிக்கிருந்த பாரம் குறைந்து தோழிக்கு அதிகமாகிறது. அவளோ, 'அம்மா ! ஒரே தலைவலியாக இருக்கிறது. பிறகு வருகிறேன்!' என்று சொல்லிக்கொண்டே அந்த இடத்தைவிட்டு நகர்ந்து விடுகிருள். அவள் கதி—அதோ கதிதான்!

38. கனவினுள் காண்கொடா கண்ணும் கலந்த
நனவினுள் முன்விலக்கும் நாணும்—இனவங்கம்
பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமாஞர்
செங்கோல் வடுவடுப்பச் சென்று

(வி-ரை) கனவு-அதில் வந்த அரசன்! நினைவு-நாணமுடைமை! எல்லாமே அவளுக்குத் துன்பம்! இன்பத்தைக் காண வேண்டிய பவரும். புலவரின் எழுதுகோலால் அவள் வாட வேண்டியவளாஞள்.

* * *

## ஆடையோ ஆடை!

சோழனை நினைத்தாள்!

படுக்கையில் படுத்தாள்!

வேதனை தாளமுடியாத வண்ணம் விழிகளிலே நீர் பரவப் படுத்தாள். அந்தத் தூக்கத்திலே இன்ப மயமான கனவு; சோழன் மெல்ல வந்தான், அவள் பக்கத்தில்! என்னென்னவோ செய்தான்! இறுதியில் கள்ளத்தனமாக ஓடிப் போய் விட்டான். அப்படி அவன் செய்யத்தகாத செயல்தான் என்ன செய்தான் என்பதை அவள் வாயிலாகவே கேட்போம்.

படுக்கையைவிட்டு எழுந்து உட்கார்ந்தாள். அவள் முன்னே தோழி நின்ருள். நின்றவளிடம் கண்ட கனவை எடுத்துரைக்க முற்படுகிருள்.

''தோழி! ஆண் யானையையும் பெண் யானையையும் பரிசாகத் தருகின்ற அளவிற்கு வளப்ப மிகுந்த கையையும், மணம் மிகுந்த மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவனுமான சோழனின் செங்கோல் முறையை என்ன வென்று எடுத்தியம்புவேன்? மன்னனு அவன்? கனவிலே வந்து, உறங்கிக்கொண்டிருக்கும் வேளையில் நான் அணிந்து கொண்டிருந்த ஆடையைத் தூக்கிக் கொண்டு போய்விட்டான். நான்அப்படியே வெற்றுடலோடு நிற்க வேண்டியவளானேன். எப்படி இருக்கிறது பார்த்தாயா, மன்னனின் இயல்பு? இருக்கட்டும்! நாளைக்குப் பவனி வருவானல்லவா? அவனேடு பரிவாரங்களும் வருமல்லவா? அப்போது, அவன் செய்த செய்யத் தகாத செயலை நாலுபேர் அறிய விளம்பரப் படுத்தி விடுகிறேன்'' என்று படபடப்பொடு சொல்லி முடிக்கிருள்.

39. தானைகொண்(டு) ஓடுவ(து) ஆயின்தன்
செங்கோன்மை
சேனை அறியக் கிளவேனே—யானை
பிடிவீசும் வண்தடக்கைப் பெய்தண்தார்க் கிள்ளி
நெடுவீதி நேர்ப்பட்ட போது

(வி-ரை) கனவிலே வந்தான்! ஆடையைப் பறித்துச் சென்றான், இது, அவளது எண்ணத்தின்மீது குறை. ஆனால், அவள் கொண்டிருந்த காதல் வெறியால் கண்டபடி பேசுகிறாள். 'இப்படிப் பேசுகிறாளே இவளும் ஒரு பெண்ணா?' என்று நாம் நினைக்கத் தேவையில்லை. இந்தவிதமான வெறித்தனக் காதல்கூட நாட்டில் உண்டா என்று நாம் கருத வேண்டும்.

* * *

## இன்பமும் துன்பமே!

முல்லை மலர் பூத்திருக்கும் பகுதி. ஒரு சிறு வீடு. அந்த வீட்டில் நங்கையொருத்தி, சென்னி என்னும் கன்னல் தமிழ்ப் பெயர் பெற்ற அரசனை என்றோ அவள் கண்டாள். அன்று முதல் அவளுக்குத் தூக்கமில்லை; ஏக்கம் குறைந்ததில்லை; எப் பக்கம் பார்த்தாலும் அப்பக்கமெல்லாம் அவன் வருவதாகவே தோற்றம்! 'அதோ, சென்னி!'—இதே பிதற்றல், சிலர் பைத்தியமெனக்கூட நினைத்தனர். அவன்மீது அவ்வளவு காதல்! காண்கின்ற பொருளனைத்தும் அவளுக்குக் கவலை தருவதாகவே இருந்தது. கேட்கின்ற நாதத்தின் ஓசை யாவும் ஆந்தையின் அலறல் போலவே தென்பட்டது. அவ் விதம் கேட்கும்போதுதான் தன் நெஞ்சோடு பேசிக்கொள்ள முற்படுகிறாள்.

'ஏ, நெஞ்சே! தெளிவான தடாகத்திலே பூத்த புது மலர்களை பூமாலையாக்கிச் சூடிக்கொள்கின்ற சென்னியென்னும் மன்னனை, மண்ணுலகைக் காக்கும் மன்னன்; நல்லதைச் செய்யும் நல்லவன்; நீதியானவன் என்றெல்லாம் ஊரார் புகழக் கேட்கிறேன். அங்ஙனம் இம் மண்ணுலகைக் காக்கும் அளவிற்கு ஆற்றல் படைத்தவன் என்பது உண்மையானால் என் குறையைப் போக்க முன்வந்திருக்க வேண்டும். எனக்கு மட்டும் கொடியதாகவுள்ள இம் மாலைப் பொழுதில் ஆயர்கள் குழலை வாசித்துப் பலரை இன்பத்திற்கு உள்ளாக்குகின்றனர். ஏனோ தெரியவில்லை...எனக்கு மட்டும் அது துன்பத்

தைத் தருவதாகவே தெரிகிறது. காரணம் காதலித்த காவலன் அருகில் இல்லாததால்! இருந்திருந்தால் எனக்கு இன்பம், இன்பமாகவே இருந்திருக்கும். அவன் அருகிலே இல்லாத காரணத்தால் அந்த இன்பம் துன்பமாகவே தெரிகிறது. இதையேன் அவனுல் உணர முடியவில்லை. மண்ணகத்தைக் காக்கும் காவலனெனப் பள்ளுப் பாடுகிருர்களே! நான் கேட்கிறேன்! இந்த வனிதையின் குறையைப் போக்க ஏன் முன்வரவில்லை. நானென்ன பொல்லாதவளா?'' என்று தனக்குள் தானுகக் கேட்டுக் கொள்கிருள்.

40. தெண்ணீர் நறுமலர்த்தார்ச் சென்னி இளவளவன்
மண்ணகம் காவலனே என்பரால்—மண்ணகம்
காவலனே ஆனக்கால் காவானே மாலைக்கண்
கோவலர்வாய் வைத்த குழல்

(வி-ரை) கோவலர் ஊதும் குழலிசை கேட்ட கோதை, சென்னி இளவளவனைத் தூற்றுகிருள்! என் வெஞ்சத் துயரை அறியாதவனு மண்ணகத்திற்கு இன்பந் தரும் வண்ணம் ஆட்சி செய்கிருன்? என்ற வரியை நோக்கும் போது புலம்பும் நெஞ்சத்திலுள்ள புகைச்சல் வெளிப்படையாகத் தெரிய வருகிறது. காதல் வயப்பட்ட காரணத்தால் குழலிசையை வெறுக்கத் துணிகிருள். அவன் அருகில் இல்லாததால் இன்பமும் துன்பமாகத் தோன்றுகின்றது.

மண்ணகம் காவலரே என்பரால்—சமுதாயத்திலுள்ள மக்களின் துயரைத் துடைப்பவன் என்று விளங்குகிருர்கள்; தெண்ணீர் நறுமலர்த்தார்—தூய்மையான குளத்திலே பூத்த பூக்களை மாலையாகத் தொடுத்து அணிந்துள்ள.

* * *

## பகற் கனவு!

கனவுக்குத்தான் என்ன வலிமை! சேச்சே! உள்ளத்தை கொல்லாமல் கொல்கிறதே! காதலும் கனவாகத்தான் போகுமா? என் நெஞ்சம் வேகுமா? வாடிவிட்ட கன்னமும் ஒட்டிப்போன உதடும் உயிர் பெறுவதெப்போது? மறக்க

முடியவில்லையே, மாமன்னனை. அவனை மறந்தாலும் அவன் ஊட்டிச் சென்ற காதலை மறக்க முடியவில்லையே! இளமை என்றுமே உலர்ந்துபோகவிருக்கும் சருகுக்கு ஈடானதா? அப்படித்தான் அவள் துயரத்தைக் காணும் போது தோழிக்குத் தோன்றியது. அதனால்தான் அவள் மோனத்தின் உச்சக் கட்டத்திலே உட்கார்ந்திருந்தாள்.

"தோழி! ஏன் பேசாமல் இருக்கிறாய்? நான் சொல்வதில் ஏதேனும் குற்றம் இருக்கிறதா? இருந்தால் சொல்! திருத்திக் கொள்கிறேன். மதயானைகள் வருவதற்கு முன்னே, 'யானை வருகிறது; தூர விலகி 'நில்லுங்கள்!' என்று பறை யறைவோர் பறை சாற்றுகின்றனர். அதன் பிறகு அந்த மதயானைகள் வருகின்றன. அத்தகைய யானைப்படைகளையும், அசைகின்ற கொடிபோல துவள்கின்ற மாலையை அணிந்தவனுமான சோழன், நீதிக்கு மாறாக எந்தத் தீச்செயலும் செய்ததில்லையென்று அனைவரும் சொல்கின்றனர், உண்மையா? 'செங்கோல் வேந்தனும்! அறநெறிக்கு ஆசானும்!' இப்படிப் புகழ்கிறார்கள். நானும் வேண்டாமென்று சொல்லவில்லை. நன்றாகப் புகழட்டும். ஒரு முறைக்கு இருமுறை வாயுரை வழங்கட்டும் கவலையில்லை. ஆனால் என் உள்ளத்தை—எண்ணத்தை—நாணத்தை—உடல் நலனை அழித்துக் கைவளையலைக் கவர்ந்து சென்றானே, அவன் அரசனா? நீ ஏற்றுக் கொள்கிறாயா? நல்லதா இது? என்னைஇப்படி நலியச் செய்வது எந்த நீதிக்கு ஏற்றது?" என்று கதறுகிறாள்.

41. அறைபறை யானை அலங்குதார்க் கிள்ளி
முறைசெயும் என்பரால் தோழி—இறையிறந்த
அங்கோல் அணிவளையே சொல்லாதோமற்றவன்
செங்கோன்மை செல்கின்றவாறு

(வி-ரை) வளையல் நெகிழ்ந்தது! குணமே மாறியது அவளுக்கு. அதனால்தான் அரசனெனக்கூட பாராது, 'மன்னவனும்? இவனோ?' எனக் கேட்கத் தொடங்குகிறாள். சுவையான காட்சி. அதிமதுர விருந்து!

அறைபறையானை-களத்திற்குகந்த களிறு ;

அலங்குதார்க் கிள்ளி - அசைந்தாடும் இரத்தின மாலைகளைக் கொண்ட சோழன்.

*　　　*　　　*

## அன்னை அடித்தாள்!

"ஏண்டி...என்னதுதான் நினைத்துக்கொண்டு இப்படியெல்லாம் இருக்கிறாய் ?"—இது வழக்கமாகப் போய்விட்ட வரியாகும்.

தாய் கேட்பாள் ; சேய் அழுவாள் ; செவிலி தன் மகளுக்குத் தேறுதல் சொல்லுவாள். அன்றென்னவோ அந்தச் சேவிலி எங்கேயோ போய்த் தொலைந்தாள். பெற்றவளும் அப்படியொரு சமயத்தைத்தான் வெகுநாளாய் எதிர்பார்த்துக் கிடந்தாள். ஏனென்றால் செவிலி இருக்கும்போது அவளுக்கு அதிகாரமில்லை. அடிக்கவந்தாலும் திருப்பி அடித்து விடுவாள். அதற்காகவே இத்தனைநாள் அச்சப்பட்டாள். இன்று தன் மகளை அடிக்கச் சுதந்திரம்! இருந்த ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள கூரையிலே நுழைத்து வைத்திருந்த கோலொன்றை எடுத்துக்கொண்டு வெளியில் வந்தாள். எங்கேயோ—எந்த எண்ணத்திலேயோ ஆழ்ந்து இருந்தாள். பின்னால் வந்து நின்ற அவளது அன்னை, ஓங்கி அடித்தாள் ! 'ஐயோ...அம்மா... இல்லையம்மா!' என்று ஓவென அலறினாள். விடுவாளா அவள்? சக்கைப்போடு போட்டாள். உடம்பெல்லாம் வரிவரியாகக் கோடுகள்! அத்தனையும் அடியின் மறுபிறப்பு.

"ஓகோ...போகுது என்று பார்த்து வந்தால் அளவுக்கு மீறியா போகிறாய்? வயது வந்தவளாயிற்றே என்று இரக்கங்காட்டினால் என்னையா வதைக்கிறாய்? ஆகட்டும்... பார்க்கிறேன்!" என்று சொல்லியவாறு உள்ளே நுழைந்தாள்.

அவளோ பருவப் பெண்!

அடித்தவளோ அன்னை!—என்ன செய்யமுடியும். அக்கம் பக்கத்திலுள்ளவர்கள், தூரமாக இருந்து கொண்டே,

'ஐயையோ! அடிக்காதேம்மா...பருவப்பெண்ணை அடிப்பது பாவம்!' என்றார்கள். யாரேனும் துணிந்து வந்து கைப் பிரம்பை வாங்கியிருந்தால் அவளுக்குச் சற்று அடி குறைந் திருக்கக்கூடும். அந்த அளவிற்குத் துணிவு ஏது? அதனாலேயே தேம்பித் தேம்பி அழவேண்டியவளானாள்.

நேரம் ஓடிக்கொண்டே இருந்தது. விம்மலும் குறைந்தது அழுகையும் நின்றது. அப்போது அவள் தோழி வந்தாள். வந்தவளிடம் நடந்தவற்றை விளக்கமாகச் சொன்னாள்.

"தோழி! நான் ஏன் உயிர்வாழ்கிறேனா தெரியவில்லை. தோள் வலிமை கொண்ட வளவனோடு என் மனதிற்கிருக்கும் ஆசையை அன்னையும் கண்டார், அக்கம்பக்கத்திலுள்ளவரும் பார்த்தனர். அதனால் இன்றைக்கு விளைந்தது என்ன தெரியுமா? அடிதான். வளவனோடு உறவு பூண்டு இன்பத்தை நுகர்ந்தறியேன்! ஆயினும் பழி வந்துவிட்டது. எனக்கும் வளவனுக்கும் உறவு இருப்பதாக ஒரு கற்பனைக் கதையைப் புனைந்து கொண்டு சதா தூற்றிக்கொண்டே இருக்கின்றனர். தேரைக்கு எட்ட முடியாத அளவிற்குத் தேங்காயின் உள்ளே அதன் சத்து அமைந்திருக்கிறது. ஆயினும் தேரை, அந்த சத்தை உண்டு விட்டது என்று சொல்வது போலத்தான் என்னுடைய கதியும் ஆகிவிட்டது. தேர் மீது உலா வரும் வளவனால் வந்த வினை! எப்படி? தேங் காயினால் தேரைக்கு வந்த பழிச் சொல்லைப் போல! உண்மை யிலேயே அவனோடு அகமகிழ்ந்து இருந்தால், வருகின்ற பழிச்சொல்லை ஏற்றுக்கொள்வேன். ஆனால் அப்படிக்கூட நடக்கவில்லை!' என, அழுதவாறு கூறுகிறாள்.

42. அன்னையும் கோல்கொண்(டு) அலைக்கும்; அயலாரும்
என்னை அழியுஞ்செயல் சொல்லுவர்—உள்ளிலைய
தெங்(கு)உண்ட தேரை படுவழிப் பட்டேன்யான்
திண்தேர் வளவன் திறத்து

(வி - ரை) தேரை, தேங்காயிற்குள் உள்ள சத்தை அழிக் கும் ஆற்றல் பெற்றதுதான். மறுப்பாரில்லை. ஆனால் சில மரங்களிலுள்ள தேங்காய்களில் தானாகவே ஒன்றும் இருக்

காது. ஆனால் அதை உடைத்துப் பார்ப்பவர், 'தேரையின் வேலை!' என்பார். அதுபோலத்தான் அவளுக்கு வந்த பழிச் சொல்லும். உலகமாயிற்றே. அதற்கு இதைத் தவிர வேறு வேலை ஏது?

*　　　*　　　*

## கண்ணால் காணவில்லை !

ஆகா! எண்ணம் பூர்த்தி பெற்றுவிட்டது. அப்போதும் அந்தப் பாழும் மனத்தில் ஒரு குறை. என்னதான் இருந் தாலும் இந்தப் பாழும் மனத்திற்கு ஆசை மட்டும் தீர்வதே இல்லை.

தோழி வந்தாள்.

தலைவி சொன்னாள். என்ன சொன்னாள் தெரியுமா? சொல்லும் போதுதான் அவளுக்கு எவ்வளவு இன்பம். இப் போது பாருங்கள்!

'தோழி! நேற்று சோழனைக் கண்டேன்!' என்றாள், அக் காரிகை.

''அப்படியாம்மா! பரவாயில்லை, பலநாள் தொல்லை. நேற்றேனும் நிறைவேறியதே...ஆமாம்...உன் மனத்திற் கேற்ப மகிழ்ந்தாயா?''

''அதை ஏன் கேட்கிறாய்? சோழனோடு ஊடினேன் அவன் என்னை நாடினான்; நானோ, நேருக்கு நேராக நில்லாமல் புறங் காட்டி நின்றேன்...''

''ஊம்...அப்புறம்?''

''அப்புறமென்ன? கட்டியணைத்து முத்தமிட வந்தான். நாணத்தோடு தரையை நோக்கி நின்றேன். இருவரும் ஒருவ ராகி இன்பத்தின் எல்லையில் நிற்கும்போது அவனைப் பார்க்க வெட்கமுற்று முகத்தை வேறொரு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். மதிமயங்கிக் கிடப்பவளானேன். ஆனால் அவனைக் கண்ணாரக் கண்டு களிப்படையவில்லை!''

"ஏன் ?"

"போடி! உனக்கு எல்லாமே சொல்ல வேண்டும். தழுவும் போது எப்படிப் பார்க்க மனம் வரும்? ஈருடலும் ஒருடலாகி இருக்கும் போது எப்படியடி பார்ப்பது ? வெட்கமாக இருக்காதா? அதனால்தான் பார்க்கவில்லை. அந்தக் குறைதான், இப்போது. நீதி வழுவாது நெறிமுறையோடு செங்கோலோச்சி வரும் ஒழுங்கையும், அழியாப் புகழையுமுடைய வளவனைப் பாராது இருந்தேன். அந்த ஓர் அவல நிலையைத் தவிர வேறொன்றுமில்லை!" என முடிக்கிறாள்.

43. புலவி புறக்கொடுப்பன் புல்லிடின் நாண் நிற்பன்
கலவி களிமயங்கிக் காணேன்—நிலவியசீர்
மண்ஆளும் செங்கோல் வளவனை யான்இதன்றோ
கண்ணாரக் கண்டறியா ஆறு.

(வி - ரை) மனத்திற்கு என்றும் அமைதி இருப்பதில்லை. அதனுடைய வேலையோ பிறரை, வேண்டுமென்றே அலைக்கழிப்பதுதான். அப்படித்தான் அவள் நிலையும் முடிந்தது. எவ்வளவோ ஆசை ஒரு கண நேரத்தில் பூர்த்தியான போதிலும் ஏதேனும் ஒரு குறை தொக்கி நின்றே அவளைத் துன்புறுத்தியது.

*　　　　*　　　　*

நாரையோடு நங்கை !

ஆற்றோரக் கரை. நல்ல பட்டப் பகல். நிழல் தருவதற்காகவே அணி செய்யும் பெரு மரங்கள். அங்கே ஓர் அணங்கு! அல்லலுற்ற அரிவை! பிரியத்திற்குரிய பாவலனை நினைந்துருகும் சோகக் காட்சி.

அங்கே ஒரு நாரை. அவள் குறையைக் கேட்பதற்கென்றே வந்ததோ, என்னவோ! அவளைப் பார்த்தவண்ணம் இருந்தது. அவளும் ஓர் ஆளைத் தேடிக்கொண்டுதான் இருந்தாள். எப்படியோ நாரை அங்கு வந்தது. ஓரளவிற்கு மன

அமைதி ஏற்பட்டது. தன்னுடைய உள்ளத்திலுள்ள பாரத்தைக் குறைத்துக்கொள்ளும் அளவிற்குச் சற்றுத் துணிந்து பேச முற்படுகிருள். யாரிடத்தில்? அந்த நாரையினிடத்தில் தான்.

"ஏ, நாரையே! இப்போது நீதான் எனக்குத் துணை; வேறு யாருமில்லை. சிவந்த கால்களைப் பெற்றுள்ள இள நாரையே! உன் பதம் நோக்கி வணங்குகிறேன். நீ செய்ய வேண்டிய காரியம் ஒன்றுண்டு. அதுவும் நீ செய்யக்கூடிய தென்றே கருதுகிறேன். தென்கிழக்கேயுள்ள உறையூருக்குச் சென்ருல், மருதநிலத்தின் இரு பக்கங்களிலுமுள்ள கரையில் மீன்கள் துள்ளித் துள்ளிக் குதிக்கின்ற அளவிற்குச் செழிப்பு மிக்க காவிரிக் கரைக்குரிய தலைவனுன சோழனைக் கண்டு, நான்பெற்றுள்ள காதல் நோயைத் தெளிவாகச் சொல்ல வேண்டும். சொல்லி உடனடியாக அழைத்து வரவேண்டும். செய்வாயா? செய்தாயானுல் நல்லது!" என்று நாரையைப் பார்த்தவாறு சொல்கிருள். ஆனுல், நாரை ஏன் அவளைப் பார்த்தது? 'இந்தப் பாவிப்பெண் இருப்பதால் பயமாக இருக்கிறதே!' என்ற எண்ணத்தோடு அது பார்த்தது. அவளோ, நம் குறையைப் போக்குவதற்காகத்தான் இப்படிப் பார்க்கிறதெனக் கருதினுள். என்ன செய்வது? இரண்டும் இரண்டு விதம்.

44. செங்கால் மடநாராய் தென்உறந்தை சேறியேல்
நின்கால்மேல் வைப்பன் என் கையிரண்டும்—
நண்பால்
கரைஉரிஞ்சி மீன்பிறழும் காவிரி நீர் நாடற்(கு)
உரையாயோ யான்உற்ற நோய்.

(வி - ரை) வடக்கிலிருந்து பல நாரைகள் வந்தன. அவளது குரல் கேட்டு சில பறந்து போயின. எஞ்சி நின்றது, ஒன்றே ஒன்று. அதை நோக்கி அவள் சொல்லும்போது, "நாரையே! நீ உறையூருக்குச் சென்ருயானுல் காவிரிக்கரை உள்ளது. அங்கு மீன்கள் ஏராளம். அதை உன் பசிக்கு இரையாக்கிக்கொள். இக்கரையில் உனக்கு மீன்கள் ஏது? ஆகவே,

அங்கு சென்று உன் பசியைப் போக்கிக்கொள்!' அதோடு எனக்குள்ள காதல் பசியையும் தணித்துவிடு!' என்று சொல்லும் முகத்தால் இப்பாடல் அமைந்துள்ளது. 'கரை யுரிஞ்சி மீன் பிறழும் காவிரி நீர்' என்ற வரியில், கரையின் ஓரத்தில் உயரியமீன்கள் வரும்போகும் என்பதும், காவிரியின் புகழ் அத்தகையது என்பதும் தெள்ளத் தெளிய புலவர் விளக்கிக் காட்டும் முறை போற்றத் தக்கவற்றுள் ஒன்ருகும்.

* * *

## அன்றும்—இன்றும்

'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டில்' —என்ற பழமொழி அனைவருக்கும் தெரிந்ததே! குழந்தைப் பருவத்திலேயே ஒன்றை நினைவுபடுத்திவிட்டால், அந்த நினைவானது சாகும் வரையில் நிலைத்து நிற்கும். சற்றும் மாருது.

உறையூரிலே வாழ்வு நடத்தும் ஒரு கிழவி. அவளுக்கொரு மகள், அவள் குழந்தையாக இருக்கும்போது. 'கண்ணே! நீ பெரியவளாக மாறியவுடன் நம் மன்னனுக்கே மண முடித்துத் தரப்போகிறேன்!' என்ருள். எப்போது? குழந்தையாக இருக்கும் பருவத்தில்! இப்போது—?

அவள் பெரியவளாகிவிட்டாள். யாரைக் கண்டாலும் தலைகுனிந்து செல்லும் காலம் வந்துவிட்டது. எதிரிடையாக நின்று பேசும் ஆற்றல், இப்போது அவளுக்கில்லை. ஆனல், குழந்தைப் பருவத்தில் தாய் சொன்னதை மறந்துவிடவு மில்லை. அந்த நினைவு எப்போதும் உண்டு.

ஒருநாள்! தாய் சொன்ன அந்தத் தலைவனை எதிர்பாராத விதமாகக் கண்டாள். உள்ளம் மாறியது; எண்ணமும் வேற்றுமைப்பட்டது.

மறுநாள்! அவள் உள்ளத்தைச் சிதைக்கவேண்டும் என் பதற்காகவே மீண்டும் சோழன் வந்தான். அப்போதும் அவள் பார்த்தாள். பார்த்த பார்வையில் இருந்த கருத்தை

அவளது தாய் உணர்ந்தாள். அன்று முதல் வாழ்த்துரை தான்! சிறைக்காவல்தான்.

வெளியே வர வழியில்லை. யாரோ தன்னை அணு அணு வாகச் சிதைப்பதுபோல் நினைத்தாள். நெஞ்சம் பதை பதைத்தது!' வஞ்சித்துவிட்டாளே தாய்!' என்று எண்ணி எண்ணி விம்மி அழுதாள். 'என்ன?' என்று கேட்க யார் இருக்கிறார்கள்? நெஞ்சைத் தவிர வேறு எத்துணையும் இப்போது இல்லை.

"நெஞ்சமே! என்னைவிட எனக்கு உறுதுணை பயக்கும் வகையில் யாருமில்லை. பலரை நம்பி நம்பி என் வாழ்வை நானே நசித்துக்கொண்டேன். கொஞ்சமே இரக்கம் இருந் திருக்குமேயானால், இப்படிச் சித்திரவதை செய்யத் துணிவார் களா? பொல்லாத உலகத்தில் பெண்ணாக ஏன் பிறந்தேன்? காதலை ஏன் வளர்த்தேன்? ஐயோ! எல்லாமே பாழ்!

நெஞ்சமே! குழவிப் பருவத்திலே-மழலை மொழி பேசிக் கொண்டிருந்த வேளையிலே என் தாய், 'உன்னை அந்த அரச னுக்கே தருவேன்!' என்றாள். இப்போதோ அவனைப் பார்க் கக்கூடாதென்றே சொல்லிவிட்டாள். இக்கொடுமையை நினைக்கும்போது பாலை நிலத்தின்கண் தோன்றும் பரிதாப நிலைமைதான் என் கண்முன்னே ஊசலாடுகிறது.

தண்ணீரின்றி கூட்டங் கூட்டமாக வருகின்ற விலங்கினங் களின் கண்ணுக்கு ஒளியாகக் காட்சி செய்கிறது கானல்நீர்! ஆகா! அதோ தண்ணீர்!' என்று நினைத்து அருகே செல்லுமாம்! அது கானல் நீரென அறியாது தடுமாறுமாம்! மயக்கமுற்று மயங்குமாம்! அப்படித்தானே என் கதியும் முடிந்தது. அன்று அன்னை பொய்கையாகத் தென்பட்டாள். இன்றோ, கானல்நீராகத் தென்படுகிறாள். நானோ, விலங்காக மாற்றம் அடைந்திருக்கிறேன். அன்று காட்டிய அன் பெல்லாம் கானல்நீர்தானா? தண்ணீர்த் தாகத்தைப் போக் கிக்கொள்ளாமல் எவ்வாறு விலங்கினங்கள் தவிக்கிறதோ, அவ்வாறல்லவா நான் துடிதுடிக்கிறேன்" என்கிறாள்.

45. குதலைப் பருவத்தே கோழிக்கோ மானை
வதுவை பெறுகென்றாள் அன்னை—அதுபோய்
விளைந்தவா இன்று வியன்கானல் வெண்தேர்த்
துளங்குநீர் மாமருட்டி அற்று.

(வி - ரை) 'இதைச் செய்கிறேன்' என்று வாக்குறுதி கொடுத்தாள். அப்படி நடந்து காட்ட வேண்டும். 'சொல்லுதல் யார்க்கும் எளிது' என்ற முறையில் வாய்மை நிற்கலாகாது. விளையாட்டாகச் சொன்னாள், அவள் தாய்! அது வினையாகவே முடிந்தது. இதைப் புலவர் மிகவும் அழகுற விளக்கிக் காட்டியுள்ளார்.

குதலைப் பருவத்தே - குழந்தைவயதிலே; கோழிக் கோமானை-உறையூருக்குத் தலைவனாக விளங்கும் சோழனை; வதுவை பெறுக - திருமணம் செய்து கொள்க; வெண்தேர் - கானல்நீர் (பொய்த் தோற்றம்); துளங்குநீர் - அலைபோல தோற்றம் செய்யும் நீர்நிலை.

* * *

## நீர்மேல் விளக்கு!

வீதி வழியாக மன்னன் வருவது பண்டைய வழக்கம்! மக்களும், அதைத்தான் விரும்பினர். வந்தால்தான் நாட்டி லுள்ள நிலைகளை உணரமுடியுமென்று அறிந்தவர்கள், அனுபவம் பெற்றவர்கள் அவனுக்கு எடுத்துரைத்தார்கள். அதுமுதல் ஆண்டில் சிலமுறை மட்டும் வருவதை வழக்க மாக வைத்துக்கொண்டான்.

அம் முறையில்தான் ஒருநாள் வந்தான். அவனைக் காணும்பொருட்டுப் பல பெண்கள் விழுந்தடித்துக் கொண்டு போனார்கள். அப்படிப் போகும்போது அந்தந்த வீட்டின் வாசற்படியில் நின்றுகொண்டிருந்த செவிலித் தாய்மார்கள். 'அங்கே போகாதே; இங்கே வா!' என்றார்கள். அவர்கள் நல்லதை நினைத்துச் சொன்னார்கள். கேட்டால்தானே!

போனார்கள்; பார்த்தார்கள்; திரும்பினார்கள். திரும்பும் போது காதல் என்னும் தொத்துநோயையும் பெற்று வந்தார்கள்.

அப்போது செவிலித் தாயானவள், "ஏ, நெஞ்சமே! அப்போது நான் தடுத்து எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். கேட்டாளா? இப்போது வேதனைப்படுகிறாள். என்னிடம் சொல்லமுடியாமல் கலங்குகிறாள். ஆத்தி மாலை அசைந்தாட-வெற்றிபெற்ற தோள்களோடு பவனி வந்தான் சோழன். அவனைப் பார்க்கச் சென்று, அழகு கெட்டுத் திரும்பினாள். இப்போது பீர்க்கம் பூவின் நிறத்தை யொத்தப் பசலையைப் பெற்றுவிட்டு அலைகிறாள். அப்போது என் சொல் நீரின்மேல் ஏற்றி வைத்த திரிவிளக்காகத் தெரிந்தது. இப்போது?" என்கிறாள்.

இப்படி ஒவ்வொரு செவிலித் தாய்மாரும் கலங்க வேண்டியவர்களானார்கள்.

46. அலங்குதார்ச் செம்பியன் ஆடெழில்தோள் நோக்கி
விலங்கியான் வேண்டா எனினும்—நலன் தொலைந்து
பீர்மேல் கொளல்உற்ற பேதையர்க்(கு) என்
வாய்ச்சொல்
நீர்மேல் எழுந்த நெருப்பு.

(வி-ரை) செவிலித் தாய்க்குத்தான் எவ்வளவு தொல்லை! சொன்ன சொற்களை மதியாமல் தன் மகள் சென்றும், அதைப் பெரிதாக நினைக்காமல், அவள் வாழ்வில் பங்கேற்றுத் துயரம் கொள்வதுதான் எவ்வளவு? வளர்த்த பாசத்தின் அன்பல்லவா!

அலங்குதார்ச் செம்பியன் - அசைந்தாடும் மாலைகளை அணிந்துள்ள சோழன்; நலன் தொலைந்து - எழிலெல்லாம் அழிந்து.

* * *

கூடலோடு ஊடல்!

திடுக்கிட்டு எழுந்தாள்! அங்குமிங்குமாகப் பார்த்தாள். யாருமில்லை. தூக்கமும் தெளியவில்லை. கண்டதும் கலையவில்லை. கனவா அது? உடலையும் உள்ளத்தையும் கெடுக்கவந்த கொலைக் கருவியல்லவா? அப்படித்தான் அவள் நினைத்தாள்.

'தூக்கத்திலுமா இன்ப துன்பம்?'—என்று பிதற்றிக் கொண்டாள். விழிப்பிலேதான் எல்லாம்! உறக்கத்திலுமா எல்லாம் புடைசூழ்ந்து வரவேண்டும்? காதலென்றால் இப்படியா? கனவென்றால் இதுவா? மனத் துயருக்குத்தான் ஓர் எல்லையில்லையா? ஒவ்வொரு நிமிடமும் உயிரோடு போராடத்தானா காதலென்னும் களத்தில் இறங்கினேன்? இப்படியெல்லாம் பொழுது விடியும் வரையிலே நினைத்துக் கொண்டிருந்தாள். தோழி வந்தாள்.

"தோழி நீ வருவதற்கு முன்னதாக ஒரு பயங்கரமான கனவைக் கண்டேன்."

"ஏம்மா! அப்படித்தான் அந்தக் கனவில் என்ன இருந்தது?"

"பூங்கொடியொத்த செல்வி! வானோங்கி வளர்ந்துள்ள தென்னையின் பாளையில் ஈக்கள் தேனைச் சேர்த்து வைக்கும் அளவிற்கு வளம் கொழித்த—காவிரி நீரால் நிம்மதியாக இருக்கும் உறையூர்க் கோமானைக் கண்டேன். கூடப்போகின்ற நேரத்தில் எங்களுக்குள் ஏதோ ஓர் ஊடல் தோன்றிற்று. அதனால் கூடல் கலைந்தது; ஊடல்தான் வெற்றி பெற்றது" என்று வருத்த மிகுதியோடு சொல்கிறாள்.

47. ஊடல் எனஒன்று தோன்றி அமைஉறாஉம்
கூடல் இழந்தேன் கொடிஅன்னாய்—நீள்தெங்கின்
பாளையில் தேன்தொடுக்கும் பாம்புனல் நீர்நாட்டுக்
காளையைக் கண்படையுள் பெற்று.

(வி - ரை) தேனைக்காத்து, சேமித்துவைக்கும் தேனீக்கள் போலவேதான் அவளும் அவனுக்கு உடனே இன்பத்

யைத் தராமல் ஊடினாள். அளவுக்கு மீறி அவனோடு ஊடினாள். அதனால் என்னவாயிற்று? ஒருவன் தென்னம்பாளை யிலுள்ள தேனை எடுக்கமுடியாதவாறு தேனீக்கள் ஓங்காரம் செய்வது போலவே அவளும் அவனிடத்தில் நடந்துகொண் டாள். அவன் பேசாமல் சென்றுவிட்டான். குறை யாருடை யது. ஊடுதல் காமத்திற்கு இன்பந்தான். அதற்கொரு அள வில்லையா ?

* * *

## நெருங்கிய நெருப்பு !

வெகு மாதங்களாகச் சோழனைக் காணாமல் மக்கள் ஏங்கினர். தோள் காணும் நாள், எந்நாளோ ? 'வெண் கொற்றக் குடையின்கீழ் ஓங்கிய செங்கோலோடு உயர்நீதி அளித்துவரும் உத்தமனைக் காணும் வாய்ப்பு இக்கண்களுக்கு எப்பொழுதுதான் கிடைக்குமோ ? நல்லவனை — அந்த நாயகனைக் காணும் காலம் வராதா என ஏங்கினர்.

பெரியவரனைவரும் ஒருங்கு கூடி மன்னரை வீதி வழியாக ஒருமுறை வந்துபோகச் செய்யத் தீர்மானித்து, அந்தப் பிரேரணையை மன்னன் முன்னே எடுத்துச் சென்றனர். அவனும் அதை ஆதரித்து 'நல்லோரே! நல்லிதயம் பெற் றோரே! நானே வருகிறேன்!' எனக்கூறி வழியனுப்பி வைக்கிறான்.

மறுநாள், தெருவெல்லாம் ஒரே அலங்காரம்! 'நம் தெரு வுக்கும் மன்னர் வருகிறாராம்!'—இதுவே ஒவ்வொரு தெரு விலும் பேச்சு! சொல்லவா வேண்டும்? ஒரே ஆரவாரம்! இளம் பெண்களுக்கெல்லாம் குதூகலம்!

"அதோ வருகிறான் மன்னன் ! வீரத் தோள்பெற்ற நல்லிளைஞன் வருகிறான்!"—இதுவே கண்டவரனைவரும் பேசிக் கொண்டிருந்தனர். இந்தப் பேச்சுக்களை உற்றுக் கவ னித்தாள் ஒருத்தி. அவனைக் காணாமலேயே, 'ஆகா! அழகான தோள்களைப் பெற்றவனாமே! வீரத்தின் விளை நிலமாமே!' என்றெல்லாம் எண்ணியவாறு காதல் கொண்டாள்.

'அதோ வந்து விட்டான்! எங்கே பூமாலை! மாறன் வந்து விட்டான்; மணமாலை எங்கே?—இதுதான் ஒவ்வொரு வீட்டிலும் பேச்சு.

இரவு வந்து விட்டது!

நிலவும் வந்து விட்டது. மன்னன் மட்டும் அவளுள்ள வழிப்பக்கம் இன்னும் வரவில்லை. 'எப்போது வருவான்?' என்ற ஏக்கமே பெரிதாகப் போயிற்று. எப்படியோ அவனும் வந்துவிட்டான். அனைவரும், கைகூப்பித் தொழுகின்றனர். 'எங்கள் தெய்வமே, நீர் வாழ்க!' என மனதிற்குள் வாழ்த்தியபடி வணங்கினர். மன்னனும் வணங்கினான்!

அதோ அந்த வீடு! ஆனால், வெளியே ஆளில்லை! வெறிச் சென்று இருந்தது. காணவேண்டுமெனத் துடித்த அவள் மனம் எந்தக் குகைக்குள் புகுந்ததோ? வெளியில் தலை காட்டவே இல்லை.

அந்தத் தெருவை விட்டு அவன் மறைய இரு நிமிடங்கள் தான் குறுக்கே இருந்தன; அந்த நிமிடமும் மறைந்தது; அவனும் மறைந்தனன். குகைக்குள்ளே ஒளிந்திருந்த மனம் வெளியே தலை நீட்டியது. அவன் இருந்தால்தானே! மனம் கவலையோடு திரும்பியது; அவளைத் தூண்டியது. அப்போது தான் அவளுக்கு இல்லாத கோபமெல்லாம் இருந்தது போல் வெளிவந்தது.

''ஏ, பாழும் மனமே! சோழனைப் பார்க்க ஆவலுற்றேன். கண்டதென்ன? வீதி வாசற்படிக்கு அருகாமையில் செல்லும் போது திருடனைப் போல் பின்னோக்கி வந்த நாணமானது போகவிடாமல் தடுத்து நிறுத்தியது. காதல் என்னும் கருவியோ தூண்டியவண்ணம் இருந்ததால் முன்னே போகும் படிச் செய்தது. ஒருவாறு பார்த்தேன். 'அழகுதான் என்ன! அந்தத் தோள்களிலே பொருந்தியுள்ள கம்பீரத்தின் பிரதிபலிப்புத்தான் என்ன! ஆகா! அவனன்றோ நமக்குரியவன்!' என்று வருணித்துக் கொண்டிருக்கையிலே போய்விட்டானே! மூங்கிலின் இருபுறத்திலும் தீப்பற்ற, அதனால் அம் மூங்கிற் குழாய்களுக்குள்ளே வாழும் எறும்பு இங்குமங்குமாக

ஓடுவதைப் போலல்லவா என் வாழ்வும் ஆனது? என் மனமும் ஆனது? ஐயோ!'' என்கிருள்.

48. நாள்ஒருபால் வாங்கநலன் ஒருபால் உண்நெகிழ்ப்பக்
காமருதோள் கிள்ளிக்(கு) என்கண் கவற்ற—
யாமத்(து)
இருதலைக்கொள்ளியின் உள்எறும்பு போலத்
திரிதரும் பேரும்என் நெஞ்சு

(வி - ரை) பார்க்காத போது கண்டபடி பேசுவதும், கண்டுவிட்ட பிறகு ஆமை போல் அடங்குவதும் இவ்வுலகத்தின் சட்டமாக இருக்கிறது. பாருங்களேன், அவன் வராத போது, 'பார்க்கவேண்டும், அந்தக் காவலனை' என ஆவலோடு இருந்தாள். அருகில் வந்தவுடன் அமைதியாக இருந்துவிட்டாள். இதற்கு யாரென்ன செய்ய முடியும்? துணிவைக்கூடவா பிறர் கற்றுக்கொடுக்க வேண்டும்? அந்த அளவிற்குக்கூட அவளுக்குத் தனித்திறன் இல்லையென்ருல் காதல்தான் எப்படி வெற்றி பெறும்?

நாணொருபால் வாங்க—ஒரு பக்கத்தில் நாணம் இழுக்க; நலன் ஒருபால்—நலம் ஒருபக்கம் பற்றி முன்னே இழுக்க,

* * *

## நெஞ்சமே, பேசு!

நள்ளிரவு! புள்ளினங்கள் நடமாடும் நேரம்! ஊரெல்லாம் உறக்கம். உயிரெல்லாம் அயர்ந்து உறங்கும் வேளை அது. ஆனாலும் ஒருத்தி மட்டும் அதற்கு விலக்காக விளங்குகிருள்.

நிலவொளி வரவர, வெகு தொலைவிலுள்ள அரண்மனை, அவள் கண்களுக்கு நன்ருகத் தெரிகிறது. அங்கேயுள்ள அந்தரங்க அறையும், நுட்பமான அவள் கண்களுக்குத் தெரிந்தது. அப்படியே பார்த்துக் கிடந்தாள். மளமளவெனக் கண்ணீர் வடிந்தது. தன்னை அறியாமலேயே ஒவென அழுதாள்.

குமுறிக் குமுறி விம்முதலோடு விக்கி விக்கி அழுதாள். அந்த விம்மலும் ஏக்கமும் அவன் காதிலே எங்கே விழப் போகிறது?

நடுநிசி வந்தது! அப்போதும் அவள் படுக்கைக்குப் போக வில்லை. நிலா முற்றத்திலே உட்கார்ந்து கொண்டு ஏங்கிக் கிடந்தாள். மனத்தையே தூதாக அனுப்பிக்க உறுதி கொண்டாள்.

“மனமே! உனக்கு வலிமை அதிகமுண்டு. உன்னால் முடி யாத காரியம் ஒன்றுமில்லை. அதோ தெரிகிற அந்த அரண் மனைக்குப் போ! அயர்ந்துறங்கும் அரசனைத் தட்டி எழுப்பு! அவன் விழித்தெழுந்து நெருங்கி வருவான். அதுசமயம் நாண மடையாதே! நல்லொளி படர்ந்த புலிவடிவம் பெற்றுள்ள வெற்றிக் கொடியுடையவனைக்கண்டு வணங்கு! காவிரிக்குச் சொந்தமான சோழனிடம் என் குறையைச் சொல்! மெலிந் துவிட்ட தோள்களைப்பற்றி விளக்கமாக எடுத்துக்கூறு! அவ ளுக்கு அருள் புரியாமல் உறங்குகிருயே! இது, உனக்கு அழ காகுமா? உன் கண்களென்ன மரக்கண்ணு? கண்ணோட்டம் சிறிதுமில்லையா? இரக்கங் கொள்! காதல் என்னும் பொருளை, அவளுக்குப் பரிசாகக் கொடு. வா வா! என அழை. இதுதான் நீ எனக்குச் செய்யவேண்டிய உதவி” என, இரக்கமோடு விழைகிருள்.

49. வரக்கண்டு நாணுதே; வல்லைஆ நெஞ்சே
மரக்கண்ணோ மண்ஆள்வார் கண்என்(று)—
இரக்கண்டாய்
வாள்உழுவை வெல்கோடியான் வண்புனல்
நீர் நாடற்(கு)என்
தோள் அழுவம் தோன்றத் தொழுது.

(வி-ரை) மனத்திற்கு மதிமயக்கம் ஏற்பட்டுவிடுமானுல் என்ன செய்கிரேும் என்பது அதற்கே புரியாது. அந்நிலையைத் தான் இந்தப் பாடலில் நாம் காணுகிரேம். விம்மியழும் விழி யாளுக்கு மனமும் ஒரு பெண்ணுகத் தோன்றுகிறது. இருண்

டவள் கண்களுக்குத் தெரிவதெல்லாம் குழப்பக் காட்சியே! அவளுக்கும் அப்படித்தான் ஏற்பட்டது. இல்லையானல் தெளிவு இருந்திருக்குமே!

வல்லேஆ-உறுதி பெறுவாயாக; வாள் உழுவை-வலிமை மிக்க புலியைச் சின்னமாகப் பொறித்த; வெல்கொடியான்-வெற்றியே பெற்றுவரும் கொடியை யுடைய கொற்றவன்; தோள் அழுவம்-மெலிந்துள்ள தோளேக் குறித்து.

* * *

## பனியோடு பணிவு

துணியை இறுகப் போர்த்திக்கொண்டு எதை எதையோ எண்ணியவாறு படுத்துக்கிடந்தாள். வாடைக் காற்று 'ஓ' வெனக் கூச்சலிட்டபடி அவள் வீட்டுக் கதவின் மீது பலமாக மோதியது. அவ்வளவுதான்! பெருத்த நடுக்கத் தோடு எழுந்து உட்கார்ந்தாள். "என்ன இது? ஒரே ஓசை? யாரது?" என்ருள், பேச்சு இல்லே. மறுமுறையும் படுத்தாள். திரும்பவும் அந்தப் பாழாய்ப் போன காற்று அவள் நடுங்கும் வண்ணம் கதவைத் தட்டுவதுபோல் சத்தம் செய்தது. திரும் பவும் எழுந்து உட்கார்ந்தாள். "பேயின் சத்தமா?" என ஐயுற்றுக் கதவைத் திறந்தாள். அதுவேளேதான் அவளுக்கு உண்மை புலப்பட்டது. வாடைக் காற்றின் பேரோசையால் எழுந்த அமளி என்பதை உணர்ந்து, திரும்பவும் படுக்கையில் வந்து உட்கார்ந்தபடி பேசத் தொடங்கினுள்.

"ஏ, வாடைக் காற்றே! மன்னனின் கட்டளேப்படி வரி வசூலிக்க வருபவர்கள் செய்கின்ற முழக்கத்தைப் போலல் லவா பெருஞ் சத்தம் போடுகிருய்? அதற்கு என் வீடுதாஞ கிடைத்தது? என்னேத் துன்புறுத்த உன்னேயா அனுப்பினுன்? பெண்களிடத்தில் வரி வசூலிக்கவா உன்னே இங்கு ஏவினுன்?" என்று சொல்கிருள்.

வாடைக் காற்று, அவளே விட்டுப் போனுல்தானே! ஒரே பிடிவாதமாகவல்லவா நின்றிருக்கிறது? ஆகவே, அவள் மறு முறையும் பேசத் தொடங்குகிருள்.

"வாடைக் காற்றே! இப்படி ஏன் என் உயிரை வாங்குகிறாய்? போய்த் தொலையேன்? மன்னன் வரட்டும்! நான் பேசிக் கொள்கிறேன். உன் மன்னன் எனக்கு நல்லருள் புரிவதற்கு முன்னதாக நீ ஏன் வந்தாய்? 'போ, போ!'" எனச் சொல்கிறாள். அப்போதுதான் அவள் மனத்திற்குச் சற்று அமைதி ஏற்படுகிறது. காரணம் வாடைக்காற்று போய் விட்டது, அதனால்தான்!

இவ்வளவுக்கும் அடிப்படை, அன்று அவன் குதிரைகள் பூட்டப்பட்ட தேரிலே ஏறி ஊர்வலம் வருகிறான். உடன் யானைகளும் சூழ்ந்து வருகின்றன. அதனால் ஏற்பட்ட கோளாறுதான் வாடைக் காற்றோடு வாதாடுகிறாள்.

50. பேயோ பெருந்தண் பனிவாடாய் பெண்பிறந்தா
ரேயோ உனக்கிங் கிறைக்குடிகள்—நீயோ
களிபடுமால் யானைக் கடுமான்தேர்க் கிள்ளி
அளியிடை அற்றம்பார்ப் பாய்

(வி-ரை) மனத் தடுமாற்றக் காட்சி! மங்கையின் கண்களுக்குத் தென்பட்ட வாடைக்காற்று! புரியாது பேசுகின்ற பேச்சு! - இத்தனையும் காவலன்பால் வைத்த பாசத்தால் வந்த வேதனை!

* * *

## பனியே, ஓடு!

கோமகன் அவன்! சோழர் குலத் திலகம்! சிந்தனைத் தேனருவி யென அயலகம், அவனைப் போற்றும்! அவ்வளவு பெரியவன்! அவன் ஆணைக்கு அடங்கி நடப்பவர்கள் ஆயிரமாயிரம்பேர்! அவன் மீதுதான், அவன் கீழ் குடியிருக்கும் ஒருத்தி காதல் கொண்டாள். நள்ளிரவு வந்ததும் உடன் வண்டும் பண்ணிசைத்தது. அது, அவனிடத்திலிருந்து வந்ததாதெனக் கருதி. அவனைக் குறித்து வெளியே நின்றுகொண்டிருக்கிறாள். பனியின் தொல்லையை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை,

"ஏ, பனியே! நீ ஏன் இங்கு வந்தாய்? இதற்கு முன்பெல் லாம் இந்தப் பட்டினத்திற்கு காவலில்லாமல் இருந்தது. இப் போது அப்படியில்லை, நிறையக் காவல்! நீ இங்கிருந்து தப்பி ஓடிப்போய் விடு! நலங்கிள்ளி பார்த்தானனால், அவன் கையிலே யுள்ள வேல்தான் உன் மார்பில் பாயும்; அதன் பிறகு குருதி வழிந்தோடும். இதெல்லாம் வீணன தொல்லை. அதுவும், இப்போது இங்கு வருவதாக, வண்டைத் தூதாக அனுப்பியிருக்கிறுன். அந்த வண்டு பகலே வந்திருக்க வேண் டியது, ஆனல், அப்படி வராமல் செங்கமலம், குவளை போன்ற பூக்களில் இன்பத்தை நுகர்ந்துவிட்டு இப்போது தான் வந்தது. அவன் குறித்த நேரமும் இதுவே! போ... போ!" எனப்பிதற்றுகிறுள்.

51. நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணுட்டுத்
தாமரையும் நீலமுந் தைவந்-தியாமத்து
வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு.

(வி-ரை) எல்லோமே காதல் மயக்கம், பனி பேசுமா? ஆனலும் அது பேசுவதாக நினைத்துப்பேசினுள். வண்டு பண் ணிசைத்ததை 'வருகிறேன்!' எனச் சோழன் தூதுவிட்டதாக நினைத்து நெஞ்சம் நெகிழப் பேசுகிறுள். என்ன காதலோ, இந்தக் காதல்? தெளிவில்லாத காதல்!

* * *

## 3. பாண்டியன்

### வேலும் வேலனும்!

அக்கால மக்கள், அழகுள்ள பொருள் எது எதுவோ அவற்றையெல்லாம் பார்த்து வாழ்த்தி நின்றனர். அங்ஙனம் வாழ்த்தக்கூடிய அளவிற்குள்ள இயற்பொருளுக்கெல்லாம் சேர்த்து ஒரு பெயர் தந்தனர். அதுதான் *முருகன்! அழகை அழகனுக்கி, தோகை விரித்தாடுகின்ற மயிலை ஏறிச் செல் கின்ற வாகனமாக்கி கடம்பப் பூமாலை சூட்டுகிருர்.

கவிஞரும் கலைஞரும் எழிலோடு பேசும் அளவிற்கு ஆற்றல் படைத்தவர்கள்! ஆகவேதான் அதைப் போற்றிப் பாண்டியனை வாழ்த்தத் தொடங்குகிருர், இப்பாடல் புனைந்த புலவர்.

பகைவரைச் சின்னபின்னப்படுத்தி நிற்கும் வேலை வைத் துள்ள வேற்கை வேந்தனுக்கு, இனிய தமிழால், இன்பக் கருத்தைக் குழைத்துத் தமிழ் மாறனுக்குப் படைக்கிருர். அதற்குச் சான்று கடம்பப்பூ மாலையாகும். அழகுக்கு கடம்பப் பூமாலையும் அரசனுக்கு இன்பப் பாமாலையையும் சூட்டுகிருர். பாண்டியன், தமிழ் என்னும் மாலையைத்தான் பேரார்வத் தோடு அணிவான். 'தமிழை வளர்த்த தகைமையாளன்!' என்ற பெயர்கூட அவனுக்கு உண்டு.

52. மடங்கா மயில்ஊர்தி மைந்தனை நாளும்
கடம்பப்பூக் கொண்டேத்தி அற்ருல்—தொடங்கமருள்
நின்றிலங்கு வென்றி நிறைகதிர்வேல் மாறனை
இன்தமிழால் யாம்பாடும் பாட்டு.

* * *

---

*முருகு+அன்=முருகன்; அழகு+அன்=அழகன்.

## உலகப் பூக்கள்!

பாண்டியன் கட்டிக்கொள்ளும் பூ ஒன்றே. ஆனால் பலநாட்டுப் பூக்களும் அவன் முடிமேல் திகழ்ந்தன. எப்படி வந்தது? அந்தந்த நாட்டு மக்கள் அவனைப் பார்க்க வரும் போது தன் நாட்டில் பூக்கும் பூவைக் கொய்து வந்து முடிக்குச் சூட்டுவர். அப்படிச் சூட்டும்போது சில பூக்கள், அவன் பாதத்தின்கீழ் விழுந்தன. அப்பூக்களைக்கொண்டு, எந்தெந்த நாட்டைச் சார்ந்தவர் வந்திருந்தனர் என்பதை அறிந்து கொள்வான். அந்த அளவிற்கு அவன் அயலகத்தாரிடம் மதிப்புப் பெற்றிருந்தான். இக் கருத்தோடு கற்பனை குழைந்த உருவகம் பாட்டில் அமைந்துள்ளது. பாட்டிற்கு வாருங்கள்! மெய்ப்பொருள் காணுங்கள்! நல்லதை மட்டும் தேர்ந்தெடுங்கள்!

53. செங்கண் நெடியான்மேல் தேர்விசயன் ஏற்றியபூப்
பைங்கண்வெள் ஏற்றூன்தாள் கண்டற்றால்—எங்கும்
முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப் படும்.

(வி - ரை) பாண்டியன் என்றாலுமே பாரெல்லாம் புகழ் பெற்றவன் என்றுதான் பொருள். இல்லையென்றால் அயலகத்துப் பூக்களெல்லாம் அவன் பாதம் நோக்கிப் பணியுமா? இதைத்தான் புலவர், பொய்க்கதை யொன்றோடு புனைந்து காட்டுகிறார்.

வரலாறு - இந்தப் பாட்டிலே இருக்கிறது!

நறுமண மலரோடு வெற்று மலரும் இப்பாட்டில் குழைந்து இருக்கிறது. பால் - பால்தானே? நீர் - நீர்தானே!

* * *

## வியப்பும் வினாவும்!

தென்னவனைப் பார்க்கின்றார் புலவர். நன்றாகப் பார்க்கின்றார். அவர் பார்ப்பதைப் பார்த்தால் உங்களுக்கெல்லாம் பெரு வியப்பாக இருக்கிறதல்லவா?

இருக்கத்தான் செய்யும்!

தென்னவன் பார்க்கிறான். "புலவர் பெருமானே! ஏன் இப்படி வியந்து பார்க்கிறீர்கள்?"

"தமிழ்த் தலைவ! தெளிவு பெற்ற நீரை, தன்னகத்தே கொண்டு விளங்கும் கூடலார் கோமானே! நும் மார்பில், பிடரி மயிரினையுடைய குதிரையைக் கொன்று, குடத்தைக் கொண்டு கூத்தாடி, பூந்தொடி சூடியிருந்த நப்பின்னையைத் தழுவிய அக்காலத்தில் ஒரு சிறு மறு இருந்தது. இப்போது அது, எங்கு ஒளிந்துகொண்டதோவெனப் பார்த்தேன். வேறொன்றுமில்லை!" என்கிறார்.

புலவர் கேள்விக்குப் புரவலனிடமிருந்து பதில் வரவில்லை. அதன் பிறகு சொன்னாரோ என்னவோ? புலவர் நமக்குக் காட்டுவது இவ்வளவுதான்?

54. கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால்—யாங்
கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு.

(வி - ரை) மன்னன் வியப்போடு பார்த்தான்; புலவரோ விறுக்குறியெழுப்பி நின்றார். சொல்லும் முறையில்தான் என்ன குழைவு? எவ்வளவு இனிமை! எல்லாமே இன்பம்!

* * *

## அஞ்சித்தான் ஆகவேண்டும்!

பெயர் மட்டுமா பாண்டியன்? இல்லையே! பல்வளத்திலும் பாண்டியன்தான். தென்பக்கம் என்றாலே மாற்றாருக்குத் திகைப்புதான்! அதோடு பொறாமையுங்கூட!

மாறன் மண்ணிலே செம்பொன்! தோண்டித் தோண்டிப் பார்த்தால் பொன்மயம்! அகழ அகழ அகப்

படும் பொன் கட்டிகள்! அதுமட்டுமா? அறிவைப் பரப்பும் புலவர்கள்தாம் எவ்வளவு? சங்க இலக்கியங்கள் எத்தனை? அப்பப்பா! சொல்லும் தரமன்று!

அவன் நாட்டிலே அமர்ந்துள்ள ஆழ்கடலுக்குள் கை வளையல்களுக்கேற்ற சங்குகள்! ஆரத்திற்கேற்ற அழகு முத்துக்கள்! இத்தனையும் உண்டு. அத்தனையும் சக்திபெற்ற பொருள்கள்!

அவன் ஆட்சியின்கண் உள்ள மலையிலோ ஆயிரக் கணக்கான யானைகள்! கருப்பொருள்கள்! இவ்வளவு பொருளையும் தன்னகத்தே கொண்டு விளங்கும் தென்னவன் மீது யாருக்குத்தான் பொருமை இருக்காது. ஆயினும் போர் தொடுக்க முன்வரமாட்டார்கள். அவன் கையிலே ஒளி பொருந்திய வேல் இருக்கிறது. படையெடுத்து வருகின்ற மாறுபட்டவர்தம் மார்புகளைப் பிளக்காமல் விட்டுவிடுவ தில்லை. அவ்வளவு கொடுமை வாய்ந்த வேல், அவன் கையில்! இப்படி இருக்கும்போது எப்படித் துணிந்து வருவர்? அதனாலேயே அயலகத்தார் அவனுக்கு அஞ்சி வாழ வேண்டியவரானார்கள்.

55. பார்படுப செம்பொன் பதிபடுப முத்தமிழ் நூல்
நீர்படுப வெண்சங்கும் நித்திலமும்—சாரல்
மலைபடுப யானை வயமாறன் கூர்வேல்
தலைபடுப தார்வேந்தர் மார்பு.

(வி - ரை) பாண்டியன் ஒருவன்தான் அதிகமாக மொழி யின்மீது ஆர்வங்காட்டி வளர்த்துவந்தவன். முத்தமிழைப் போற்றிப் பூசை செய்தவன். அதனாலேயே அவன் நாடு அறிவுள்ள—தெளிவுள்ள நாடாக விளங்கியது. இதைத்தான் புலவர் மறைமுகமாக வெளிப்படுத்துகிறார். அவன் நாட்டில் பொன்னுக்குப் பஞ்சமில்லை; முத்துக்குக் குறைவில்லை; வெண்சங்குக்குக் குறைச்சலில்லை.

யானைகளோ அதிகம்! இயற்கை வளங்களோ ஏராளம்! அத்தகைய அரசனை வெல்ல அனைவரும் பின்வாங்குவர். யாரேனும் துணிந்து வந்தால் மரணமடைவர். 'பாண்டியன்'

என்ற பெயர் கேட்ட மாத்திரத்திலேயே மருளுவர்! அவ்வளவு அச்சம். அதனாலேயே அவன் பகை கொள்ளாது உறவு பூண்டு அனைவரும் இருந்தனர். பணிந்தே நடந்தனர். தமிழ்ப்பணி செய்தனர். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்ட பாடல்தான்.இது ! நயத்தோடு நிற்கும் பாமாலை! புலவர் தம் சிந்தையிலே புரண்டுவந்த சுயசரிதை !

* * *

## பாம்பும் பகைவரும்!

பெருமை மிக்க மாணிக்கக் கற்களைத் தன்னகத்தே பெற்றிருக்கும் ஐந்து தலையையுடைய நாகம், வானத்தைக் கண்டால் நடுங்கும் தன்மைகொண்டது. நாகம் என்றாலே நஞ்சினை வைத்திருப்பது என்பதுதான் பொருள். அந்த நாகம், கார்காலத்தைக் கண்டாலே புற்றைத் தேடும். வானத்திலிருந்து இடி இடித்தால் அதன் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும், அவ்வளவு அச்சம்!

பகைவர்களும் பாண்டியனைக் கண்டு அப்படித்தான் அஞ்சலாயினர். வெஞ்சமர் புரியும் வேலானைக் கண்டாலே ஓடுவதிலேதான் மாற்றாரின் போர்ப்படை இருக்கும். அவ்வளவு வலிமையுடையவன் அவன்.

களம் அமையுமாம். காவலன் களத்தை நோக்கி வருவானும். வரும்போதே ஒளி பொருந்திய வேலும் ஊடே வருமாம்! அதைக் காணும் பகைவர்கள் இருக்குமிடம் தெரியாமல் ஓடி மறைவார்களாம்! அத்தகைய ஆற்றல் படைத்தவன் பாண்டியன்.

ஓடிய பகைவர்களின் கனவிலே பாண்டியன் தோன்றினால், 'பாண்டி...இல்லை, இல்லை! நானில்லை!' எனப் பிதற்றுவார்களாம். வேல் கண்டால் விழுந்து எழுந்து ஓடுவார்களாம். அவ்வளவு அச்சம்! பாம்போ, படையெடுத்து வரும் மேக முழக்கங் கேட்டு ஓடும். பாண்டியனை எதிர்க்க வரும் பகைவர்களோ பாண்டியன் கையிலேயுள்ள வேலைக் கண்டு ஓடி ஒளிவர். எப்படி இருக்கிறது இது ?

56. அருமணிப் பைந்தலை ஆடரவம் வானத்(து)
உருமேற்றை அஞ்சி ஒளிக்கும்—செருமிகுதோள்
செங்கண்மா மாறன் சினவேல் கனவுமே
அங்கண்மா ஞாலத்(து) அரசு.

(வி - ரை) இடி விழுவதற்கு முன்னே மின்னலைக் கண்டு நாகம் அஞ்சும். அவ்விதமே பாண்டியன் களத்திலே வந்து நின்றால், எதிராளியாக உள்ளவர்கள் அஞ்சி ஓடி ஒளிந்து கொள்வர். இதைத்தான் இந்தப் பாடல் விளக்குகிறது. பகைவருக்குப் பாம்பை உவமையாக்கி, பாண்டியனுடைய வீரத்திற்கு வேலை எடுத்துக்காட்டாக்கிப் பாடலை முடிக்கிறார்.

அருமணி - பெருமையாகப் பேசப்படுகின்ற மாணிக்கக் கல்; பைந்தலை - ஐந்து தலையையுடைய; ஆடரவம் - நடனமாடும் பாம்பு; உருமேற்றை அஞ்சி - இடிக்கு முன்னே தோன்றும் மின்னலைக் கண்டு; அங்கண்மா ஞாலத்து அரசு - பரந்த மாநிலத்திலுள்ள மன்னர்கள்.

* * *

## பிறந்த நாள் !

ஒரு வாரமாகத் தொடர்ந்து போர்! பாண்டியனை அணுகி வந்த அனைவரும் இருக்குமிடம் தெரியாமல் ஓடி ஒளிந்தனர். பாண்டியனுடைய ஆட்கள் பகைவர் மதிலை முற்றுகை இட்டனர். கோட்டைக்குள் இருந்த மக்கள், "கோட்டையை அக்கொற்றவன் தூள் தூளாக்கினால் நாம் என்ன ஆவோம்? இதுநாள் வரைக்கும் சேகரித்து வைத்திருந்த பொருள்கள்தான் என்னவாகும்?" என்று பேசிக் கொண்டு இருட்டில் இருக்கின்றனர்.

வெளியே பாண்டியன். அவனைக் கண்டு ஓடோடி வந்து ஓர் ஓலையை நீட்டுகிறான் ஒருவன். ஓலையிலுள்ள செய்தியைப் படித்துப் பார்த்த பாண்டியன், "போர் வீரர்களே! உங்

களுக்கொரு பூரிப்பான செய்தியைச் சொல்லப் போகிறேன். வெல்லும் புகழோடு வேற்று நாட்டிலே மாற்றார் புகழும் வண்ணம் போர்ப்பரணி பாடும் என் பொன்னன வீர இளைஞர்களே! இன்று உங்கள் மன்னன் பிறந்த தினம்! விழாக்கொண்டாட வாரீர்!'' என, தம் வீரர்களுக்கு விடை யளிக்கிறான்.

பாண்டியனின் பொன்னுரையைச் செவி சாய்த்துக் கேட்ட படைத் தலைவன், பகைவரைக் கண்டு, ''பகை யோரே! இன்று எம் மன்னர் பிறந்த தினம்! ஆகவே போரில்லை. அஞ்சாது வெளியே வாரீர்! யானை, தேர், இசைக் கொத்த குதிரை—இம்மூன்றையும் அலங்கரித்து எம் மன் னரைப் பாராட்டிப் புகழ்ந்தேத்தும் வண்ணம் பவனி வரட் டும்! உம்முடைய அரண்மனை வாயிலின் எழில் ததும்பும் கதவைத் திறந்து வெளியே வாருங்கள். அச்சம் வேண்டாம்! திருவுத்திராடத்தில்தான் எம் மன்னர் பிறந்தார். அதற் காகவே உங்களுக்கு விடுதலை! சிறைக் கைதிகளுக்கு விடுதலை! இந்நாள் போருக்குரிய நாளல்ல! புன்னகையோடு வீற் றிருக்க வேண்டிய நாள்!'' என்கிறான்.

57. கண்ணார் கதவம் திறமின் களிறொடுதேர்
 பண்ணார் நடைப் புரவிபண்விடுமின்—நண்ணாதீர்
 தேர்வேந்தன் தென்னன் திருவுத்தி ராடநாள்
 போர்வேந்தன் பூசல் இலன்

(வி - ரை) போர் கண்டு அஞ்சிய பகைவர்களை - புறங் காட்டி ஓடி ஒளிந்த புல்லர்களை, பாண்டிய நாட்டுப் படைத் தலைவன் உரங்கொடுத்து வெளியே வரக் கூறுகிறான். இதி லிருந்து பாண்டியனின் வீரச் செயலும் திண்தோள் வலிமை யும் எளிதாக விளங்குகிறது.

கண்ணார் கதவம் - கோட்டைக்கு வெளியேயுள்ள அகன்ற வாயிலை; பண்விடுமின் - அலங்காரஞ் செய்து வெளியே உலாவ விடுங்கள்; பூசல் இலன் - போர் செய்ய மாட்டான்.

* * *

## நாடு கண்ட நாவலர் !

பாண்டிய நாடா? பல்வளம் பெற்றதாயிற்றே! வரு வோரையும் போவோரையும் கண்டால், ஏதோ இங்கு திரு விழாதான் நடைபெறுகின்றதோ என நினைப்பர். அவ்வளவு செழிப்பான நாடாயிற்றே, தென்பாண்டி!

அங்கு வாழ்கின்ற ஒருத்தி, வேறு வேலையாக வேற் றூருக்குச் செல்கிறுள். சென்ற ஊரிலோ ஒரே வெய்யில்! 'அப் பப்பா!' என்றபடி அவ்வூரிலுள்ள தம் உறவினர் வீட்டை அடைந்தாள். அப்போது அவள், "அம்மா! உங்கள் ஊரிலே என்ன வெய்யில்! எங்கள் பாண்டிய நாட்டில் இப்படி என்றுமே இருந்ததில்லை. எப்போது வந்தாலும் குளிர்ச்சி தான்! முத்துக்களால் கோர்த்த வெண்கொற்றக் குடையின் கீழ், நீதியிலிருந்து பிறழாவண்ணம் ஆட்சி செய்கிருன். வெண் கொற்றக் குடையைப் போலவே நாடும் குளிர்ச்சியாக வுள்ளது. சங்கினங்கள் பெற்ற முட்டைகள் மணல் முழுமை யும் முத்துக்கள் போல் தோன்றும். புன்னை மரத்திலிருந்து உதிர்ந்து கிடக்கும் அரும்புகளின் அழகுதான் என்ன! அடடா! கமுகுப் பாளையிலிருந்து விழுந்த மணிகளிடத்தில் தான் என்ன கவர்ச்சி! எங்கு பார்த்தாலும் இதே காட்சி. நீ அங்கு வந்தால் உண்மையிலேயே அவைகள் முத்துக்க ளென்றே கருதுவாய்! அந்த அளவிற்குச் செழிப்பு மிகுந்த நாடு. காணும் இடந்தோறும் மாமரங்கள்; தென்றலை அள்ளி வரும் பூந்தோட்டங்கள்! இத்தனையும் அங்குண்டு. இங்கோ வறட்சிதான் மிகுதி. அங்கு கமுகு மரத்தைப் பார்த்தால் யாரோ வழிநெடுக பந்தல் போட்டுள்ளது போலவே மிளிரும். ஒரு முறை பாண்டிய நாட்டுக்கு வா!" என்று சொல்கிருள்.

8. நர்தின் இளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்
பந்தர் இளங்கமுகின் பாளையும்—சிந்தித்
திகழ்முத்தம் போல்தோன்றும் செம்மற்றே தென்னன்
நகைமுத்த வெண்குடையான் நாடு.

(வி - ரை) நாட்டு வளத்தை எடுத்தியம்பும் முறைதான் என்னே! அந்நாட்டிலிருந்த செல்வச் செழிப்பின் மாட்சி தான் என்னே! 'உண்மையிலே, அந்தக் காலத்தில் நாம் பிறக்காமல் போவிட்டோமே!' என்ற எண்ணம் வருகிறதல்லவா ?

* * *

## கூடல் மாநகர்

பாண்டிய நாட்டிலுள்ள ஒவ்வொரு தெருக்களிலும் ஓர் அதிசயம் இருக்கும். இப்போது ஒரே ஒரு தெருவைத்தான் நம் கண் முன்னே விளக்கமாகக் காட்டுகிருர், புலவர்!

நள்ளிரவு!

வீதியிலேயுள்ள ஒவ்வொரு மாடங்களிலும் மங்கையர்கள். அவர்களோடு கொஞ்ச வந்த இளைஞர்கள். அந்த இளைஞர்கள் வரும்போதே நறுமணச் சந்தனத்தைக் குழைத்து எடுத்து வந்திருந்தனர். எதற்காக ? அவர்களது மார்பிலே பூசி மகிழ. ஆனல் நடந்ததென்ன ?

அதுதான் வேடிக்கை! கூடுவதற்கு வந்தவர்கள் ஊடி நிற்கும் அணியிழையாரைக் கண்டனர். குங்குமத்தோடு கூடிய சந்தனத்தைக் கொடுத்தனர். அவர்களோ, இருந்த ஆத்திரத்தில், சாளரத்தின் வழியாக அந்தச் சந்தனத்தைக் கீழே ஊற்றினர். அந்தத் தெரு முழுமையும் ஒரே சேறு மயம்! அவ்வழியாக வருவோரும் போவோரும் விழுந்தெழுந்து சென்றனர். அவ்வளவு செழிப்பு மிக்க நாடு பாண்டிய நாடு.

59. மைந்தரோ(டு) ஊடி மகளிர் திமிர்ந்திட்ட
குங்கும ஈர்ஞ்சாந்தின் சேறிழுக்கி—எங்கும்
தடுமாறல் ஆகிய தன்மைத்தே தென்னன்
நெடுமாடக் கூடல் அகம்.

(வி-ரை) பாண்டிய நாட்டிலே எந்த அளவிற்குச் செல்வம் இருந்தது என்பதற்கு இப்பாடலே தக்க சான்று. நறுமணச் சாந்து சேறுபோல் தெருவிலே இருந்ததென்ருல்

செல்வத்தைப் பற்றித் தனியாக எடுத்துச் சொல்லவா வேண்டும் ?

* * *

## திறை செலுத்த மறுப்போரே !

"கேளும் ! எங்களுடைய மண்ணில் நடமாடும் சிற்றரசர்கள், நீங்கள்! திறை செலுத்தாமல் இருப்பதென்ன? திறை செலுத்தாமல் இனியும் இருப்பீர்களானல் வாழ்வு வீழ்ந்து விடும்! எச்சரிக்கை செய்கிறேன். இந்நிலவுலகம் முழுமையும் என் மன்னனுக்குச் சொந்தம்! அவன் தோள்களிலே புரண்டாடும் வெற்றிமாலையும், ஆட்சியைப் பற்றிச் சீரிய முறையில் எடுத்தோதும் வெண்கொற்றக் குடையும் நுமக்குத் தெரியாததல்ல! அப்படித் தெரிந்திருந்தும் இப்படித் திறை கட்டாமல் இருப்பதேன் ? புவியைக் காப்பவன் எங்கள் புரவலன்! அவன் ஆணைக்கு அடங்காதவர் யாருமில்லை. தேவர்களும்கூட இங்கு காலடி வைக்கப் பயப்படுகின்றனர். என்னதான் நாம் வல்லவர்களென்றாலும் பாண்டிய நாட்டிலே வாலாட்ட முடியாது என்பதும், அப்படியும் மீறிப் போனல் மணிப்பூணை அறுத்தெறிந்துவிடுவார்களென்பதும் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். நீங்களென்னவென்றால், அவன் குடைக்கீழ் இருந்து கொண்டே திறை செலுத்தாமல் இருக்கிறீர்கள். ஆகவே, திறையை உடனே செலுத்தி விடுங்கள்! இல்லையேல் தொல்லை தான்," என்று,உண்மையை எடுத்துக் கூறுகிறான்.

60. நேமி நிமிர்தோள் நிலவுதார்த் தென்னவன்
காமர் நெடுங்குடைக் காவலன்—ஆணையால்
ஏம மணிப்பூண் இமையார் திருந்(து)அடி
பூமிமிதியாப் பொருள்.

(வி-ரை) தென்னவனைப் பற்றி மிகைப்படுத்திக் காட்டும் பாடல் இது. தேவர்களும் அஞ்சினராம் ; அவன் மண்ணில் காலடி எடுத்து வைத்தால் வரி போட்டு விடுவானே என்பதற்காக! அந்த அளவிற்குத் தென்னவன் புகழ் இருந்து வந்தது என்பதே இப்பாடல் எடுத்துக் காட்டும் சான்று.

நேமி-தோள்; தார்-முத்துக்களால் கோர்த்த ஆரம்; தென்னவன் - பாண்டியன்; ஆணையால்-பாண்டியனுடைய கட்டளையால்.

* * *

## போர்வேண்டாம் புரவலரே !

அரண்மனையின் ஒரு பக்கம்! பாண்டிய நாட்டுப் படைத் தலைவனும் அவனது ஆருயிர் நண்பரும் உரையாடிக் கொண்டிருக்கின்றனர். திறை கட்ட மறுப்போரின் உடல்கள் மண்ணிலே புரளும்படி முரசறைந்து ஆகிவிட்டது. ஆனால்......?

அங்கேதான் இருக்கிறது சொல்ல வந்த செய்தி. நடந்தவற்றையெல்லாம் ஒழுங்காகக் கோர்த்து நண்பனுக்குச் சொல்கிறான்.

"நண்பா! மன்னன், போர்க்களத்திற்குரிய தும்பைப்பூ மாலையைக்கூட அணியவில்லை; குவளைப்பூ மாலையைத்தான் சூட்டிக்கொண்டிருக்கிறான். திறை செலுத்த மறுத்தோரை எதிர்த்து நிற்கும் வண்ணம் நன்னாள் ஒன்றைத் தேர்ந்தெடுத்து வெண்கொற்றக் குடையை வேறு இடத்தில் பெயர்த்து வைக்கக் களிறுமேல் வைத்துச் சென்றோம். அது கண்ட திறை செலுத்தா மன்னர்கள், தம் மன்னரிடம் ஓடோடி வந்து, 'போர் வேண்டாம் புரவலரே, இதோ பொருள்!' என்று குவித்தபடி இருக்கின்றனர். இந்த யோசனை முன்னமேயே இருக்கக் கூடாதா? நிலவையொத்த குடையை வேற்றிடத்தில் வைத்துவிட்ட பிறகுதானா சிந்திக்கத் தொடங்க வேண்டும்.

61. நிறைமதிபோல் யானைமேல் நீலத்தார் மாறன்
குடைதோன்ற ஞாலத்(து) அரசர்—திறைகொள்
இறையோ எனவந்(து) இடம்பெறுதல் இன்றி
முறையோ எனநின்றார் மொய்த்து.

(வி-ரை) திறை செலுத்த மறுப்பது மன்னிக்க முடியாத குற்றத்தில் ஒன்றாகும். அதுவும் யாரிடத்தில் திறை செலுத்த

மறுப்பது ? பாண்டியனிடத்திலா? அப்படித்தான் அவன் கீழ் அடங்கி இருந்த அரசர்கள் நடந்து கொண்டனர். 'போர்' என்றாலே பலாப்பழம் தின்பது போலல்லவா பாண்டியனுக்கு! இச்செய்தியை நன்கு உணர்ந்தவர்கள்தான் அயலவர். ஆனாலும், சற்று ஆணவம். அதனால்தான் முதலில் திறை செலுத்த மறுத்தனர். பிறகோ திறைசெலுத்த விரைந்து வந்தனர்.

நிறைமதிபோல்-முழு நிலவுபோல்; நீலத்தார்-நீல நிற மான மாலை; மொய்த்து - சூழ்ந்து; முறையோ என நின்றார்- வரியை வாங்காமல் இருப்பது நீதியோ என்று முறையிட்டு நின்றனர்.

* * *

## போர் முரசு கேட்டது !

புவியாளும் மன்னனின் வெஞ்சினத்தைக் கண்டு சிற்றர சரெல்லோரும் இடிகேட்டுநடுங்கிய நாகப்பாம்பாகினர்.வேல் வேந்தன் போர் முரசு! சூள் கொண்ட முடியரசன் மார்பிலே முத்துவடம்! 'தேரெங்கே ? மாற்றாரின் கொட்டத்தை அடக் காமல் அரண்மனைக்குள் இருக்க மாட்டேனெனப் பேசிய வேலெங்கே ? பகைவரின் விலாப்புறமெங்கே ?" எனக் கூவி யழைத்தான் படை வீரர்களை !

மடை திறந்தாற்போல் படை வந்து நின்றது. மன்னன் பேசுகிறான்.

"களம் அழைத்த அழைப்பை ஏற்று அரிமாவென நிற் கும் என்னரும் தோழர்காள்! சங்கத் தமிழ் வளர்க்கும் வீரர் காள் ! புறப்படுங்கள், போர்க்களத்திற்கு! திறை செலுத்த மாட்டார்களாம்! இந்தக் களம், அந்த ஆணவக் குரலை அடக்கி யாக வேண்டும். போரொலி எங்கே? அந்தப் பகைவர்களை ஒழிக்கும் வண்ணம் எழுப்பும் வீரவொலி எங்கே ? எங்கே ?" என்கிறான்.

"எம் சிந்தைக் குகந்த செம்மலே ! வேல் எடுத்து விட் டோம், அவர்தம் விழிகளைக் குளமாக்க ! தங்கள் எண்ணப்

படியே செயலாற்றுவோம். எம் தமிழ்த்தாயின்மீது ஆணை!" என, அனைவரும் போர்க்களம் நோக்கிப் புறப்பட்டனர்.

இச் செய்தியை, ஒற்றர்கள் வாயிலாகக் கேட்ட வேற்று மன்னர்கள் அஞ்சி, மலையைக் கடந்து, காட்டுப் பசுக்கள் திரியும் இடத்திற்கு அப்பாலுள்ள குகைக்குள் போய் நுழைந்தனர். அவர்களின் உள்ளம் நெருப்பாகியது; வயிறு எரிந்தது; வாழ்வு தாழ்ந்தது.

62. செருவெங் கதிர்வேல் சினவெம்போர் மாறன்
உருமின் இடிமுர(சு) ஆர்ப்ப—அரவுறழ்ந்(து)
ஆமா உகளும் அணிவரையின் அப்புறத்து
வேமால் வயி(று) எரிய வேந்து.

(வி - ரை) 'ஒன்றை ஒருவரிடத்தில் சொல்லுவதற்கு முன்பாகவே உணர்ந்து தெளிந்து சொல்லவேண்டும். அப்படித் தெளிந்து சொல்லவில்லையென்றால் அதனால் அழிவுதான் ஏற்படும்' என்பதை இப்பாடல் விளக்குகிறது.

செருவெங் கதிர்வேல் - போர்க்களத்திற்குரிய ஒளி பொருந்திய வேல்; உரும் - இடி; ஆமா உகளும் - காட்டிலுள்ள பசுவானது.

* * *

யானையின் சீற்றம்!

பாண்டிய நாட்டுப் போர் வீரனொருவன் மாடவீதி வழியாகச் சென்று கொண்டிருக்கிறான். அவனைக் கண்ட அவனது தோழன், "என்ன வீரரே! எங்கே புறப்பாடு!"

"களம் முடிந்தது; காதல் பிறந்தது; குடிலை நோக்கிச் செல்கிறேன்!"

"ஊம்...வீரர்களுக்கு அதுதானே தேவை! போகட்டும், போர்க்களத்து வீரத்தைப் பற்றிச் சொல்லேன்?"

"ஆகா! களமா அது? இரத்தக் குளம்! மன்னனை எதிர்த்து நின்ற அத்தனை மன்னர்களும் மண்ணைக் கவ்வினர்.

வேல் பாய்ந்த விதந்தான் என்ன! அடடா! நீ வராமல் போய்விட்டாயே! நம் குதிரைப் படைகள் அயலார்தம் யானைப் படைகளோடு மோதி அவைகளைத் திணர வைத்தன. அந்தக் களிற்றின் கழுத்திலே நம் குதிரைகள் மோதி மோதி களிற்றின் கழுத்திலிருந்த கயிறே அறுந்து விட்டது. அந்தக் களிறுக்குக் கீழே இருந்த அரசர்கள் உருண்டனர்; அவர்கள் தலையிலே இருந்த முடிகளைக் காலால் உதைத்துக் கொண்டே முன்னேறிப் போயின, நம் குதிரைகள். இப்படி உதைத்துக்கொண்டு போன காரணத்தால் அவைகளின் கால்களெல்லாம் பொன்னை உரைத்துப் பார்க்க உதவும் கல்லைப் போல் தோன்றின. ஆகா! என்ன அருமை! எவ்வளவு பெருமை!'' என்கிறான்.

63. நிரைகதிர்வேல் மாறனை நேர்நின்றார் யானைப்
புரைசை யறநிமிர்ந்து பொங்கா—அரசர்தம்
முன்முன்னா வீழ்ந்த முடிக ளுதைத்தமாப்
பொன்னுரைகற் போன்ற குளம்பு.

(வி - ரை) நிரை கதிர் வேல்மாறன் - ஒளி பொருந்திய வேற்படை அணிசெய்து நிற்கின்ற பாண்டியன்.

* * *

## களம் கண்ட களிறு!

போர் முடியவில்லை! இரண்டு நாட்கள்தான் ஆயிற்று. போர், தொடங்கி! அந்த இரண்டு நாட்களிலேயே பகைவர்கள் பறந்தனர்; சிலர் இறந்தனர்; வேல்கள் மழுங்கின; பிணங்கள் குவிந்தன.

இதற்கிடையே ஓய்வு! போர் முடியா ஓய்வு! பாண்டியன் கூடாரத்தில் பள்ளுப் பாடும் ஓசை! அந்த இன்னிசை விருந்தில் எல்லா வீரர்களுமே கலந்துகொள்ளவில்லை சிலர் வெளியே நின்று கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

பார்த்துக்கொண்டிருந்த பலருள் ஒருவன் மட்டும் அங்கு நடக்கும் காட்சியை எடுத்தோதத் தொடங்குகிறான்.

"வீரா! அங்கு பார்த்தாயா, நம் யானையை! என்ன வீரம்! எத்தகைய ஆவேசம்! நம்மை எதிர்க்க வந்த மன்னர்கள் சாதாரணமானவர்களல்ல, வீரம் மிகுந்தவர்கள்! திண்தோள் வலிமை பெற்றவர்கள்! அவர்களது பரந்த மார்பை யாரேனும் பார்த்தால் மருண்டு போய்விடுவர். ஆயினும் பயனென்ன? யாரை எதிர்க்கப் போகிறோம்? என்பது புரிய வேண்டாமா? இப்போது பார், நம் யானையை! நன்றாகப் பார்! என்ன செய்துகொண்டிருக்கிறது?" என்கிறான்.

பக்கத்தில் இருந்தவனுக்குப் புரியவில்லை. அதனால் பேசாமல் இருக்கிறான். மறுபடியும் அம் மாவீரன் பேசத் தொடங்குகிறான்.

"தன்னுடைய கொம்பை எழுத்தாணியாக்கி, பகைவர் தம் மார்பை ஓலையாக்கி, "செல்லும் இடமெல்லாம் வெற்றி மாலை சூடும் எம் வேந்தர்க்குரியதாகி விட்டது, 'நமது நாடு" என, வரைகிறது பார்! அதற்குள்ள பேராற்றல்தான் என்னே!" எனக் கூறி முடிக்கிறான்.

64. மரும்பூசி யாக மறங்கனல்வேல் மன்னர்
உருத்தகு மார்(பு) ஓலையாகத்—திருத்தக்க
வையகம் எல்லாம் எம(து) என்(று) எழுதுமே
மொய்யிலைவேல் மாறன் களிறு.

(வி - ரை) 'வையகம் எல்லாம் எமது என்று எழுதுமே!' என்ற வரியில் பின்னிக் கிடக்கும் வீரத்தை நினைத்தால் நெஞ்சம்தான் நெகிழும். ஒரு யானைக்கே இவ்வளவு ஆர்வமும் ஆவேசமும் என்றால் வீரர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? 'உலகமெல்லாம் எங்களுடையது!' என்றல்லவா எழுதுகிறது. அந்த அளவிற்கல்லவா பாண்டிய மன்னன் இருந்திருக்கிறான், இன்றோ—?

கண்ணீர் விடவேண்டியவர்களாகத்தான் இருக்கிறோம். இலை போல வடித்த வேலால் எத்தனை மறவர்கள் மண்ணுக்குள் மறைந்தனர். இப்பாடலைப் பார்க்கும் போது நமக்கும் வீரம் பிறக்கிறதல்லவா? அவ்விதம்தானே நாவலர் காட்டியிருக்கிறார். மங்கிய உணர்ச்சிக்குப் புது மெருகிடுவது போலல்லவா இவ்வெண்பா அமைந்துள்ளது.

மருப்பு - களிறின் கொம்பு; ஊசியாக - எழுதுகோலாக; உருத்தகு மார்பு ஓலையாக - பரந்த மார்பையே ஓலையாக.

* * *

## இரண்டிற்கும் இரு பொருள் !

யானைக்கு இரு கொம்புகள். போர்க்களத்திலே அந்த இரண்டு கொம்பிற்கும் வேலை உண்டு. அதுவும் பாண்டிய னுடைய யானை யென்றால்? சொல்லவா வேண்டும். அதற்குத் தான் அதிக வீரமாயிற்றே! 'போர் என்றதுமே அயலவர் தம் மார்பு எங்கே? எனத் தேடிப் பிடிக்குமே! அவ்வளவு ஆர்வ முள்ளதாயிற்றே!

அத்தகைய யானை புலவர் கண்களுக்குத் தெரிகின்றது. அது செய்கின்ற செயலெல்லாம் அவர் கண்களுக்குப் புலப் படுகின்றன அதை அப்படியே அழகுற - இனிய தமிழிலே சுவையுடன் எழுதுகிறார். இப்போது பாருங்கள், அந்தப் பாட்டிற்குரிய கருத்துரையை.

பாண்டியனுடைய கடலொத்த சேனைகள், மாற்றார் மதிலை முற்றுகையிடுகின்றன. பாண்டியனுடைய களிறைக் கண்டவுடன் பகைவருக்குப் பெருத்த அச்சம் ஏற்படுகின்றது. ஆகவே, வாயிற் கதவை மூடிக்கொண்டு உள்ளே இருக்கின் றனர். இல்லாத கோபமெல்லாம் ஒருங்கே படையெடுத்து வந்தது யானைக்கு. தனக்குள்ள இரண்டு கொம்புகளையும் பெருந்துணையாகக் கொண்டு பகைவரின் வாயிலை ஒரு கொம் பால் நொறுக்கி, மறுகொம்பைக் கலப்பையாக்கி, மாற்றாரின் மார்பை வயலாக்கி மிதிக்கின்றது. இதுதான் பாடலின் சாரம்.

65. உருவத்தார்த் தென்னவன் ஓங்(கு) எழில் வேழத்து
இருகோடும் செய்தொழில் எண்ணில் — ஒருகோ(டு)
ஆங்(கு)
வேற்றார் அகலம் உழுமே மற்றேனையது
மாற்றார் மதில் திறக்கு மால்.

(வி - ரை) யானைக்குள்ள சுபாவம் ஒன்றே. எவ்வளவானாலும் பொறுத்துக் கொள்ளும். ஆனால், செய்யத் தகாத செயல் செய்தால் கோபம் வந்துவிடும். அதன் பிறகு அதனுடைய ஆவேசத்தை அடக்க யாராலும் முடியாது. அதுவாகவே தணியும். அப்படித்தான் ஆயிற்று. பாண்டியனுடைய அந்த யானை பேசாமல்தான் இருந்தது. ஆனால், பகைவர்களோ, அதற்குக் கோபம் வருகின்ற அளவிலே வாயிற் கதவை மூடினர். சீற்றம் பிறந்தது; எதிரிகளின் மார்பு வயலாகியது; தந்தம் கலப்பையாக உருப்பெற்றது. பகைவரனைவரும் பதைபதைத்தவாறு உயிர் துறக்க வேண்டியவர்களானார்கள்.

ஓங்கு எழில் வேழத்து - கவர்ச்சி நிறைந்த உயர்ந்த யானையானது; இரு கோடும் செய்தொழில் எண்ணில்—இரு கொம்புகள் செய்கின்ற காரியத்தைக் கவனித்தால்.

* * *

## தோற்றப் பரப்பு!

பாண்டிய நாட்டு யானையின் தோற்றம், கடலலை அலைந்து வருகின்ற வேளையில் எந்தக் கெம்பீரம் கண்களுக்குத் தெரியுமோ அந்தக் கெம்பீரமுடையதுதான். அது, ஓசை செய்யத் தொடங்கினால் மேகத்தின் இடிமுழக்கம்தான்; அது, ஓட முயன்றால் காற்றைவிட மிகத் துரிதமாக ஓடும்; கூற்றுவனும் சற்றுக் கொலைத் தொழிலை இதனிடம் கடன் வாங்கிச் செய்வான்; அத்தகைய அஞ்சா நெஞ்சம் படைத்ததாம்! யாருடைய யானை அது? ஒளி பொருந்திய வேலையுடைய பாண்டியனுடைய யானை.

66. தோற்றம் அலைகடல் ஓசை புயல்கள்தாம்
காற்றின் நிமிர்ந்த செலவிற்றாய்க்—கூற்றும்
குறியெதிர்ப்பைக் கொள்ளும் தகைமைத்தே
எங்கோன்
எறிகதிர்வேல் மாறன் களிறு

(வி-ரை) தோற்றத்திற்கு அலைகடலையும் மலையையும் உருவாக்கி, ஓசையைப் புயலாக்கிப் புலவர் வரைந்துள்ளார்.

இத்தகைய வன்மை கொண்ட களிறை யார்தான் வெல்லு வர்? முடியாத காரியந்தான். அதைக் கண்டுதான் புலவரும் களிறுக்கென்றே தனிச்சிறப்பு வழங்கியுள்ளார்.

* * *

## களமும் களிறும் !

களமெல்லாம் கூப்பாடு! 'ஐயோ...அம்மா' வென விழுந்த பரிதாபம்! பிளிறுகின்ற களிறுக்கு முன்னுல் மாண்ட மாவீரர் தொகை ஏராளம்! மதிலைக் குத்திக் கீழே சாய்த்தது களிறு! மதிலில் நெருப்புப் பொறி இருந்தது. அதைக்கூடப் பொருட்படுத்தாது தம் இரு கொம்புகளால் மதிலை மோதி, மாற்ருர் கோட்டையைத் தூள் தூளாக்கியது. அப்போது இருகொம்பில் ஒரு கொம்பு மட்டும் உடைந்துவிட்டது. அதன் பிறகாவது சினம் தணிந்ததா ? இல்லவே இல்லை ! பகைவரனைவருக்கும் தொல்லைதான்! பாய்ந்து பாய்ந்து பகைவரைக் கீழே தள்ளி, உடலைக் கிழித்து விடுகின்றது. ஆளைக் குத்திய அதன் கொம்பில் உறைபோல மாற்ருரின் குடல் மாட்டிக்கொள்கிறது. அதுவும் உடைந்திருந்த அந்தக் கொம்பில்தான் தொங்குகிறது.

களம் முடிந்தது !

யானைக்கு வேலை முடிந்தது!

காளையர்கள் தம் காதலியோடு கொஞ்சவேண்டும் என்பதற்காகவே விரைவாகச் சென்றுகொண்டு இருக்கின்றனர். யானையும் அப்படித்தான்.

போரிலே உடைந்த கொம்பிலே மாற்ருர் குடலை மாட்டிக் கொண்டு, தன் பிடியானையோடு பேசி மகிழப் புறப்படுகின்றது. ஏனென்ருல்! 'பெண் யானை கண்டு இழிவாக நினைத்துப் பேசுமே,' என்ற ஒரே காரணத்திற்காக வெட்கப்பட்டு குடலால் அக்கொம்பை மறைத்துக் கொள்கிறது. அதோடு பாண்டிய நாட்டுக்குப் போகிறது.

67. அடுமதில் பாய வழிந்தன கோட்டைப்
பிடிமுன் பழகழிதல் நாணி—முடியுடை
மன்னர் குடரால் மறைக்குமே செங்கனல் வேல்
தென்னவர் கோமான் களிறு.

(வி-ரை) பெண் யானைக்குத் தன் வீரத்தைக் காட்டும் பொருட்டு,பகைவரின் குடலையே சுட்டிக்காட்ட எடுத்துவரும் முறை பாராட்டுதற்குரியது. பகைவர் என்றாலும் பதைபதைக்கும் தோள்கள்தான் எத்தனை! இரத்தத்திலே எத்துணை வெப்பம் ஏற்படுகிறது, அத்தகைய நிலைக்கு ஆளாகிக் கிடந்த பாண்டிய மறவர்கள் மங்கல முழக்கம் கேட்க, நாட்டுக்குள் நுழைந்தனர். எங்கும் ஒலி! எப்பக்கம் பார்த்தாலும் ஆரவாரம்.

* * *

## வாளும் வேலும்!

போர்க் களத்திலே ஒரே குருதி வெள்ளம்! வீரர்தம் உடல்கள்! சில உடல்களில் மட்டும் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. வேல்பட்டு விழுந்த கொடுமை! அந்தோ! அத்தனை பேரும் செவ்வீரர்கள்! வீரர்களாக இருப்பவரோடுதானே பாண்டியனின் படைகள் போர் செய்யும். அப்படித்தான் செய்தன. இமைக்குள்ளே இருந்த விழிகள் வேல்பட்ட காரணத்தால் வெளியே வந்து நிற்கும் கொடுமை !

உணவருந்த வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு போர்க்களத்தை நோக்கி நரிகள் திரண்டு வருகின்றன. களத்திலே விழுந்து கிடக்கும் பல உடல்களுள் உயிர் ஊசாலடிக் கொண்டுதான் இருந்தது. 'அய்யோ, அம்மா' வென்னும் கூக்குரல் ஓய்ந்த பாடில்லை.

இக் கூக்குரலைக் கேட்ட நரிகள் அருகில் செல்ல அச்சப்பட்டு வெகு தொலைவில் நின்றுகொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கின்றன. அருகிலே சென்றால், 'குத்திக் கொன்று விடுவார்களோ ?' என்ற நடுக்கத்தால் நெடுந் தொலைவில் நின்றிருக்கின்றன.

அந் நரிகள் கூட்டத்தில் ஒரு நரிக்கு மட்டும் சற்றுத் துணிவு பிறக்கிறது. ஆகவே, அந்நரிகள் கூட்டத்தை விட்டு, அதுமட்டும் முன் நோக்கி வருகின்றது. வரும்போது துணைக்கு ஒரு நரியை மட்டும் அழைக்கின்றது.

அச்சத்தாலும் துணிவற்ற செய்கையாலும் அருகில் போக முடியாமல் அதுவும் தவித்தது. எப்படியோ, துணிவு பெற்று, தைரியத்தோடு வீரர்கள் மத்தியில் வருகின்றது. துணிவு ஏற்பட்டு இருந்தாலும் அச்சம் மட்டும் அதைவிட்டுச் சென்றபாடில்லை, திரும்பவும் நரியை அழைக்கிறது. அது வந்தால்தானே! வரவே இல்லை. கூவி அழைத்ததுதான் மிச்சம்.

68. வெருவரு வெஞ்சமத்து வேலிலங்க வீழ்ந்தார்
புருவ முரிவுகண் டஞ்சி—நரிவெரீ இச்
சேட்கணித்தாய் நின்றழைக்கும் செம்மற்றே
தென்னவன்
வாட்கணித்தாய் வீழ்ந்தார் களம்

(வி-ரை) வீரன் என்றாலுமே எதையும் தாங்கும் இதயம் பெற்றவன் என்பதுதான் பொருள். எதற்கும் அஞ்சாது, உயிர் கொடுக்க முன் வருபவன்தான் தியாகி. அவ்வித வீரனுக்கெதிரே மற்றொரு வீரன் தோன்றுவதற்கே அச்சப்படுவான் என்றால் இந்த நரிகள் எம்மாத்திரம்? ஆகவேதான், அருகில் செல்ல முடியாமல் எல்லாமே அலைந்தன. ஒன்று மட்டும் துணிவு பெற்று வந்தது.வந்தாலும் காரியம் வெற்றி பெற முடியவில்லை. பயங்கரக் குரலொலி கேட்டுத் திக்குமுக்காடியது. என்ன செய்வதென்று தெரியாமல் மற்றொன்றை அழைக்கிறது. இந்தக் கருத்தைக் காணும் நேரத்தில் வீரம் ஏற்படுகிறது: உணர்ச்சிபொங்குகிறது.

* * *

## கண் புதைத்த களிறுகள்!

வாட்கள் மோதின! யானைகள் பிளிறின! 'ஓ!' என்ற அவல ஓசை வானை முட்டியது! இரத்த வெள்ளம் கரை புரண்டது. எதிரியின் வீரர்கள் சிலர் ஓடினர்! பலர் இறந்தனர்! இன்னும் பலர் இறந்து கொண்டிருந்தனர்!

பாண்டியனின் பட்டத்து யானை பாய்ந்து பாய்ந்து போரிட்டது. அதன் கொம்புகளின் நிறம் மாறி விட்டது. கொம்புகள் செம்மையுற்றன. பாண்டியன் சிரித்தான்! அந்த வெற்றிச்சிரிப்பின் பொருளென்ன? களத்திலே வெற்றி கண்டு விட்டான்! சிரித்தானே எதற்கு? அப்பொழுதே நமக்குத் தெரிய வேண்டாம்?

இப்போது போர்க்களத்திலே அமைதி!

பாண்டியனின் படை வீரர்கள் நாடு திரும்பிக் கொண்டிருந்தனர். பாண்டியனும் வந்துகொண்டிருந்தான். சற்றுத் தொலைவில் பெண்களின் கூட்டம் ஒன்று நின்றுகொண்டிருப்பதைக் கண்டான். அங்கே இருந்து அவல ஓசை எழுவதையும் அவ்விடத்திருந்து பெருநெருப்புத் தென்படுவதையும் கண்டான். காரணம்அறிய ஆவலுற்றான். அருகிருந்தோர் கூறினர்.

"இறந்துபட்ட எதிரிகளின் மனைவியர் வாழ விருப்பமின்றித் தீக்குளிக்கிறார்கள்."

இதுதான் அங்கிருந்தோர் கூறியது.

பாண்டியன் என்ன நினைத்தானோ என்னவோ! அதைப் பார்க்கப் பொறுதவனாகத் தன்மேலங்கியின் முந்தானையை எடுத்து கண்ணைப் பொத்திக் கொண்டான்.

மேலும் அங்கே நிற்க மனமில்லாமல் நகர்ந்தான். அங்கே இன்னொரு காட்சி!

பாண்டியனின், யானைகள்கூடத் தும்பிக்கையால் தங்களின் கண்களைப் பொத்திக்கொண்டிருந்தன!

என்ன விந்தை!

அப்போது ஒரு வீரன் ஓடிவந்தான்!

பாண்டியன் "என்ன" என்ருன்.

" அரசே, எதிரிகளின் யானைப்படையிலே உள்ள அநேக யானைகள் இறந்துவிட்டன அல்லவா !"

" ஆமாம்!"

" அவைகளின் பெண் யானைகள் தங்களின் ஆண் யானைகள் இறந்தது குறித்து வருந்துகின்றன."

"அதற்கும் நம்முடைய யானைகள் கண்பொத்தி நிற்பதற்கும் என்ன தொடர்பு?"

"இதோ சொல்லுகிறேன் அரசே! அப்படி இறந்துவிட்டதால் பெண் யானைகள் பிரிவு ஆற்ருது வருந்துகின்றன. அந்த வருத்தத்தைக் காணச் சகியாமல் நம்முடைய யானைகள் கண்பொத்தி நிற்கின்றன."

"என்ன ஆச்சரியம் ! உண்மைதாஞ !"

" ஆம். அரசே !"

இதற்குமேல் அரசன் பேசவில்லை நகர்ந்து விட்டான். அவன் மனதிலே என்ன பெருமிதம் குடிகொண்டிருந்திருக்கும்! அவன் எப்படியோ அப்படியே யானைகளும்! கூறவேண்டுமா, அவன் பெருமையை!

69. ஏனைய பெண்டிர் எரிமூழ்கக் கண்டு, தன்
தானையால் கண்புதைத்தான் தார்வழுதி...
யானையெலாம்
புல்லார் பிடிபுலம்பத் தாம்கண் புதைத்தவே
பல்வாயால் பட்ட களத்து.

(வி - ரை) பாண்டியன் தான் இறந்த எதிரிகளின் பெண்டிர் படுகின்ற துன்பத்தையும் தீக்குளிப்பதையும் கண்டு பொருதவனுகக் கண் புதைத்தான் என்ருல் பாண்டியனின் யானைகளும் இறந்துவிட்ட எதிரிகளின் யானைகளின் பிரிவைத் தாங்காது வாடுகின்ற பெண் யானைகளின் துன்பத்தைப் பொருது கண் புதைத்தனவாம் ! என்னே சிறப்பு!

புல்லார் பிடி - பகைவர்களது ஆண் யானை ; புலம்ப - இறந்ததனுல் புலம்பி அழ; பல்வாயில் பட்ட களத்து - பல வகையில் போர் செய்ததின் காரணமாக எதிரிகள் இறந்து கிடந்த போர்க்களத்தில் !

*　　*　　*

கூகைக் கோட்டம்!

பாண்டியனுக்கு எதிரான அரண்மனைகள் ; ஆடம்பர மான மாடங்கள் ; பெருத்த வீதிகள் ; அத்தனையும் பாழ் பாழ்! வாழவேண்டிய மன்னர்கள் விழுப்புண் ஏற்று மண் ணுக்கு இரையானுர்கள்,

ஒரு காலத்தில் மற்ற அரசர்களே வென்று வாகை மாலே சூடிவந்த மன்னர்கள், வினைகப் பாண்டியனேடு போரிட்ட காரணத்தால் மரணமடைந்து எங்கேயோ சென்று மறைந்து விட்டனர். என்ன கோரம் !

வாகைமாலே சூடியபடி அரியாசனத்தில் அமர்ந் திருக்கும்போது அரண்மனையிலேதான் எத்தனை களி யாட்டங்கள்! மாடங்களிலேதான் எத்துணை ஒளி. இன்ருே—?

ஐயகோ ! கூகையல்லவா குடியிருக்கிறது! கிழப் பேய் கள் உறங்குவதற்காகவல்லவா ஆந்தைகள் ஆர்ப்பாட்டம் செய்கின்றன. எதனுல்? பாண்டியனுடைய சொல்லே ஏற்றுக்கொள்ளாததால் ! தென்னவனேப் புறக்கணித்து வழி நடந்த காரணத்தால் மன்னர்கள் மாண்டனர் ; அவர்கள் நடமாடிய அரண்மனையில் ஒரே கூகை மயம் !

70. வாகை வனமாலே சூடி அரசுறையும்
ஓகை உயர்மாடத்(து) உள்ளிருந்து—கூகை
படுபேய்க்கும் பாட்டயரும் பண்பிற்றே தென்னன்
விடுமாற்றம் கொள்ளாதார் நாடு.

(வி - ரை) இன்றுகூட கண்கூடாகப் பார்க்கலாம். நன்ருக வாழ்ந்த குடும்பம், காலத்தால் பாதிக்கப்பட்டு வீழ்ந்துவிட்டால், அந்த வீட்டில் வேருெருவர் குடித்தனம்

வரும்வரையில் காகமும் கழுகும் தனக்கேற்ற இருப்பிட மாகக் கொண்டுவிடுகின்றன. அப்படித்தான் அந்த அரண் மனையும் ஆயிற்றென்பதை அழகுற விளக்குகிறார்.

அரசு உறையும்-அரியாசனத்தில் மன்னர்கள் அமர்ந் திருக்கும், ஒகை உயர்மாடத்து — விளையாடுவதற்கு ஏற்ற இடமாக அமைந்துவிட்ட மணிமாடத்தில்; கூகை — கோட்டான்.

*　　　*　　　*

## திறையால் மறைந்தன !

போர் தொடங்குவதற்கு முன்னே சில முறைகள் உண்டு. அம்முறையில் ஒன்றுதான் அயலவர் ஆனிரைகளைக் கவர்ந்து செல்வது.

"கப்பங் கட்ட மறுத்தவன் யார்? காவலனை மீறிப் பேசிய கயவன் யார்? திறை செலுத்த மறுத்தவர்களின் எண்ணிக்கை எவ்வளவு?"—என்று பாண்டியன் கேட்டு முடிவு கண்டவுடன் போருக்கான அறிகுறிக்கேற்ப ஆனிரை களைக் கவர்ந்து வரச்சொன்னான். இட்ட கட்டளையைத் தட்டாமல் தயங்காமல் செய்து முடித்தனர், அவன் ஆணைக்கு உட்பட்டோர் !

ஆனிரைகளைக் கவர்ந்து சென்று வந்த நாட்டி லுள்ளோர், போர் தொடங்கப் போகிறது என்பதை அறிந்து, அந்நாட்டிலுள்ள பெண்கள் வேறு நாட்டிற்குச் சென்று தங்குகின்றனர். வயதானோரும் நோயுடையோரும் அவ்விடத்தை விட்டு அகலுகின்றனர். அதன் பிறகு இளம் பேய்க் கூட்டங்கள் அங்கு வாழத் தலைப்படுகின்றன. தாய்ப் பேய்கள், போர்க்களத்திலே விழுகின்ற பிணங்களை உண்ணச் சென்றுவிடுகின்றன. நகரம் முழுமையும் இருள் !

71\. பறைநிறை கொல்யானைப் பஞ்சவர்க்குப் பாங்காய்த்
　திறைமுறையின் உய்யாதோர் தேயம்—முறை
　　　　　　　　　　　　　　　　　　　முறையின்

ஆன்போய் அரிவையர்போய் ஆடவர்போய்ப்
பேய் ஈன்ற
ஈன்போய் உறையும் இடம்.

(வி - ரை) நாட்டிலுள்ள அனைவரும் அயலகத்திற்குச் சென்று வாழத் தலைப்படுகின்றனர். காரணம்? களத்தோடு போராடவிருக்கும் காவலர்களுக்காக! போருக்கு விசால மான இடம் தேவையல்லவா? அதற்காகவே அவர்களும் அவ்விடத்தை விட்டுப் போய்விடுகின்றனர். ஆயினும், உண்மை என்ன? களம் என்றால் அதற்கொரு தனி இடம் உண்டு! அந்த இடத்தில்தான் போர் நிகழும்! வாளோடு வாள் பேசும்! வேலோடு வேல் உராய்ந்து உயிர் குடிக்கும். ஆனால், அவர்கள் சென்றதற்குக் காரணம் அச்சம்! அத் தகையவர்களை அனுப்பி வைப்பதைத்தான் அக்கால மன்னர் களும் விரும்பினர்.

பாங்காய் - முறையாக; நேர்மையாக; அரிவையர் போய்—களம் காண காளையர்கள் வருகின்ற காரணத்தால் அங்குள்ள இளம்பெண்கள் விலகி; பஞ்சவர்—தென்னவர்.

* * *

## போரிலே புலம்பல்!

கலிங்கப் போரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். சரித்திரத்தைப் புரட்டிப் பார்க்கும்போது அசோகன் வந்து நிற்கிறான். அவனால் உருண்ட தலைகள் ஒன்றா, இரண்டா? ஆனால் இறுதியில் பார்க்கும்போது அழுதானும்.அலறினானும்! புழுபோல் துடித்தானும். ஆனால், அவன் காலத்திற்கு முன் காலத்தே அப்படி அழுது இருக்கிறான் தென்னவன்! தீன் புனன் காவலன்! வையகம் போற்றும் பைந்தமிழ்ப் பாவலன்!

இதோ அந்தச் சோகக் காட்சி!

திறை கட்ட மறுத்ததால் விரைந்து போர் புரிந்தன ராம். பாண்டிய நாட்டுப் படை வீரர்கள்! இருபடைகளும் மோதினவாம்! எங்கு பார்த்தாலும் பொங்கி வழியும் போருணர்ச்சி!

மூன்ரும் நாள்!

முடியுடை வேந்தர்களுள் முதல்வஞன பாண்டியன் போர்க்களத்தை நோக்கி விரைவாக வந்து கொண்டு இருக்கிருனும். கண்டானும், ஒரு காட்சி! கண்ணீர் வடித்தானும்! மாற்றரசன் விழுந்து கிடக்கும் வீரக் காட்சியைக் கண்டு துடிதுடித்தானும்! வேலேந்தி வந்த வேலவன், பழுதுபட்ட விழிகளோடு சாய்ந்திருக்கும் சோகக் காட்சியைக் கண்டு நிலகுலேந்தானும். நெஞ்சம் விம்மலுற்றதாம்!

ஏன்? ஏதற்காக? என்று தோன்றுகிறதல்லவா! புலவரே அதற்கு விளக்கம் தருகிருர்.

மாற்றரசன் எந்நிலேயில் இருந்திருக்கிருன் என்பதைப் புலவர் விளக்க வருகிருர்.

பாண்டியனுடைய படைகளேக் கண்ணுற்ற அவ்வரசன், சினங் கொண்டு வெஞ்சமர் புரிய வாய் மடித்தானும்; சிவந்த கண்களேப் பெற்ருனும்; இமைகள் மேலேறினவாம்! அந்தக் கோபத்தோடேயே பாண்டியனுடைய படைவீரன் முன்னே வேல் எறிய நின்ருனும். நின்றவனே வேல் கொண்டு கொன்ருராம், தென்னவர்! அவ்வளவுதான்! அரசன் விழுந்தான்? எதன்மேல்? வெட்டுண்டு கிடக்கும் ஒரு களிற்றின் மீது. ஆனுலும் மடிந்த உதடோ, ஏறியபுருவமோ, சிவந்த கண்ணே சிறிதும் பிறழவில்லே. அதைத்தான் பாண்டிய மன்னன் கண்டானும்! அவன் கண்ணுக்கு முன்னே நிற்கும் கூறிய வேலேக் கண்டு, 'வெற்றியில்லே! ஐயகோ, வெற்றி இல்லே' யென ஒலமிட்டானும். வெற்றி அக்கொற்றவனுக்குக் கிடைத்தும், அதை, தோல்வியாகவே நினேத்து அழுதானும்! இதைத் தான் புலவர் நமக்கு அறிவிக்கிருர். எப்படி இருக்கிறது?

72. கொடித்தலேத்தார்த் தென்னவன் தேற்ருன்
போல் நின்ருன்
மடித்தவாய் சுட்டிய கையால்—பிடித்தவேல்
கண்நேரா ஒச்சிக் களி(று)அணேயாக் கண்படுத்த
மண்நேரா மன்னரைக் கண்டு.

(வி-ரை) மனிதன் என்றாலுமே மனம் உடையவன் என்றே பொருள். அந்த மனத்தில் இரக்கம் உண்டு. ஈகை செய்யும் ஆற்றலுமுண்டு. அப்படி இல்லாமல் இருப்பவன் மனிதனேஅல்ல! ஆகவேதான் அரசனும் போர்க்களத்தில் விழுந்து கிடக்கும் அரசனைக் கண்டு அழுகிறான். என்னே, இரக்கம்!

தேற்றான்போல் நின்றான்-ஒன்றும் அறியாதவன்போல் நின்றான்; சுட்டிய கையால் பிடித்த வேல் - எதிர்நோக்கி வைத்திருந்த வேல்; களிறு அணையாக் கண்படுத்த-களிறினையே சாய்வதற்கேற்ற பொருளென அறிந்து கண்மூடி சாய்ந்துள்ள.

* * *

## காலடியில் கண்ணீர்!

பாண்டியனுக்கென ஒரு பண்புண்டு. விளைகப் போர் செய்யப் போகமாட்டான். வந்தாலும் விடமாட்டான் வெற்றி காணும் வரையில் கண்கள் உறக்கங்கொள்ளாது. இரண்டிலொன்று! இதுவே அவனது இலட்சியம்!

அதுபோலவேதான் ஒரு பகையரசன் அவன் கைக்குள் சிக்கினான். விரட்டி விரட்டி அடித்தான். அப்போதும் சினம் தணிந்தபாடில்லை. இதை உணர்ந்த ஒருவன், "தோழா! இனி, நாம் பிழைப்பதும் நம் நாடு பிழைப்பதும் அரிதுதான். அந்தப் படைக்கு முன்னே இந்தப் படை என்ன செய்ய முடியும்? சீற்றம் தணிந்தவனைத் தென்னவன் காணப்படவில்லை; சிவந்த அவன் கண்கள் மீண்டும் குளிர்ச்சி பெறவேண்டுமானால், நம் மன்னருடைய அரசியார், தம் சிறுவர்களை அழைத்து வந்து, அவன் காலிலே கண்ணீர்விட்டுக் கழுவச் செய்தால் நாடு பிழைக்கும்! இல்லையேல் இறுதியில் இடுகாடுதான் எஞ்சி நிற்கும்." என்கிறான்.

இரைஞ்சி நிற்போருக்கு இரக்கங் காட்டும் நெடுமாறன்; இணையற்ற புகழ்வீரன்!

73. தொழில் தேற்ருப் பாலகனை முன்நிறீஇப்
பின்நின்(று)
அழல்இலைவேல் காய்த்திஞர் பெண்டிர்—
கழல்அடைந்து
மண்ணீத்தல் என்ப வயங்குதார் மாமாறன்
கண்ணீத்தல் தீர்க்கும் மருந்து!

(வி-ரை) தென்னவன் கண்களில் குடிகொண்டுள்ள சினத்தை மாற்றும் மருந்து, அரசர்தம் மகன்தான். அவன் கண்ணீர்தான் கோபக்கனலை அணைக்கும் மருந்து. வேறில்லை.

ஒரு குடும்பம். அந்த குடும்பத்தில் மூன்று பேர். தலைவன், தலைவி, அவர்களுக்குப் பிறந்த குழந்தை, ஏதோ ஒரு சிறு ஊடல் நடைபெறுகின்றது. அதனுல் இருவருமே வெஞ்சினத்தோடு இருக்கின்றனர். அப்போது அந்தக் குழந்தை, கண் கலக்கத்தோடு அவ்விருவர் முன்னே நின்ருல், சினம் குறையும். பழைய பாசம் உண்டாகும். இக்கருத்தைத்தான் புலவரும் புலப்படுத்துகிருர்.

தொழில் தேற்ருப் பாலகனை — எக்காரியத்தையும் உணர்ந்து செய்யத் தெரியாத வயதுள்ள சிறுவனை;

முன்நிறீஇப் பின்நின்று-அச்சிறுவனை முன்னே நிறுத்தி, பின்னுல் அன்னவள் நின்று; தீர்க்கும் மருந்து-போக்கும் மருந்து.

* * *

## கனவிலே இன்பம்

விடியற்காலம்!

சேவல் கூவியழைக்கும் குரல்!

இருள் சூழ்ந்திருந்த தென்னவன் நாட்டில் கொஞ்சங் கொஞ்சமாக இருள் கலைந்து வரும் காட்சி. ஆனுலும் ஊரெல்லாம் உறக்கத்திலேயே இருந்தது. அங்கு ஒருத்தி படுக்கை-

விட்டு திடுக்கிட்டு எழுந்து தடவிப் பார்த்த வண்ணம் இருந் தாள். பக்கத்திலே படுத்துள்ள தோழி, வளையல் சத்தத் தைக் கேட்டு திடுக்கிட்டு எழுந்து உட்காருகிருள். அவள் தலையைப் பார்த்து, "ஏம்மா! இந்நேரத்தில் என்ன தேடு கிருய் ?" என்கிருள்.

அவள் சொல்லமுடியாதவாறு திகைக்கிருள்! என்ன சொல்வாள்? சொல்லக்கூடிய செய்தியா அது? அதனுல்தான் சற்றுத் தயங்கியவாறு இருக்கிருள்;

"ஏம்மா! என்னம்மா தேடுகிறீர்! என்னிடத்திலும்தான் சொல்லேன். நானும் தேடுகிறேன்..." என்கிருள்.

"கூ...பக்கத்திலே தாய்! நீ வெளியே வா...என் பைத் தியக்காரத்தனத்தைச் சொல்கிறேன்!" எனச்சொல்லி தோட் டத்திற்கு இழுத்துச் செல்கிருள்.

"தோழி! சொல்வதற்கு எனக்கே வெட்கமாக இருக் கிறது. போர்க்களத்திற்கென்றே தயாரித்து வைத்துள்ள யானைக்குச் சொந்தமுடையவனை தென்னவன் என் அருகே நெருங்கினுன். நானும் என் படுக்கையிலே கொஞ்சம் இடங் கொடுத்தேன். என் பக்கத்திலேயே படுத்துக் கொண்டு, 'கொடியிடையே! கோமளமே! மடிதனிலே வடிக்கின்ற இன்பத்தேனே !' என, என் கையைத் தொட்டு மெல்ல என் மார்பைத் தடவினுன். நான்தான் என்ன செய்வேன்? எனக்கும் உணர்ச்சி உண்டல்லவா! அவன் அப்படிச் செய்யச் செய்ய, 'இன்னும் இப்படித் தழுவி நிற்பனுவென நினைத்துக் கொண்டே மதிமயங்கிக் கிடந்தேன். இன்னமும் என் பக்கத் தில் இருந்துகொண்டு இன்பத்தைத்தான் தருகிருனெனப் பொய்க்கணக்கைப் போட்டுக் கொண்டு என் செங்காந்தள் அரும்பையொத்த மெல்லிய விரல்களால் படுக்கையைத் தட விப் பார்த்தேன். ஆளில்லை; திடுக்கிட்டு எழுந்தேன். அந்தக் கனவு நிலையிலேயே திரும்பவும் படுக்கையைத் தடவினேன்." என்று சொல்லி முடிக்கிருள்.

தோழி சிரிக்கிருள் !

தலைவி வெட்கித் தரையைப் பார்க்கிருள்.

74. களியானைத் தென்னன் கனவில்வந்(து) என்னை
அளியான் அளிப்பானே போன்ருன்—தெளியாதேன்
செங்காந்தள் மெல்விரலால் சேக்கை தடவந்தேன்
என்காண்பேன் என்அலால் யான்.

(வி - ரை) கற்பனையில் என்ன குழைவு! எத்தகைய எடுப்பு! தென்னவன்மீது காதல் கொண்டதால் ஏற்பட்ட கனவை எப்படியெல்லாம் நமக்கு நம் நாவலர் விளக்கமோடு எடுத்துக் கூறுகிருர்.

களியானை-மதம் பிடித்த யானை; சேக்கை தடவந்தேன்-படுத்திருந்தவாறே அவனுள்ளானுவெனத் தடவிப் பார்த்தேன். அளியான்-அதிக அன்பு கொண்டே.

* * *

## குவளைக்குள்ள குணம்!

ஒரே முழக்கம்! மேள தாளங்களோடு தென்னவன் தேர்மீது வருகின்ற கோலம். ஆகா! அது சாதாரணமான காட்சியா? காணுத கண், கண்ணு!

உள்ளறையில் சமையல் செய்து கொண்டிருந்தாள் ஒருத்தி. அவள் செவிக்கு மேளதாளங்களின் முழக்கம் மெல்ல மெல்லக் கேட்கத் தொடங்கியது. அதோடு, "எம் மன்னர் வாழ்க! எங்கள் தலைவர் வாழ்க!" என்ற பேரொலியும் சேர்த்துக் கேட்கத் தொடங்கியது. உடனே வெளிக் கதவின் ஓரத்தில் அன்னவள் வந்து நிற்கிருள்.

அவள் வீட்டுக்கு நேராகத் தென்னவன் தேர் வந்து நின்றது. தேர்த் தட்டில் அமர்ந்துள்ள தென்னவனை தன் இரு கண்களாலும் நன்ருகப் பார்க்கிருள்.

அவள் வீட்டை விட்டுச் சற்று நகர்ந்தது. அந்தோ! அவள் மனம் மட்டும் நகரவில்லை. நின்ற இடத்திலேயே ஒரே பிடிவாதமாக நின்றிருந்தது. அம் மனத்தைக் கண்ட மங்கை, "ஏ நெஞ்சே! நீ நின்றுகொண்டிருப்பதால் என்ன ஆகப்

போகிறது? வேண்டாம், வா! கூர்மையான வேல் அவன் கையிலே! அரும்பாக இருக்கும்போதே வண்டுகள் சென்று சூழ்ந்து தொல்லை கொடுக்க, மலரும் விரிய, அம் மலரைக் கொண்டு மாலையாகத் தொடுத்து அணிந்துகொண்டு இருக்கிறான். அம் மாலையில்தான் என்ன மணம்! தாவிப் பாயும் குதிரைகள்தான் என்ன அழகு! அதெல்லாம் போகட்டும். அவன் மார்பிலே புரளும் குவளை மலர் எத்தகைய குணம் பெற்றுத் தன் குறளாக அவனை ஆக்கிக் கொண்டிருக்கிறது? அதற்கு மட்டும் எப்படி அக்குணம் வாய்க்கப் பெற்றதென்று எண்ணிப் பார்க்கத் துணிகிறாயல்லவா?' நல்ல மணமும் நீல நிறமும் கொண்ட குவளைப் பூவானது, தூய குளத்திலே நீரில் ஒற்றைக் காலோடு நித்தம் தவம் செய்தது. அதனால்தான் அவனும் கிடைக்கப் பெற்றான். நீயும் அப்படி இருக்க முடியுமா? இருந்தால், அவன் நமக்கு விருந்தாவான்!'' என்று சொல்லி, ஏங்கிய மனத்தை உள்ளே கூட்டிச் செல்கிறாள்.

75. கார்நறு நீலம் கடிக்கயத்து வைகலும்
நீர்நிலை நின்ற தவங்கொலோ—மார்பணைய
வண்டிருக்கும் நக்கதார் வாமான் வழுதியை
கொண்டிருக்கப் பெற்ற குணம்.

(வி - ரை) நீரின்மேல் பூக்கும் பூவான குவளை. அவள் கண்களுக்குத் தவம் செய்து, தென்னவனைப் பெற்றது போலவே தெரிகிறது. அதனால்தான், அத்தகைய குணம் உனக்குண்டோ!' என, மனத்தைப் பார்த்து அவள் கேட்கிறாள்! எத்தனை நாள் தவமிருந்து அத்தென்னவனைப் பெற்றதோ' என்று கேட்கும் முறை போற்றத் தக்கது.

கார் நறுநீலம்-கடுமையான நீல நிறத்தோடு சேர்ந்த நறுமணக் குவளை மலர்; கடிக் கயத்து-நறுமணம் கமழும் குளத்தில்; வைகலும்-எவ்வளவு நாட்களாக.

* * *

## மதி மயக்கம்!

மதுரை மாமன்னன் அவன்! அவனைக் கண்டு மோகங் கொள்ளாத பெண்கள்தான் உண்டா? அவன் வீரன்; அழகுக்கு அரசன்; ஆட்சிக்குத் தலைவன்! அவ்வளவும் அவனுடைய சொந்தச் சொத்து. அத்தகைய பெருஞ் செல்வமுடையவனை யார்தான் விரும்ப மாட்டார்? அவனை, அனைவரும் விரும்பினர்.

ஒருத்தி மட்டும் அவனை அதிகமாக நேசிக்கிறாள். ஒரு நாளா? இரு நாளா? அப்பப்பா! எத்தனை ஆண்டுகளாக அவன்மீது காதல் கொண்டிருக்கிறாள்! கொஞ்சமாகிலும் அன்பு மாறியதா? இல்லவே இல்லை. மேன்மேலும் பாசம் பெருகிக்கொண்டே இருந்தது.

ஒரு நாள்!

அந்தி சாயும் நேரம்! மந்தார வானத்தைக் கண்டு தோகையை விரித்தாடும் மயில்கள்! மாந்தோப்புச் சோலையிலே மகிழ்வோடு பண் எழுப்பும் குயிலினங்கள். இத்தனைக்கு மிடையே அவள். ஆனாலும், அவளுக்கு ஆனந்தமேது? இத்தனையும் இருக்கிறது. அதோடு முத்தாலே முடி சூடியுள்ள முத்தமிழனும் அவன் பக்கத்தில் இருந்திருந்தால் எல்லாமே இன்பமாகத் தோன்றி யிருக்கும். அதுதான் இல்லையே. ஆகவே,அனைத்தும் காணும் அவளுக்கு வெறுக்கத் தக்கதாகவே பட்டது.

அப்போது அங்கு அவள் தோழி வந்தாள். தன் மனத்திலே நெடுநாளாக உள்ள ஆவலை அவளிடம் சொல்ல முனைகிறாள்.

"தோழி! மதுரை மன்னன் என்னை மணக்கும் அளவிற்கு உறுதுணை புரிய எவர் இருக்கிறார்கள்? அவ்விதம் 'உள்ளார்!' என்று யாரேனும் சொன்னால், அவர்களைக் கொண்டு அவனை நான் அடைவேன், 'ஒரு நாளைக்காகிலும் அவனோடு இருந்து, இன்பம் அனுபவித்துப் போகட்டுமே!' என்று சொல்லும் தயாள குணாளர் இருக்கின்றனரா சொல்! நீ சொன்னால் எனக்குள்ள துன்பம் உடனே பறந்து போய்விடும். இவ்

வளவும் போகட்டும்! என் வீட்டிலே தாய் தந்தையர் நான் வெளியே செல்ல முடியாமல் அன்றாடம் காவல் காத்துக் கொண்டிருக்கிறார்களே! ஆனாலும் அப்படி ஒரு வாய்ப்பு கிடைக்கிறதென்றால் எப்படியும் காவல் மீறிச் சென்று அவனை அடைவேன்!" என்கிறாள்.

தோழிக்கோ, வியப்பாக இருக்கிறது!

தலைவிக்கோ, அவள் பார்வை வெறுப்பை யூட்டுவதாகத் தெரிகிறது. ஊம்...எல்லாமே பருவக் கோளாறு!

76. அறிவாரார் யாமொருநாள் பெண்டிரே மாகச்
செறிவார் தலைமேல் நடந்து—மறிதிரை
மாடமுறிஞ்சு மதுரையார் கோமானைக்
கூட ஒருநாள் பெற.

(வி - ரை) இப்பாட்டில் முடியாத ஒன்றைக் குறித்து வாழ்நாள் முழுமையும் முற்றுகையிட்டு முடிக்கப் பார்க்கும் காதல் தன்மைதான் விளக்கமாகிறது. எண்ணம் நல்லது தான்; நினைப்பிலும் தவறில்லை; அப்படிச் செயலில் செய்து காட்ட முனைய வேண்டுமே!

* * *

## துவண்ட தோள்!

அணிகலன்களெல்லாம் அணிந்துகொண்டு இருக்கிறாள். எல்லாப் பொருளுமே சங்கத் தமிழ் வளர்க்கும் தார்வேந்தன் நாட்டில் உள்ளதுதான். ஆனாலும்—?

இந்தக் குறை ஒருத்திக்கு மட்டும் இருந்து வந்தது. செந்தமிழ்ப் பாவை அவ்ள்! கண்டார் வியக்கும் தோற்றத்தைப் பெற்றுள்ள காரிகை. இருந்தென்ன பயன்? காதல் நிறைவேறவில்லையே! அதற்காகவே தோழியிடம் முறையிடுகிறாள்.

"தோழி! என் கையிலே அணிந்துள்ள வளையல் கடலிலுள்ள சங்கு வளையல்; என் கழுத்திலுள்ள ஆரமோ, சிப்பிச் சங்கு பெற்ற முத்துக்கள்! என் உடல் முழுமையும் பூசியுள்ள

நறுமணச் சந்தனமோ, போர் செய்வதிலே வல்லமை பெற்ற பாண்டிய நாட்டைச் சார்ந்த பொதிகை மலையில் விளைந்த சந்தனமே! ஆனாலும் என் தோள் வாடிக்கிடக்கிறது. எதனாலோ தெரியவில்லை!" என்று, மறைமுகமாக மாறனை மோகிப்பதை விவரிக்கிறாள்.

77. கைய[து] அவன் கடலுள் சங்கமால் பூண்பதுவும்
 செய்யசங்[கு] ஈன்ற செழுமுத்தால்-மெய்யதுவும்
 மன்பொரு வேல்மாறன் வார்பொதியின் சந்தனமால்
 என்பெரு வாடும் என் தோள்.

(வி-ரை) எல்லாப் பொருளுமே பாண்டிய நாட்டில் இருந்து வாங்கிய பொருள்கள். அத்தனையும் என் உடம்பிலே குடியேறி நிற்கின்றன. ஆனாலும், தோள் மட்டும், 'எனக்கு மட்டும் குறையுண்டு!' என்பதைச் சொல்லாமல் சொல்கிறது. 'என்ன செய்வேன்?' என்று தலைவி வருந்துவதாகப் புலவர் காட்டுகிறார். உண்மைதான்! அந்த அணிகலன்களைக் காட்டிலும் பெரிய அணியாயிற்றே காதல்! அதைப் பெறுமல் ஆபரணத்தை மட்டும் பெற்றிருந்தால் யாது பயன்?

மன்பொரு வேல்-எதிரிகளோடு போர் செய்து நிற்கும் வேல்; மெய்யதுவும்-உடலில் பூசியிருப்பதும்! வார் பொதியின் சந்தனமால் - மிகவும் உயர்ந்து காணப்படுகின்ற பொதிகை மலையில் விளைந்த சந்தனந்தானே!

* * *

## கண்டும் காணவில்லை!

பெண்—என்ற சொல் இருக்கிறதே, அதற்கு அதிக் மதிப்பு உண்டு. அந்தச் சொல்லுக்குள் அடங்கியிருப்பது அச்சம், மடம், நாணம் போன்ற முக்கிய பொருப்புள்ள பொருள்கள். அந்தப் பொருள்களையெல்லாம் தன்னகத்தே பெற்றுள்ள காரணத்தால்தான் பெண் என்ற சொல்லுக்கு அதிக ஆற்றல்! அவற்றைக் கட்டிக் காக்கும் காரணத்தால் தான் பெண்களெனவும் அன்னையெனவும் அழைக்கப் படுகிறது.

அவ்விதமுள்ள ஒரு பெண்ணுள்ளம், ஆண் மகனைக் கண்டு நாணமடைவதில் என்ன வியப்பு இருக்கிறது? அதுதான் இயற்கையாயிற்றே! ஆண்களுடைய கண், பெண் கண்களோடு மோதினாலுமே இல்லாத அச்சமும், எங்கேயோ குடிகொண்டிருக்கும் நாணமும் வெளிவந்து விடுமே! அதனால் தானே அவர்களுக்கு உயர்வு! அதனால் ஒருத்தி வெட்கப் பட்ட நிலையிலே பேசுகிறாள்.

"தோழி! பண்ணிசைக்கும் வண்டுகளுக்குப் பசி வருகின்ற வேளையில், நறுமணம் குடிகொண்டுள்ள பூக்களில் தங்கி தேனைக் குடித்துச் சுகம் பெறும். அத்தகைய நறுமணப் பூக்களால் தொடுத்த மாலையை அணிந்துள்ளவனும் வீரமிக்க புரவிகளைப் பெற்றுள்ளவனுமான பாண்டியனை; நான் பார்க்காமல் இருக்கவேண்டு மென்று எத்தனையோ முயற்சித்து இருக்கிறேன். அங்ஙனம் அவனைப் பாராத நாளில் என் தோள்கள் மெலிந்த நிலையில் தோன்றும். அதனால் கைகளும் மெலிந்து வளையல்கள் கீழே விழுந்து விடும். சரி, அவனைப் பார்த்தாகிலும் உள்ள ஆவலைப் பூர்த்தியாக்கிக் கொள்வோ மென்று முயற்சித்தால் வெட்கம் மேலிடுகின்றது. அப்படி வேட்கப்படாமல் இருந்தாலோ பெண்மைக்குள்ள பெருந் தன்மை சீரழிந்து போய்விடும். இதனால் இறுதியில் என்ன என்ன ஏற்பட்டுள்ளது. பெருத்த துன்பந்தான். அவனைக் காணமுடியாமல் கலங்கும் ஒரே நிலைதான்" என்று, கண்ணீர் விட்டபடி சொல்லி முடிக்கிறாள்.

78\. நாணுக்கால் பெண்மை நலன் அழியும் முன்நின்று
காணுக்கால் கைவளையுஞ் சோருமால்...
காணேன் நான்
வண்(டு) எவ்வம் தீர்தார் வயமான் வழுதியைக்
கண்(டு) எவ்வம் தீர்வதோர் ஆறு.

(வி-ரை) பெண்மைக்குரிய இலக்கணத்தை இப் பாடல் தெள்ளத் தெளிய விளக்குகிறது. நாணத்திற்குள்ள உண்மையான மதிப்பை, தலைவியின் வாயிலாக வெளிப்படுத்துகிறார். சாதாரண ஒரு சொல்லாக இருந்தாலும், அதைக் கையாளுகின்றவரின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் ஏற்றபடி அமைவது

போலத்தான் புலவரும் நமக்கு அமைத்துக் காட்டியுள்ளார். 'நாணம்'—என்ற சொல், சொல்வதற்கு எளிதாகத் தோன்றலாம். ஆனால் அறிவாளிகளின் அகத்திலிருந்து அந்தச் சொல் வரும்போது உயிர் பெற்றுவிடுகின்றது. அம் முறையைத் தான் இவ்வெண்பாவிற்குள் காண்கிறோம்.

காணுக்கால்-காணாமல் இருக்கும்போது; கைவளையும் சோருமால்-கைவளைகளும் மெலிந்து கீழே விழுவதால்;

* * *

## மங்கையின் மனப்பாங்கு

மாலை வேளை!

நிலா முற்றத்திலே சோர்ந்து உட்கார்ந்துகொண்டு இருக்கிறாள். தென்னவனைப் பற்றி அவள் நெஞ்சம் நெகிழ, அதனால் அவள் கொங்கைகள் விம்முதல் பெருகின்றன.

இளம் பருவம்! பதினாறு வயதுகூட முடிந்திருக்காது. அவளது மார்பைக் கண்டால் எப்படி இருக்கும்! ஆகா! எழுத்தால் எழுதி-பாட்டால் புனைந்து,ஓவியத்தால் வரைந்து முடிக்கக் கூடியதா? நேரிலல்லவா அக் காட்சியைக் கண்டு களிப்புற வேண்டும்! அவ்வளவு இன்ப மாயிற்றே! அத் தகைய இனிய கொங்கைகளை வைத்துக்கொண்டு துன்புறும் கோதையின் சோர்வைக் காணுங்கள் :—

"ஏ. மனமே! தென்னரசன்மீது காதல் கொண்டேன். அதன் காரணமாக இன்று உருகி நிற்கிறேன். வேலையொத்த தந்தங்களைப் பெற்றுள்ள யானைக்குத் தலைவனான பாண்டியனுடைய மார்பில் குளிர்ச்சி பொருந்திய சாந்து இருக்கிறது. அதோடு குங்குமச் சாந்தும் அமைந்துள்ளது. அவ்வாறு எல்லாவிதமான சாந்துகளையும் பெற்றுள்ள அவனது மார்பு என் மார்போடு ஒன்றுபடாததால் எனக்கு எவ்வளவு துன்பம் பிறந்திருக்கிறது தெரியுமா? சொல்லுந்தரமன்று! பனைமரத்தில் துளிர்விடுகின்ற குரும்பை போல என் மார்பு இருந்து என்ன செய்ய? வீண்தானே!" என்று நெஞ்சம் நெகிழ்ந்தவாறு கூறுகிறாள்.

79. வாரிய தென்னை வருகுரும்பை வாய்த்தனபோல்
ஏரிய ஆயினும் என்செய்யும் - கூரிய
கோட்டானைத் தென்னன் குளிர்சாந்[து]
அணி அகலக்
கோட்டுமண் கொள்ளா முலை.

(வி-ரை) விம்முதலால் முலைக்காம்பு மேலிட்டு நிற்கிறது. அதை அவன் காணும்போது கலக்கம் பெற்று நெஞ்சோடு பேசிக் கொள்கிருள்.

ஏரிய ஆயினும்-மாட்சிமைப்பட்டதாக இருந்த போதிலும்; என் செய்யும்-யாது பயன்; குளிர் சாந்து அணிய கலக் கோட்டு மண்-பரந்த மார்பிலே தடவிய குளிர்ச்சி மிக்க சந்தனத்தின்மீது அழகுபட அமைந்துள்ள குங்குமச் சாந்தை ;

* * *

## இரண்டும் துன்பமே !

பாண்டிய நாட்டின் ஒப்பற்ற செல்வம், வைகை ! எப்போது பார்த்தாலும் தெளிந்த நீரோடு இருக்கும் ஆறு ! அவ்வாற்றிலுள்ள கயல்களும் புதியதாகவே காணப்படும்.

இளமை வாய்ந்த நங்கையர்கள், விடியற் காலத்தில் குடத்தைத் தூக்கிக் கொண்டு வைகைக்குச் செல்வர். உடன் செவிலியர்களும் வருவர். இது, அன்றாட நிகழ்ச்சி ! காணக் கூடிய காட்சி !

ஒருத்தி, ஒருவன்பால் பாசம் வைத்தாள் ! அவன் தன் நேசக்கரத்தை நீட்டும் நாள் எந்நாளோவென ஏங்கினுள். அவளும் அந்த வைகை ஆற்றில்தான் நீராடச் செல்வாள். அவளை வளர்த்த பெருமைக்குரிய செவிலியும் உடன் செல்வாள். நீரிலே மூழ்குவாள். நங்கை ! நெடுநேரம் குளிப்பாள் ! அதுகண்ட செவிலி கடிந்துரைப்பாள். கரையிலேயே ஒருநாள் உட்கார்ந்துகொண்டு மனத்தை எங்கேயோ விட்டு விட்டு இருந்தாள். அதுவும் அந்தச் செவிலிக்குச் சீற்றம் கொள்ளத் தக்க அளவில் இருந்தது.

வீட்டிற்கு வந்தாள். தோழியைக் கண்டாள். ஆற்ருேரத்தில் செவிலி கடிந்துரைத்ததை வெளிப்படுத்துகிருள்.

“வேலையொத்த விழிகளைப் பெற்றுள்ள எனதுயிர்த் தோழியே! எனக்கு எவ்வளவு துன்பம் பார்த்தாயா? நேற்று விடியற்காலம். நீ வரவில்லை. நானும் செவிலியும் சென்ருேம்.”

“எங்கே ?”—என்கிருள் தோழி

“பகைவரைக் கொல்லும் அளவில் ஆற்றல் பெற்றுள்ள யானைப் படைக்கு அதிபதியான பாண்டியனுடைய குளிர் புனலான வைகை ஆற்றிற்கு! அங்கே சென்று வெகுநேரமாக நீரில் விளையாடினேன். அது பிடிக்காத செவிலி கண்டவாறு பேசலுற்ருள். ஏன் அப்படிப் பேசினுள் என்பதற்கு ஒரளவு எனக்குப் புரிந்துவிட்டது. தென்னவன் மீது தீராத காதல் கொண்டிருப்பதை முன்னிட்டுத்தான் இப்படி ஆடுகிருள் என்று எண்ணி துன்பத்திலாழ்த்தினுள். இன்ருே, நீரில் மூழ்காமல் கரையில் சோர்ந்து உட்கார்ந்திருந்தேன். அப்போது அவள், வையைப் பெருமானின் மீது நான் கொண்டுள்ள காதல், வளர்த்தவளுக்குத் தெரியாமல் இருக்கும் பொருட்டு அவ்விதம் செய்ததாக அவள் நினைப்பு. பெண்ணுகப் பிறந்துவிட்டால் எல்லாவற்றிற்கும் அடங்கித்தான் ஆகவேண்டுமா ?” நீயே சொல் !” என்கிருள்.

80. ஏற்பக் குடைந்(து)ஆடில் ஏசுவர் அல்லாக்கால்
மாற்றி யிருந்தாள் என உரைப்பர்—வேல் கண்ணுய்
கொல்யானைமாறன் குளிர்புனல் வையைநீர்
எல்லாம் எனக்கோர் இடம்.

(வி - ரை) வளர்ப்புத்தாய் நினைத்தது வேறு; அவள் மகள் நினைப்பது வேறு. வளர்த்த பாசத்தால் உண்மையைச் சொல்லி கரைக்கழைக்கிருள் அவள்: இவளோ, காதல் வயப்பட்ட காரணத்தால் வேறு விதமாகப் புரிந்துகொள்கிருள். ஆகவே, நீராடுதலும் நீராடாமல் நிற்றலும் பெருந் துன்பமாகவே இருக்கிறது. இரண்டும் துன்பமாகவே தெரிகிறது, அவளுக்கு!

ஏற்பக் குடைந்து ஆடில்-ஓயாது மூழ்கி நீராடினால்;

ஏசுவர் - தூற்றுவர்; கொல்யானை - கொல்லக்கூடிய அளவிற்கு ஆற்றல் பெற்ற யானை; மாறன் - பாண்டியன்; இடர் - துன்பம்.

* * *

## கூடலே கூடு !

சிறுமியாக இருந்தபோது அனைவரிடத்திலும் ஆடிப் பாடினாள்! மணல் வீடு கட்டி மனையாட்டியாக நடந்தாள். அப்போது அவள் தாய் தந்தையர்கள் விருப்பப்படி விட்டு வைத்திருந்தனர். முல்லை இதழ் விரியாத காரணத்தால்!

முல்லை மலர் மலர்ந்தால்—? அதைக் கவர்ந்து செல்ல பல கள்வர் வருவர். அதனாலேயே பருவம் அடைந்த பெண்ணைப் பக்குவமாக வீட்டில் வைத்துப் பெற்றோர்கள் காப்பாற்ற வேண்டியவர்களானார்கள். அப்படி யிருந்தும் அவள் கண்கள் ஒருநாள் ஒருவனைக் கண்டுவிட்டன. அவன் தான் தென்னவன்!

அவனும்தான் பார்த்தான்!

பார்த்தவன் நின்றானா? மிகவேகமாகப் போய்விட்டான். ஆனாலும், 'கண்ணோடு கண் இணைந்ததே! அது, காதலுக் குள்ள அந்தரங்கஃஅர்த்தந்தானே!' என்று கருதுகிறாள்.

நாட்கள் உருண்டோடின.

பெருத்த பாசத்தால் அணிகலன்களை வெறுத்தாள்! தன் வீட்டின் முன்னே பரப்பப்பட்டிருக்கும் வெண்மணலில் வந்து அமர்ந்து, தென்னவா! உன்னைக் கூடாமல் உயிர் விடுவேனோ' என்ற கேள்விக்குறி எழுப்புகிறாள். அப்போது அவளுக் கொரு பைத்தியக்கார எண்ணம் மேலிடுகிறது. மணலில் எதையோ எழுதுகிறாள்.

மணலில் விரலை வைத்துக்கொண்டு கண்மூடிக் கிடக்கும் காரிகையைக் காணுகிறாள், தோழி. அவளுக்கே பரிதாபகர மாகத் தெரிகிறது; நினைக்கிறாள்.

''மதுரைக்குப் பதியாகவுள்ள பாண்டியனை நினைத்து இப்படியா இவள் இருக்க வேண்டும். ஐயோ! கண்மூடி வழக்கமெல்லாம் செய்கிறாளே! ஊம்...மணலில் வட்டமாக ஒருகோடு கிழித்து, சுழி சுழியாகச் சுழித்துக் கொண்டு, இரண்டு இரண்டு எண்ணிக் கொண்டு, இரண்டும் ஒன்றும் சேர்ந்து வந்தால் மாறனோடு கூடுவோம்; இல்லையேல் வாடுவோமெனக் கண்மூடி நிற்கிறாளே!'' என்று எண்ணிக் கொண்டு இருக்கையில் கையை எடுத்து விட்டுக் கண்ணீர் விடுவதைக் காண்கிறாள்.

என்ன பேதைமை! அவ்விதம் கண்மூடிக் கொண்டு இரட்டையில் விரலைப் பதிய வைக்காவிட்டால் என்னோடு கூடமாட்டானா என்ற நினைவாலன்றோ கையை எடுத்து விட்டாள். காதல் என்றால் இப்படியா இருக்க வேண்டும்?' என்று மனதிற்குள் நினைத்து வருந்துகிறாள்,

81. கூடல்பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப்பெறுவேனேல் கூ(டு)என்று—கூடல்
இழைப்பாள்போல் காட்டி இழையா(து) இருக்கும்
பிழைப்பில் பிழைபாக்(கு) அறிந்து

(வி - ரை) காதல் என்றாலுமே முடியாத ஒன்றைக் குறித்து முழுநாளும் வாடுவது என்றுதான் பொருளா? இல்லையென்றால் தென்னவனைப்பற்றி அவள்ஏன் கருதுகிறாள்? தோழி ஏன் துயரப்படுகிறாள். எல்லாம் மயக்கந்தானே!

கூடல் பெருமானை - நான்மாடக் கூடலுக்குத் தலைவனான பாண்டியனை; பிழைப்பில் பிழைபாக்கு அறிந்து - போடுகின்ற வளையம் மனத்திற்கு ஏற்றவாறு கூடாமல் போய்விட்டால் என்ற கவலையோடு.

* * *

## சொல்லாமல் சொல்!

இரவு எட்டு மணி இருக்கும்! இன்று போல மணி பன்னிரெண்டு ஆனாலும் ஊரைச் சுற்றிக்கொண்டிருக்கும் இளைஞர்கள் அன்றில்லை. யாராக இருந்தாலும் இரவு ஏழு

மணிக்கெல்லாம் போர்வையை இழுத்து மூடிக்கொண்டு உறங்கிவிடுவர். அதுபோலவே விடியற்காலம் மூன்று மணிக்கெல்லாம் எழுந்து கடமைகளைச் செய்ய முனைவர். பெண்களும் அப்படித்தான். ஆனால் ஒரு சிறு மாறுதல் உண்டு. காதலுக்கு ஆளாகியவர்கள் மட்டும் உறங்க மாட்டார்கள். விழித்துக் கிடப்பார்கள். ஊராருக்குத் தெரியாது. ஒருத்திக்கு மட்டுந்தான் தெரியும். அவளும் அவள் உயிர்த் தோழியே.

அன்று நெடு நேரம் உறங்கவில்லை. மனக் குழப்பத்தோடு படுத்திருந்தாள். காதல் என்னும் கடலில், மனம் என்னும் அலை ஓயாமல் மோதிக்கொண்டே இருந்தது. எதோடு? உணர்வோடு! புரண்டாள்! சாய்ந்து உட்கார்ந்தாள்; ஊம்...ஆறுதல் ஏது? தோழியைக் கூப்பிட்டாள். தூது போவதற்கு அவள்தான் ஏற்றவள் என்பது அவள் எண்ணம். அவளும் அவளருகில் வந்தாள்.

''தோழி! எனக்கு என்னவோ ஒரு மாதிரியாக இருக்கிறது. இந்தத் தருணத்தில் எனக்கொரு உதவி செய்ய வேண்டும்!'' என்று கோருகிறாள்.

"அம்மா! உங்களுக்காக நான் என்ன வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் செய்வேன். தயங்காமல் சொல்லுங்கள்!'' என்கிறாள் அவள்.

''அது தெரிந்துதான் அழைத்தேன். தோழி! நேராகத் தென்னவன் அரண்மனைக்குப் போ. அவன் அங்கு இருப்பான். நான் தூங்க முடியாமல் கண் விழித்துக் கிடப்பதை மறைமுகமாகச் சொல்! குளிர்ந்த தன்மையின்றி இருக்கும் மதம் பிடித்த யானையின் மீது ஊர்வலம் வந்த பாண்டியனிடத்தில் நானுள்ள தெருவைப்பற்றி ஒன்றும் சொல்லாதே; அதோடு இன்னார் மகளெனக் கூறாதே! 'பெயரென்ன' என்று கேட்டால், 'தெரியாது!' என்று சொல். ஊரைப் பற்றியும் உரைக்காதே! அவனுக்கு வேதனையாக இருந்தாலும் இருக்கும். என் தாயைப் பற்றியும் புகழ்ந்து பேசாதே! வீண் பெருமையெனக் கருதினாலும் கருதுவான். ஆகவே யாரோ

ஒருத்தி உன்னை நினைத்துக் கண்ணீர் விடுவதைக் கண்டேன். சொன்னேன் என்ற அளவிலேயே பேச்சு இருக்கட்டும்! என்ன சொல்லி அனுப்புகிருன் என்பதைப் பார்ப்போம்!'' எனச் சொல்லி, தோழியைத் தூதாக அனுப்பி வைக்கிருள்.

82. என்னை உரையல்என் பேர் உரையல் ஊர் உரையல்
அன்னையும் இன்னள் எனஉரையல்—பின்னையும்
தண்படா யானைத் தமிழ்நர் பெருமாற்(கு)என்
கண்படா வாறே உரை.

(வி - ரை) என்ன அருமையான தொடர் !

என்னை உரையல்.........!

என் பேர் உரையல்.........!

ஊர் உரையல்.........!

அன்னை இன்னள் என உரையல்—? 'எல்லாமே சொல்லாதே!' எனப் புலவர் முடித்துத் காட்டுகிருர். சொல்லுகின்ற முறையில் எத்துணை எடுப்பு காணப்படுகின்றது. இஃதன்ருே கவியுள்ளம்! படம் பிடித்துக் காட்டுவது போலல்லவா இருக்கிறது, இப்பாடல்! 'எதைப் பற்றியும் சொல்லாதே; என் காதலைப் பற்றி மட்டும் மறைமுகமாகத் தெளிவு படுத்து!' என்ற வரி நினைந்து நினைந்து போற்றக் கூடியது. மன்னனைச் சொல்லும்போது, 'தமிழர் பெருமான்!' என்றல்லவா சொல்லுகிருர். தமிழை வளர்க்கும் தார்வேந்தனுக்குக் கவிதையில்தான் எத்துணை இடம்.

உரையல் — சொல்லாதே; இன்னள் — இத்தகையவள் என்னை—என்னைப் பற்றி.

* * *

## கதவடைப்பு தேவையா ?

பாண்டியன் உலா வரும்போதெல்லாம் கதவடைப்பு! அவள் உள்ளத்திலோ ஒரே துடிதுடிப்பு! இப்படி எத்தனை நாளைக்குத்தான் அவளால் இருக்கமுடியும்? துன்பத்தை

அனுபவிப்பதற்குத்தான் ஓர் எல்லையில்லை, சேச்சே ! 'வெளியே போகாதே! பின்பக்கத்திலே என்ன வேலை ? கதவிற்கிடையே நிற்பதென்ன?—இதுவே கூச்சல். கூண்டிலே அடைபட்ட கிளியானாள்; வலையிலே விழுந்த மீனானாள்; அதனாலேயே அவள் உடம்பு துரும்பாகியது. பெற்றோர் என்ற பட்டத்தைப் பெற்றவருக்குப் பொறுப்பு உண்டுதான். அதற்காக அதிகமாகத் தொல்லைப்படுத்துவதா ? ஆனாலும் அவள் சகித்துக்கொண்டு உள்ளே இருந்தாள்.

அயலூருக்குச் சென்றிருந்த அவள் தோழி வந்தாள். தம் பெற்றோர் செய்யும் கொடுமையைக் கூறத் தொடங்குகிறாள்.

''வளையல்களை அணிந்து அழகுற மிளிரும் தோள்களையும் வாளையொத்த கூறிய கண்களையும் பெற்றுள்ள என்னரும் தோழியே! கேள்...! நான் சொல்லப் போவதிலே சுவை மிகுந்த செய்தியொன்றும் இல்லை. சோகச்சுவை குறைவின்றி உண்டு. அரும்பவிழ்ந்த மலரை மாலையாகத் தொடுத்து அணிந்துள்ளவனும், பகைவரைச் சூறையாடி, அவர்தம் நிலத்தைத் தன்னகத்தே சேர்த்துக்கொள்ளும் அளவிற்கு ஆற்றலுள்ள படையையும், வீரம் செறிந்த வேலையுமுடைய பாண்டியனை, 'காணாதே!' என வற்புறுத்துகிறார்களே என்னைப் பெற்றவர்! இச்செயல் நேர்மையானதுதானா ? இளமைப் பருவத்தைச் சற்றேனும் புரிந்து கொள்ளாதவர்களாக விளங்குகிறார்களே! அவர்கள் இளமையில் இருக்கும் போது என்னென்ன செய்திருப்பார்கள்? அதை எண்ணிப் பார்க்க வேண்டாமா ? இப்போது முதுமை வந்துவிட்டது என்ற காரணத்தால் இளமையுடையவளான என்னைத் துன்புறுத்துவதா ? இக்கொடுமையை இன்னும் எத்தனை நாளைக்குத்தான் பொறுத்துக்கொண்டு இருப்பது!'' என்கிறாள்.

83. வளையவாய் நீண்டதோள் வாள்கணாய் அன்னை
இளையளாய் மூத்திலள் கொல்லோ — தளையவிழ்தார்
மண்கொண்ட தானை மறங்கனல்வேல் மாறனைக்
கண்கொண்டு நோக்கல்என் பாள்.

(வி - ரை) தோழியின் வாயிலாகத் தன் நெஞ்சி லுள்ளதை வெள்ளிடை மலைபோல் விளக்குகிருள். இளமைக் கும் முதுமைக்கும் ஒரு போராட்டம் நடைபெறுகிறது. கடந்த காலத்தை நினைத்துப் பார்க்க நேரமில்லாமலிருக்கும் தம் பெற்ருேரைக் குறித்து வருந்துவதை தலைவியின் வாயி லாக விவரமாக வெளியாக்கியுள்ளார் புலவர்.

வளை அவாய் - தோளுக்கேற்ற வளையத்தை அணிந் துள்ள அன்னை; தளை அவிழ்தார் - மலரிதழ் பூக்க, அதை மாலையாக்கி கழுத்தில் போட்டுக் கொண்டிருக்கும் காவலனை;

* * *

மங்கல முழக்கம்!

முழக்கவொலி!

போர் முழக்கமல்ல அது; புவியாளும் மன்னன் உலா வரும் கோலத்தை உணர்த்தும் இன்பவொலிதான் அது. ஒலி கேட்டு வெளியே வந்தாள், ஒரு நங்கை! எதையும் அவள் கண்கள் காணமுடியவில்லை. சோர்வோடு உள்ளே போகிருள். திரும்பவும் பெருத்த சத்தம்! ஆர்வத்தோடு வெளியே வருகிருள். ஏதோ ஒரு கொடி அவள் கண்களுக்குப் புலனுகிறது. வரவர தெளிவாகத் தெரிகிறது! கயற்கொடி.

அந்தக் கொடியோடு கூடியதேர்! அந்தத் தேருக்குள்ளே முடிமன்னன்! அதோடு முத்தாரம்! பேராற்றல் படைத்த பெரு வீரர்கள்! களிறுண்டு; குதிரையுண்டு! இத்தனைப் பரி வாரங்களோடு பவனி வரும் திருக்கோலம். காணக் காண கவர்ச்சி யூட்டும் முகம்!

'ஆகா' என்ன அழகு!'—இதைத்தான் நினைத்தாள். ஒரு முறைதான் அவனைப் பார்க்கும் பாக்கியம் கிடைத்தது போதுமே!

அன்றையிலிருந்து அவளுக்குத் தூக்கமில்லை. ஒரே ஏக்கந் தான். என்னதான் தன்னைத் தானே தேற்றிக் கொண்டாலும் முடியாத சோகம்! அடிக்கடி குறுக்கே புகுந்து, அவள் உள் ளத்தைக் குலைத்தது.

ஒரு நாள்!

பக்கத்து வீட்டிலிருந்து இளம் பெண்கள் பொற் சுண்ணத்தை இடிக்கும் ஒலி கேட்கிறது. அதோடு தம் தம் காதலர்களைப் பற்றிப் பேசிக்கொள்ளும் செய்தியும் தெளிவாக அவள் செவியில் நுழைகிறது.

பதை பதைக்கிருள். இப்படி ஒரு வாய்ப்பு நமக்கு கிடைக்காதாவெனத் துன்புறுகிருள். அந்தச் சோகத்தால் தனிமையில் அமர்ந்து கொண்டு தாளுகப் பேசிக் கொள்கிருள்.

"உள்ளமே! கொடி கண்டேன்; கொற்றவனின் முடி கண்டேன்; முத்தாரம் பதிந்த மார்பைக் கண்டேன்!" தேரோடு வருகின்ற வீரர்களைக் கண்ணுற்றேன். காவலன் மீது காதலுற்றேன். என் செய்வேன்? சிறையிலல்லவா இருக்கிறேன்! பக்கத்து வீட்டுப் பெண்களெல்லாம் உலக்கை ஒச்சும் சத்தத்தோடு தாம் காதலித்த காதலனுடைய வரலாற்றைச் சொல்லிக்கொள்கிருர்கள்! நானும் அப்படி உலக்கை ஒச்சி உள்ள குறையை தாய்க்குத் தெரியாவண்ணம் வெளியே கொட்ட வேண்டும் என்ற ஆவல்தான். ஆனல் என் வீடு மிகவும் சிறியதாயிற்றே! உலக்கை ஒச்சும் வாய்ப்பு எனக்குக் கிடைக்குமானல் மாறனைப் பற்றி மனமார பேசிப் பேசி என் ஆவலைப் பூர்த்தி செய்துகோள் வேனே!" என்கிருள்.

84. கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்தார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித்—தொடிஉலக்கை
கைம்மனையில் ஓச்சப் பெறுவேஞே யானும்ஓர்
அம்மனைக் காவல் உளேன்.

(வி - ரை) அவளுக்குத்தான் எவ்வளவு ஆசை? அதை எடுத்துரைக்கும் புலவருக்குத்தான் எந்த அளவிற்கு ஆவல் இருக்கிறது. 'உலக்கை ஒச்சும் நிலை எனக்கு ஏற்படுமானல் அவன் ஏறி வந்த தேரைப்பற்றிப் பாடுவேன்; சூடி வந்த மலர் மாலையைப் பற்றிப் புகழ்வேன்! முத்தாரத்தைப் பாராட்டி நிற்பேன்!' என்று சொல்லும் தலைவியின்

ஆர்வம்தான் என்னே! கூடத்திலே ஒச்ச வலியுறுத்தும் நெஞ்சந்தான் என்னே!

கொடிபாடி - கொடியைப் பற்றிப் பாடி; தேர்பாடி - தேரைப் பற்றிப் புகழ்ந்து; முடிபாடி - அவன் அணிந்து வந்த முடியைப் பற்றிப் பாராட்டி; முத்தாரம் பாடி-அவன் மார்பிலே அணிந்து வந்த முத்தாரத்தைப் பற்றிய உண்மையை எடுத்துக் கூறி; தொடியுலக்கை - பூணுல் செய்யப்பட்ட உலக்கை;

* * *

## அன்னைக்குள்ள அறியாமை!

பாண்டியன் வந்தான்! அவன் வரும் செய்தியை அக்கம் பக்கத்தார் வாயிலாகக் கேட்ட ஒருத்தி தெருவாசற்படியில் நின்றுகொண்டு பாரக்கிருள். தேர் வருகிறது; தென்னவனும் வருகிருன், அவனை அப்படியே விழுங்கி விடுவதுபோல் பார்க்கிருள். இதையெல்லாம் கவனித்துக் கொண்டு பக்கத்தில் நின்றிருந்த அவள் தாய், கையைப் பிடித்து இழுத்துச் சென்று, உள்ளறையில் தள்ளிக் கதவைப் பூட்டுகிருள். அப்போது அவள் நெஞ்சோடு சொல்லிக் கொள்கிருள்.

"ஏ, மனமே! என்ன விசித்திரமான நிகழ்ச்சி, தென்னை மரத்திலே தேங்காய்க் குலைகள் தொங்கும்படியாக இயற்கையழகு பொருந்திய நாட்டுக்குரிய தலைவனேடு என் மனம் போய்விட்டது. போனது மட்டுமா? அவனேடு கொஞ்சிக் குலவிக்கொண்டு இருக்கிறது. இதைப் புரிந்துகொள்ள முடியாத என் தாய் வெற்று உடலை மட்டும் பிடித்து வைத்து இருக்கிருள். கூட்டுக்குள்ளே இருந்த காடையை, வேடுவன் வெளியே பறக்க விட்டு விட்டு, அது சென்றதை உணரா வண்ணம் இருந்துவிட்டு: ஏதோ ஒரு சோர்வோடு அக்கூட்டைப் பக்குவமாக எடுத்து வைத்தது போலல்லவா இருக்கிறது, என் தாயின் செய்கை! வெறும் உடம்பைப்பூட்டி வைப்பதால் யாது பயன்? என் மனம்தான் மன்னனேடு உறவாடுகிறதே!" என்று சொல்லிக் கொள்கிருள்

85. கோன்தேங்கு சூழ்கடல் கோமானைக் கூடஎன
வேட்(டு)அங்குச் சென்றஎன் நெஞ்சறியாள்-கூட்டே
குறும்பூழ் பறப்பித்த வேட்டுவன்போல் அன்னை
வெறுங்கூடு காவல் கொண்டாள்.

(வி-ரை) யாருக்கு அறியாமை என்பதை புரிந்துகொள்ள முடியாத தலைவி, 'அன்னைக்கே அறியாமை!' என்கிறாள். பைத்தியக்காரனைப் பார்த்தால், அவன், நம்மைப் பார்த்து 'நீதான் பைத்தியக்காரன்!' என்று சொன்னால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது, இக்காட்சியில் வரும் தலைவி யின் கூற்று.

கோன் - குலை ; வேட்டு - விருப்பங் கொண்டு ;

குறும்பூழ் - காடை ; வேட்டுவன் - வேடன் ;

வெறுங்கூடு காவல் கொண்டாள்-உடலை மட்டும் காவல் காக்க வேண்டியவளானாள்.

*   *   *

## வெற்றி பெற்ற கொற்றவன்!

'அரசோச்சும் ஆளன் யார்? அவன் வயதென்ன?' என்று இறுமாந்து, பாண்டியனை இகழ்ந்துரைத்தனர், அயலவர்.

ஒற்றன் வாயிலாக இச்செய்தி எட்டியது.அவ்வளவுதான்! 'கொட்டுங்கள் போர் முரசை! வெட்டுங்கள், பகைவரின் தோள்களை! பட்டொளி வீசிப் பறக்கட்டும் நம் கொடி! நா காக்கத் தெரியாத சில நச்சு மனங் கொண்ட சிற்றரசர்கள் நம்மை இகழ்ந்துரைத்தார்களாம்! அதற்காகவே இந்தப் போர்!" என, போர் முரசு கொட்டினான் பாண்டியன். வேல் தாங்கி நின்றனர், வீரர்கள் பொறி பறக்க—நீடு புகழ் பரப்ப-போர்களத்தை நோக்கி அரிமாவெனச் சென்றனர். சொன்னவர்தம் தலைகள் சின்னாபின்னப் பட்டன; இறுமாந் திருந்த அரசர்கள், இடிகேட்டு ஓடுகின்ற நாகம் போல்

ஆகினர்; கொடி கட்டிப் பறக்க விட்டான் கொற்றவன்! எங்கே? எதிரியின் கோட்டைக்கு மேலே!

அந்த வெற்றிப் புகழோடு பவனி வருகிறான், பாண்டி மன்னன்! காண்போர் அனைவரும் கைகூப்பித் தொழுத வண்ணம் இருக்கின்றனர். வலம் முடியும் வேளை. இறுதித் தெரு. இன்ப எழிலாள் அவனைப் பார்த்து காதல் கொள் கிறாள். கைகூப்பித் தொழுகிறாள். அவனும் அவ்விடத்தை விட்டுப் போய் விடுகிறான். அவள் நெஞ்சோடு சொல்கிறாள்.

"நெஞ்சே! இன்று அவனைக் கண்டு விட்டேன். மிகவும் மென்மையான மாந்தளிரை யொத்த என் நிறம் மாறி விடுமா? முகம் வெளுத்துவிடுமா! ஐயகோ!" எனத் துன் புறுகின்றாள்.

86. களியானைத் தென்னன் இளங்கோஎன்(று) எள்ளிப்
பணியாரே தம்பார் இழக்க—அணிஆகம்
கைதொழு தேனும் இழக்கோ நறுமாவின்
கொய்தளிர் அன்ன நிறம்.

(வி-ரை) காதல் வயப்பட்டவர்களைப் பார்த்திருந்த காரணத்தால்,'மாந்தளிரை யொத்த முகம் வெளுத்து விடுமோ?' என அஞ்சுகிறாள். உண்மைதானே! காதல் நிலைக்கு ஆளானவர்கள் நாள் ஆக ஆக அப்படித்தானே மாறிப்போய் விடுகிறார்கள். இதை அன்றே உணர்ந்துதான் புலவர் எழுதியுள்ளார்.

* * *

## கண்ணே பகை!

சில வேளைகளில்நம் கண்ணே நமக்குப் பகையாக விளங்குவதைக் காண்கிறோம். காணாததைக் காணும்; ஆவலைத் தூண்டும்; உள்ளத்தை அலைக்கழிக்கும். அவ்வளவு பொல்லாதவை இந்தக் கண்கள்! அடைய முடியாத பொருளின் மீதெல்லாம் ஆவல் கொண்டு நம்மை அழிக்கும். அத்தகையது அது!

இதோ, இப்போது ஒருத்தி தன் தோழியிடம் சொல்கிறாள். பாருங்கள்!

"தோழி! இரவெல்லாம் உறக்கமே வரவில்லை. ஏனோ தெரியவில்லை. இதற்கு முன்பெல்லாம் இன்பமாக உறங்கி இருக்கிறேன். யாரேனும் எழுப்பினால் அவர்களைக் கண்டபடி ஏசுவேன். அதனாலேயே தூக்கத்தில் யாருமே எழுப்ப மாட்டார்கள்; நானே எழுந்தால்தான் உண்டு. என் அன்னை, இதற்காகவே என்மீது சினங் கொள்வாள். இப்போது என்னவோ புரியவில்லை. கூப்பிடுவதற்கு முன்பே, 'ஆ!' என்ற எழுத்து, என்னை அறியாமலேயே வெளி வந்து விடுகிறது. எல்லாம் காதல் தந்த பலன்! பாண்டியனை என்று கண்டேனோ, அன்று முதல் உறக்கம் ஏது? அதுதான் அவனோடு சேர்ந்து போய்விட்டதே!

பிறரைக் கவரத்தக்க வகையிலே நகைகளை அணிந்துள்ள தோழியே! என்னுடைய கண்கள், அக் காவலனைப் பார்க்கும் போது இறுக மூடிக்கொள்கின்றன. ஆனால் நேற்றைய இரவு! கொஞ்சம் உறக்கம் வந்தது. உறங்கினேன்! அதுவும் ஏன் வந்த தென்றல், 'பாண்டியன் உன்னை அணுக வருகிறான்! என்ற செய்தி சொல்ல வந்தது. மாறனும் வந்தான்; மனதாரத் தழுவினான். அந்த நேரத்தில் மட்டும் என் கண்கள், அவனை நன்றாகப் பார்த்துக் கொண்டிருந்தன. இது என்ன? இப்படி என் கண், எனக்கே பகையாக இருந்தால் உண்மையாகவே அவனோடு உறவாடுவதுதான் எப்போது?" என்று கேட்கிறாள்.

அதற்கு அவளென்ன பதில் சொல்ல முடியும்? பேசாமல் இருக்கிறாள்.

87. கனவை நனவென்(று) எதிர்விழிக்கும் காணும்
நனவில் எதிர்விழிக்க நாணும்—புனையிழாய்
என்கண் இவையானால் எவ்வாறே மாமாறன்
தன்கண் அருள்பெறுமா தான்.

(வி-ரை) கண் செய்யும் கொடுமையைக் கூறும் பாடல் இது. காதலுக்குத் துணை செய்வதும் கண்; அதை அழிக்கப்

பாடுபடுவதும் கண்! குறைசொல்லி என்ன செய்ய ! அதன் குணம் அவ்வளவே ! நாணும் தன்மை உடையதே கண்!

புனையிழாய்-நகைகளை அணிந்துள்ள நங்கையே! என் கண் இவையானல்-என்னுடைய கண், இந்த அளவிற்கு இருந்தால்; அருள் பெறுமாதான்-காதலைப் பெறுமா என்ன.

* * *

## காட்டவே மாட்டேன்!

நகைச் சுவையான பாடல் இது! குழந்தைகள்தான் பெரியவரிடத்தில் என்ன சொல்லுகிறோம்? ஏது சொல்லுகிறோமென்று தெரியாமல் சொல்லும். ஆனல் பருவப் பெண்களுமா அப்படி இருக்க வேண்டும்? அங்ஙனம் ஒருத்தி இருந்திருக்கிறாள்.

மலர்த் தோட்டத்து வழியாக வந்தானும், மன்னன்! அங்கொருத்தி நின்றிருந்தாளாம். வந்தவன் அவளுடைய கை வளையல்களைக் கழற்றிச் சென்றானும். இதை, அவளது வளர்ப்புத் தாயாரிடம் சொல்கிறாள்.

"அன்னையே! வெளியே நின்றிருந்தேன், காவலன் வந்து நின்றான். எதற்காக அப்படி வந்து நின்றான் என்பது அப்போது புரியவில்லை; அவன் என் கைவளையல்களைக் கொண்டு போய்விட்ட பிறகுதான் உண்மை தெரிந்தது" என்கிறாள். இது முதல் நாள் செய்தி.

மறுநாள் மாலை!

யானைமீது ஏறி உலா வருகிறான், உயர்ந்த தலைவன். அவனைக் கண்ணாலே பார்க்கிறாள். வெகுநேரம் பார்க்கிறாள். அவன் சென்ற வழியை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறாள். எப்படியோ திரும்பி உள்ளே வருகிறாள்.

படுக்கையில் படுக்கிறாள்!

இரவு இரண்டுமணி வரையில் அவளுக்கு உறக்கமில்லை. நல்ல நேரம்! மெல்ல உறக்கம் வருகிறது. இமைகளை மூடு

கிருள். "வந்துவிட்டான், தென்னவன்! அதோ...அதோ..."
—இதே பிதற்றல்.

விடியற் காலம்! அவளது அன்பிற்குரிய செவிலித்தாய் கையிலே முல்லைப் பூவை வைத்துக் கொண்டு,"என் கண்ணே, எழுந்திரு! கண்ணைத் திற!" என்கிருள்.

அவள் கண்ணை மூடிக்கொண்டே,"என் கூந்தலிலே முல்லையைச் சூடவந்து நிற்கும் தாயே! என் வளையல்களைக் கவர்ந்து சென்றவனும், வாளை வைத்துஉள்ளவனுமான மாறன், இரவு, வலிமைமிக்க யானையோடு வந்து என் கண்மணிக்குள்ளே அகப்பட்டுக் கொண்டான். கண்களைத் திறந்தால் யாருக்கும் தெரியாமல் ஓடிப்போய் விடுவான். ஆகவே என் உயிரைப் பிரித்தாலும் கண்களைத் திறக்கவே மாட்டேன்!" என்கிருள்.

மகளுடைய பிதற்றலைக் கேட்டுச் சிலைபோல நிற்கிருள், செவிலி.

88. தலையவிழும் பூங்கோதைத் தாயரே ஆவி
களையினும்என் கைதிறந்து காட்டேன்—
வளைகொடுபோம்
வன்கண்ணன் வாள்மாறன் மால்யானை
தன்னுடன்வந்(து)
என்கண் புகுந்தான் இரா

(வி-ரை) 'கண்ணைத் திறந்தால் ஓடிடுவானும், அக் கள்வன்!' என்ன அருமை! காதல்-கனவாக மாறி, உள்ளத்தையல்லவா தொட்டிருக்கிறது! அதனுல்தான் மதிமயக்கங் கொண்டு பேசுகிருள். இல்லை, இல்லை...பிதற்றுகிருள்.

மால்யானை—மிகப் பெரிய களிறு; இரா—இரவுக் காலம்; தலையவிழும் பூங்கோதை - அரும்பவிழ்ந்த மலர்களால் தொடுத்த மாலை; வன்கண்ணன்-அஞ்சா நெஞ்சம் படைத்தவன்; ஆவி-உயிர்.

* * *

## கனவும் கலக்கமும்

நடுநிசியில் கனவு கண்டால், அதை நினைவாகவே நினைத்துக்கொண்டு எழுந்திருந்து பார்ப்போம். வந்தவரைத் தேடுவோம். காதலி வந்து பேசியிருந்தால் களிப்போடு தேடுவோம். பிறகு, கலக்கத்தோடு நாள் முழுமையும் கழிப்போம். 'இப்படி வந்தாளே ! இந்த விதமாகப் பேசினளே! கையைத் தொட்டு அணைத்தாளே!' என்றெல்லாம் நினைத்து நெகிழ்வோம். இது இயற்கை. அப்படி ஒரு பெண்ணே கண்டால்—?

அது பற்றி நமக்குத் தெரியாது. ஆனலும் தெரிந்து கொள்ளப் புலவர் வழிகாட்டுகிருர்.

மஞ்சத்திலே வஞ்சி படுத்தாள்; படுக்கையா அது! கல்லையும் முள்ளையுமல்லவா அந்தப் பஞ்சணையின் மேலே கொட்டி இருந்தது. அவள் அப்படித்தான் நினைத்தாள். காவலன்மீது காதல் கொண்டு இருந்ததால் மஞ்சமும் வஞ்சிக்கப்பட்டதாகத் தோன்றியது.

தூக்கம் வரும் வரையில் இப்படித்தான் எண்ணிப் படுத்திருந்தாள். உறக்கம் வந்துவிட்டது; உறவும் வந்து விட்டது. உல்லாசந்தான்.

பொழுது விடியும் சமயம்! அவளைத் தட்டி எழுப்பினள் தோழி. திடுக்கிட்டு எழுந்தவுடன், 'எங்கே...எங்கே?' என்று பிதற்றினள்.

"என்ன...என்ன?" என்று மடமடவெனக் கேட்டாள் தோழி'

அவளால் எதைச் சொல்ல முடியும் ? 'காவலன் எங்கே?' என்று கேட்கமுடியும். ஆகவே பேசாமல் இருந்துவிடுகிருள். தோழி விடுவாளா ?

"என்னம்மா இது ? ஏதேதோ சொல்கிறீர்கள் ? என்ன கண்டீர்கள்?"

"தோழி! எதைச் சொல்வது? ஏமாற்றம் அடைவதற்கென்றே பிறந்தவள் நான். கண்ணுறங்கும் வேளையிலே காவலன் வந்தான். கூர்மையான வேலை வைத்துள்ள வேலவன் வந்து என் கரத்தைப் பற்றினான். அப்போது எனக்கிருந்த ஆனந்தம்தான் என்ன! சொல்லுந்தரமன்று. என் கையை இறுகப் பிடித்தான். கனவென அறியாத நான், நனவிலேதான் இந் நங்கையின் கைப்பிடித்திருக்கிறானென்று தப்புக் கணக்குப் போட்டு விழித்தேன். நீதான் நின்றாய்! கனவில்கூட அவனை அணைத்து மகிழும் ஆற்றலற்றவளாகப் போய்விட்டேன். நனவென எண்ணி, கனவிலே கூடாது அவனைப் போகச் செய்துவிட்டேன். இதைவிட ஏமாற்றம் என்ன இருக்கிறது. இன்பம் ஏற்படும் போதுகூட, அதைப் புறக்கணித்து, துன்பத்தையே விலைக்கு வாங்கிக்கொண்டேன்!" என்கிறாள்.

89. ஓராற்றால் என்கண் இமைபொருந்த அந்நிலையே
கூரார்வேல் மாறன்என் கைப்பற்றத்—தீரா
நன(வு) என்(று) எழுந்திருந்தேன் நல்வினை
ஒன்(று) இல்லேன்
கனவும்இழந்(து) இருந்த ஆறு

(வி-ரை) கனவு நனவாகக் கொண்டு விழித்தாள். கனவு போயிற்று; கலக்கம் உண்டாயிற்று. இப்படி எல்லோருக்கும் நேர்வதுதான். என்ன பண்ணுவது? அதற்காக அழவேண்டுமானால் அழுதுதான் ஆகவேண்டும். அப்படியொரு கனவை, அறிவாளிகள் கண்டால் கலக்க மடைய மாட்டார்கள். அவளோ, அறியாப் பேதை!

நனவு-விழிப்பு; ஓராற்றால்-ஒரு வழியாக;

கூரார் வேல் மாறன்-கூரிய வேலேந்திய பாண்டியன்.

* * *

## கொற்கை மன்னன்!

கொற்கைப் பட்டினம்பெயர் பெற்றது. ரோம் நாட்டோடுகூடி, சீனநாட்டோடு உறவாடி கிரேக்க நாட்டு வரி

களிலே இடம் பெறுகின்ற அளவிற்கு வசதி செய்து தந்தது அந்தக் கடல் சூழ்ந்த கொற்கைப் பட்டினந்தான். அங்குதான் அயல்நாட்டினர் வருவர். அதனுலேயே அவனுக்குப் புகழ்! முத்துக்கென்றே முற்றுகை இட்டனர், அயலவரனைவரும். அத்தகைய சீரும் சிறப்பு மிக்கது, பாண்டிய நாட்டோடு சேர்ந்த கொற்கை!

அங்கேதான் ஒருத்தி குடியிருந்தாள். கோமானின் மீது காதல் கொண்டவள்! அவளுக்குத்தான் எவ்வளவு ஆசை! அவனை அடைய வேண்டுமாம்! ஓரிருநாளல்ல, வாழ்நாள் முழுமையிலுமாம்! அதற்காகவே கடற்கரை யடுத்த சோலைக் குள் தங்கிக் கிடக்கிருள். தன் தோழியைக் கூப்பிட்டு தூதாக அனுப்பி வைக்கிருள். அந்தநல்ல செய்தியைக்கேட்க வேண்டும் என்பதற்காகவே அச்சோலையில் அமர்ந்திருக்கிருள். அது சமயம் அவள் மனம் என்னென்ன எண்ணி ஏங்குகிறது தெரியுமா ?

'ஊம்...இந்நேரத்திற்கெல்லாம் திரும்பி வந்து கொண்டிருப்பாளா? நல்ல செய்தியைச் சொல்லி அனுப்பி இருப்பானு? என் உள்ளம் குளிருமா ?'—இப்படி எண்ணுகிருள் கடலைப் பார்க்கிருள். கடற்கரையைப் பார்க்கிருள். அலையால் மேடாகிக் கிடக்கும் மணல். பேரலையால் ஒரு சங்கு, அம்மணல் மேட்டில் வந்து நிற்கிறது. அந்தச் சங்கானது ஒரு முத்தை ஈன்று விடுகின்றது. அச்சங்கானது மறுபடியும் அக்கடலுக் குள் செல்வதற்காகப் பேரலையை எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறது, இக்காட்சியைப் பார்த்தவுடன் அவள் உள்ளத்தில் தான் எத்தகைய கிளர்ச்சி.

''இப்படித்தான் என் நிலையும். கொற்கைக் கோமானிடம் தோழியை தூதாக அனுப்பித்துள்ளேன். அவள் எப்போது நல்ல செய்தியோடு இங்கு வருவாளோ ? நாம் எப்போது அவனேடு ஒன்றுகூடி மகிழ்வோமோ ?'' என்று எண்ணியவாறு உட்கார்ந்திருக்கிருள். 'மணல் மேட்டிலுள்ள முத்தானது மன்னனின் மார்பிலே சென்று அடையப் போகிறது. நானும் அப்படிச் சென்று அடைய, தூது

வராதா? துன்பம் போகாதா? தொல்லை தொலையாதா? எனக் கூறிக்கொண்டு இருக்கிறாள்.

90. உருவாய் நிலத்த உயர்மணல்மேல் ஏறி
நகுவாய் முத்(து) ஈன்(று)அசைந்த சங்கம்—புகுவான்
திரைவரவு பார்த்திருக்கத் தென்கொற்கைக்
கோமான்
உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு.

(வி - ரை) 'கடலலையை எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் சங்கைப் போல் நானும் என் தோழி கொண்டு வரும் செய்திக்காகக் காத்திருக்கிறேன்!' என்பது மறைபொருள் விளக்கம். 'பேரலை வந்தால் சங்கு ஊடே போகும். நானும் அப்படித்தான் அவனோடு ஒன்றிடுவேன்!' என்று தனக்குள்ள ஆவலை அறிவிக்கிறாள். பொருத்திக் காட்டும் பொருளாழம் பெரிது. அவள் காதலும் பெரிதுதானே! இல்லையென்றால் இப்படி ஏன் எண்ணிச் சோர்வு கொள்கிறாள்.

உயர் மணல் மேல் ஏறி - பெரிய மணல் மேட்டின் மீது ஏறி; நகுவாய் முத்து ஈன்று - வெண்மை பொருந்திய நல்ல முத்தைப் பெற்று; அசைந்த சங்கம் - நகன்ற சங்கு; புகுவான் - திரும்பவும் கடலுக்குள் புகுவதற்காக; திரை வரவு பார்த்திருக்க - பேரலையொன்றை எதிர்பார்த்து நிற்க.

* * *

## வாடையே, போராடு!

பாண்டிய நாடு, இயற்கைக் காட்சிக்குப் பெயர் பெற்றது குளிர்ச்சி மிக்க நாடு அது! தென்னவன் ஆட்சி முறையும் அவ்வாறே. அந்த நாட்டின் கண் வாழும் ஓர் இள நங்கை!

காவலன் மீது காதல் கொண்டவள்! பருவ உருவம்! அவளுடம்பில் வாடைக் காற்றுப் படுகிறது. அதை ஒரு தோழியாக்கிப் பேசுகிறாள்.

''வாடையே! வாழி! நல்ல நேரத்தில் நீ வந்தாய். உன்னிடத்தில் ஒன்று சொல்லப் போகிறேன். குளிர்ச்சி மிக்க எழில் வாடையே! நீ தென்திசை செல்வாயல்லவா ? அங்கு வாழ்பவர்கள் சோறு பொங்குவதற்காகச் சந்தனக் கட்டைகளாலே தீ மூட்டி பொங்கல் வைப்பார்கள். அவ்வளவு சந்தனக் கட்டைகளும் கிடைக்கக்கூடிய பொதிகை மலைத் தலைவனான தென்னவனிடம் சென்று சொல்! "உன் மீது அன்பு கொண்ட ஓர் ஆரணங்கு கை வளையல் நெகிழ்ந்து கீழே விழுமாறு மெலிந்து காணப்படுகிறாள். அதற்கு ஏதேனும் ஒரு பரிகாரம் தேடு! கொன்று குவிப்பதிலே வல்லவர்களான மாற்றரசர்களின் வெண்ணிலவையொத்த வெண் கொற்றக் குடைக்கொத்த சிறப்பையும் செங்கோல் நெறிக்கும் இலக்காகிய நீ, ஒரு பெண்ணை இப்படியும் துன்புறச் செய்வது அழகாமோ ? எனக்கேள். என்ன சொல்கிறானே பார்ப்போம்,'' என்று சொல்லி வழியனுப்புகிறாள்.

91. மாறடுபோர் மன்னர் மதிக்குடையும் செங்கோலும்
கூறிடுவாய் நீயோ! குளிர் வாடாய்—சோறடுவார்
ஆரத்தால் தீமூட்டும் அம்பொதியில் கோமாற்(கு)என்
வாரத்தால் தோற்றேன் வளை!

(வி - ரை) செங்கோலுக்குள்ள வலிமையையும் முறையையும், அதற்குள்ள மதிப்பையும் வெளிப்படையாகப் புலவர் விளக்குகிறார். வாடையை தூதாக அனுப்பிக்கும் தலைவியை மெருகு குறையா வண்ணம் சித்தரித்துக் காட்டுகிறார்.

குளிர் வாடாய் - குளிர்ந்த காற்றைத் தரும் வாடையே ; ஆரத்தால் தீ மூட்டும் - சந்தனக் கட்டைகளால் தீ மூட்டும்; வாரம் - அன்பு குறித்து வந்த சொல்; மாறு அடுபோர் மன்னர் - எதிராளிகளை எளிதிலே வெல்லும் வல்லமை கொண்ட மன்னன்.

* * *

மானும் மனமும்!

என்னுகின்ற மனம் எங்கெல்லாமோ சென்று மீண்டு வரும். அதற்கு இலக்காகாத மனிதர்களே இல்லை. அதனால் தொல்லைப் படுவோரும் துயரத்தை அனுபவிப்போரும் கணக்கிட்டுச் சொல்வதற்கில்லை. அதை நிருபித்துக் காட்டும் வகையிலே இங்கொருத்தி வருகிருள்.

பாண்டியனேடு உறவு கொள்ள நினைத்த மனம், அவனுள்ள அரண்மனையை நாடிச் சென்றதாம். ஆனல், உள்ளே விடுபவர் யார்? வெளியிலேயே நின்றதாம். கோட்டை வாசலின் ஓர் ஓரத்தில் ஒதுங்கிக் கொண்டதாம். வருவோர் போவோருக்கு வழி விட்டுக்கொண்டு இருந்ததாம். உள்ளே எட்டிப் பார்த்ததாம். ஏராளமான கூட்டம்! எப்படிச் சொல்வது என்று தெரியாமல் பேசாமல் இருக்கிறதாம். எதற்காகத் தெரியுமா? தனிமையில் இருந்தால்தான் நன்முக அளவளாவ முடியும் என்பதற்காக! வெளியில் வருபவர்கள், கதவின் ஓரத்தில் நின்று கொண்டிருக்கும் மனத்தைக் கண்டு சிரித்துக்கொண்டே போகின்றனர். அது கண்ட மனம் வெட்கப்பட்டுப் போகின்றதாம்!—இப்படி நான் கூறவில்லை. தலைவியே தன் தோழியை அழைத்துச் சொல்கிருள். மற்றவற்றை அவள் வாயிலாகவே கேளுங்கள்.

"தோழி...அம்பு பட்ட பெண்மான்போல் என் மனம் அவனிடத்தில் சென்று, துடியாய்த் துடித்தபடி இருக்கிறது. புதரில் மறைந்து துன்பப்படுகின்ற பெண்மானைப் போலவே தான் என் மனமும் அங்கு இருக்கிறது" என்கிருள்.

92. புழுவார்க் கிடங்கொடா போதுவார்க் கொல்கா
நகுவாரை நாணி மறையா—இருகரையின்
ஏமான் பிணைபோல நின்றதே கூடலார்
கோமான்பின் சென்றவென் னெஞ்சு.

(வி - ரை) பாண்டியன் வந்தான். அவனேடேயே அவள் மனமும் சென்று விட்டது. கோட்டைக்குள் கொற்றவன் போனுன். ஆனல், அந்த மனம்—? அதோகதிதான்! வெளியி

லேயே நின்றிருந்தது. இதைத் தலைவியின் வாயிலாக வெளிப் படுத்திப் புலப்படுத்துகிறார். மனத்திற்குள்ள துணிவு வேறு எதற்கேனும் இருந்திருக்குமானால்—?

அவ்வளவுதான்! எல்லாமே தொலைந்துவிடும்...!

* * *

## காதல் நோய்!

காதல்—ஒரு நோய்! காதலனைக் கண்டால் காரிகைக்கு தீரும் நோய். அலைகின்ற அலைச்சலோடு சேர்ந்து சோர்ந்து அழுகின்ற நோய். காதலனைப் பார்க்காமல் இருக்கும் ஒரு சூழ்நிலை உருவானால் உயிர்கூடப் போய்விடும். அதனாலோ என்னவோ, 'காதல் என்பது கொல்லும் கருவி!' எனக் கவி ஞர்களும் கலைஞர்களும் சொல்லி வைத்துப் போனார்கள்.

காதலைத் தூண்டுவதே மனந்தானே! சாதலைத் தோற்று விக்கச் செய்வதும் அதுதானே! இல்லையென்றால் அவள் ஏன் வருந்துகிறாள். பாவம்! அனுதாபம் தெரிவிக்க வேண்டியதே! எத்தனை நாள் சோகம்? காண முடியவில்லையே காவலனை? என, எவ்வளவு நாளைக்குத்தான் ஏக்கம்! அந்த ஏக்கத்தால் எத்துணை துன்பம்? ஏமாற்றத்தின் எண்ணிக்கைதான் என்ன? மனத்திலே உள்ள சோகச் சுமையைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றல் அவளுக்கில்லை. அதனால் தோழியிடம் சொல்லியாகிலும் பாரத்தைக் குறைத்துக் கொள்ளலாம் என்ற முடிவு. அழைக்கிறாள் தோழியை. அவளும் வருகிறாள்.

''தோழி! நல்ல நகைகளைப் பூண்டுள்ள செல்வியே! எனக்கு ஏற்பட்டுள்ள துன்பந்தான் எத்தகையது? என் நிலையில் நீ இருந்தால் என்ன செய்வாயோ எனக்குத் தெரிய வில்லை, நான் மட்டும் உயிர் வாழ்கிறேன். உடல் இங்குதான். உள்ளமென்னவோ வேறொரு பக்கத்தில்! 'யானை வரும் பின்னே; மணியோசை வரும் முன்னே!' என்னும் முது மொழிக்கேற்ப நம் வீதியிலே மணியோசை கேட்டது. திரும் பிப் பார்த்தேன், யானை வந்தது. அந்த யானை மீது மாறன் ஏறி வந்தான். அது சமயம், இந்தப் பாழாய்ப்போன மனம்

கூடித் தொலைந்திருக்கக்கூடாதா? அது செய்யவில்லை. இந்தக் கணத்தில் என்னைத் துளைக்கிறது. நானென்ன செய்யட்டும்!

"இம் மாலை வேளையில் வாடைக் காற்று வேறு வந்து என் உயிரை வாங்குகிறது. அப்பப்பா! காதலால் கைமேல் கிடைத்த பலன் போதும்! சீற்றத்தோடு வரும் காற்றைப் பார்த்தால் நோய் பீடிக்கப்பட்ட நாள் முதற்கொண்டு சிறிச்சிறி விழுகின்ற உடல் நலிவைப் போலல்லவா இந்தக் காற்றும் அமைந்திருக்கிறது. நோய், அதிகம் ஆக ஆக உள்ளவர்கள் உயிர் ஊசலாடுவது போலல்லவா ஆகிவிட்டது!" என்கிருள்.

93. பிணிகிடந் தார்க்குப் பிறந்தநாட் போல
அணியிழை அஞ்ச வருமால் மணியானை
மாறன் வழுதி மணவா மருண்மாலைச்
சீறியோர் வாடை சினந்து.

(வி - ரை) நோய்வாய்ப்பட்டு ஒருவர் படுத்துவிட்டால், அவரைச் சார்ந்தவருக்கும் பெருந் தொல்லையே! ஐயோ! இப்போது எப்படி இருக்கிறதோ? இந்த இரவு எப்போது தான் ஒழியுமோ?' என்றெல்லாம் அஞ்சுவர். யார், என்ன அஞ்சினலும் நோய் மட்டும் போகாது. அவளும் அவ்விதந் தான் ஆளானுள். காற்ருலே பேராற்றலை இழந்தாள். மெலிவுற்ருள்; பொலிவிழந்தாள்' என்னே கொடுமை!

* * *

## நானோடு பிறந்த நங்கை!

*ஆசைக்கு அளவில்லை!*

ஏமாற்றத்திற்கும் எல்லை யில்லை. இவ்விரண்டும் அன்று தொட்டு இன்றுவரை இருந்துவரும் அனுபவத் தொடர். வாழ்வுக்கும் தாழ்வுக்கும் இவ்விரண்டுமே முதற்காரணம்!

பாண்டியனைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாள் பாவை! 'நல்ல வீரன்! வெஞ்சமர் புரியும் வேந்தன்! பாருலகம்

போற்றும் புரவலன்' என்றெல்லாம் கேட்டிருந்தாள். ஆனால், ஒன்றை மட்டும் யாரும் அவளிடம் சொல்லவில்லை. அவனே ஒருநாள் வெற்றிப்புகழ் மாலையோடு பவனி வரும்போது பார்த்துவிடுகிருள். 'நல்ல அழகன்!' என்ற சொல், அவளை அறியாமலேயே வெளிப்படுகிறது.

"ஏ, நெஞ்சே! உனக்கு ஏன் நாணம் ஏற்படுகின்றது. அவன் அழகன் என்பதற்காகவா? எனக்குத்தான் அது உடன் பிறந்த நோயாகப் போய்விட்டது. விலகிவர வழியில்லை. நீயுமா அப்படி? மாணூர்க் கடந்து, கடையர்களைக் கொன்று குவித்து, வீரச்செயல்களைச் செய்துவரும் பாண்டியனைக் கண்டவுடன் தடுமாற்றம் ஏற்பட்டு விடுகிறது. அவனைக் காணாத போது ஆயிரமும் சொல்லிக் கொள்கிறேன். அவன் பெருமையைப் பெரிதாக்கிப் பாராட்டிக் கொண்டிருக்கிறேன். 'பவனி வரும்போது பார்க்கமாட்டீர்களா? பேச மாட்டீர்களா? நானே பேச முன்வரவேண்டும் என்று கருதுகிறீர்களா?' என்றெல்லாம் பிதற்றுவேன். இது என் சுபாவம். இரத்தின மாலைகள் தாருங்கள்! அதோடு, அந்த மாலையைத் தாங்கிக் கொண்டிருக்கும் மார்பையும் தாருங்கள்! என்பேன். ஆனால், தழுவ வாய்ப்பு உண்டோ? கிடையவே கிடையாது. எல்லாமே கனவு! உனக்கேன் வீணான நினைவு?" என்று கேட்கிருள்.

94. மாணூர்க் கடந்த மறவெம்போர் மாறனைக்
காணுக்கால் ஆயிரமும் சொல்லுவேன்—
கண்டக்கால்
பூண்ஆகம் தாஎன்று புல்லப் பெறுவேனோ?
நாணோ(டு) உடன் பிறந்த நான்.

(வி - ரை) ஒருவர் இல்லாத வேளையில், அவரைப்பற்றிப் புகழும் மனிதரையும் இகழும் குணமுடையவரையும் நாம் காணுகிறோம். இந்தச் சுபாவத்திற்குத் தலைவிமட்டும் ஒதுங்கியவளா என்ன? ஆகவேதான் அவன் இல்லாத வேளையில் புகழுவதும், கண்டபோது ஏதும் பேசாமல் இருப்பதும் அவளுடைய நிலையாக உள்ளது.

மற வெம்போர் மாறனை—கொடிய பகைவர்களை வெல் லும் ஆற்றல் படைத்த மாறனை; காணுக்கால் ஆயிரமும் சொல்லுவேன்--அவன் இல்லாத வேளையில் கண்டபடி எதையும் சொல்லுவேன்; பூண்ஆகம்—இரத்தின மாலைகள் சூழ்ந்துள்ள மார்பை.

* * *

## இரவே, போ !

கதிரவன் மேற்கை நோக்கிப் பயணம் நடத்திக்கொண்டு இருந்தான். செக்கச் சிவந்த வானத்தில் அவன் மறையத் தொடங்கினன். கொற்கை நகரம் முழுமையும் இருள் புடை சூழ்ந்து வரலாயிற்று.

அந் நகரிலுள்ள பெண்களில் சிலருக்கு இரவு வருவது நல்லதாகத் தெரிந்தது; பலருக்கு இரவு வந்தது பெருஞ் சுமையாகத் தெரிகிறது. காரணம்— ?

அனைவரும் அந்த அரசனைக் காதலித்திருந்த கருத்தால், சிலர் இல்லத்துக்கு மட்டும் அன்று வருவதாக அவன் உறுதி அளித்து இருந்தாலும், மிகப் பலருடைய வீட்டிற்கு அவன் வருவதாக உறுதியளிக்கவில்லையாம். அதற்காகவே மிகப் பலர் வருந்த வேண்டியவர்களானார்கள்.

ஒருத்தி மட்டும் அதிகக் கவலைப்பட்டாள். தன் நெஞ் சோடு பேசிக் கொள்ள முயலுகிறுள்.

''நெஞ்சே ! தென்னவனுடைய மார்பை, இன்று அணைத் துக் கொள்ள முடியாதவர்கள் ஏராளம். அவர்களுள் நானும் ஒருத்தி. எனவேதான், ' இரவே, நீ போ!' என்கிறேன். இன்று அவன் மார்பை அணைத்து மகிழ இருப்பவர்களோ, '' இரவே ! இன்று வெகு நேரம் இரு! நீ போய்விட்டால் என்னை விட்டு அவனும் போய்விடுவான்.!'' என்கின்றனர். பலநிறப் பூக்களைத் தொடுத்து மாலையாக அணிந்துள்ளவனு டைய மார்பில் நறுமணம் கமழும் சந்தனம் பரிமளிக்கிறது. இன்றைய இரவைப் பலர் வெறுக்கவும் சிலர் போற்றவும்

வேண்டியதாகப் போய்விட்டது. இரவுக்கு இன்று பரிதாப கரமான தொல்லை. சிலர், 'இரு!' என்னவும் பலர், 'போ, போ!' எனத் தூற்றவும் நேரிட்டிருக்கிறது!'' என்கிறாள்.

95. புல்லாதார் வல்லே புலர்கென்பார் புல்லினார்
நில்லாய் இரவே நெடி(து) என்பார் - நல்ல
விரா அமலர்த் தார்மாறன் ஒண்சாந்(து) அகலம்
இரா அளிப்பட்ட(து) இது.

(வி - ரை) இரவு பாடு இன்று திண்டாட்டம்! இப்படிப் போனாலும் தவறு; அப்படிப் புரண்டாலும் தொல்லை. இரு சாராருக்கிடையே தொல்லை. ஐயோ! ஏன் இந்த அலங் கோலம்? சொன்னால் மட்டும் இரவு போய்விடுமா என்ன? 'இரு!' என்றால் இருந்துவிடுமா? என்ன, பேதைமை!

புல்லாதார் - அணையாதவர்; புல்லினார் - அவனுடைய மார்பை அடையப் பெறுபவர்கள்; இரா அளிப்பட்டது இது - இருட்டானது இந்த அளவிற்குப் பரிதாபகரமாக்கப் பட்டது.

* * *

## முத்தையொத்த கண்!

ஒரு வீடு! அங்கொரு தாழ்வாரம்! சில முதிய பெண் மணிகள். ஊரிலுள்ள ஒவ்வொரு குடும்பத்துக் கதையையும் பேசிக்கொண்டே வரும்போது காதலுக்கு இலக்காகும் பெண்களைப் பற்றிய பேச்சு வருகிறது.

''கொற்கை நகரத்தில் மட்டுந்தான் சிப்பிகளால் ஈன் றெடுக்கப்பட்ட ஒளிக்கதிர் பரவுகின்ற முத்துக்கள் அத்துறை முகத்தில் இருக்கிறதென்று இத்தனை நாளும் நாம் கருதிக் கொண்டிருந்தோம். அந்தக் கருத்தைச் சற்று மாற்றி அமைத்துக்கொள்ள வேண்டியதுதான்.

''கொற்கை மன்னனான பாண்டியன், இரத்தக்கறை படிந்த வேலை வைத்துள்ளான். அவன் மார்பிலே குளிர்ந்த சந்தனம் நறுமணங் கமழ்வதைக் குறித்து நோக்கும்

பெண்களுடைய கண்களும் ஒளி முத்தைப் போன்றதே!''
என்கிறுள்.

96. இப்பியீன்(று) இட்ட எறிகதிர் நித்திலம்
கொற்கையே அல்ல படுவது—கொற்கைக்
குருதிவேல் மாறன் குளிர்சாந்(து) அகலம்
கருதியார் கண்ணும் படும்.

(வி-ரை) ரோம் நாட்டிலிருந்தும், சீன நாட்டிலிருந்தும் வருகின்ற வியாபாரிகள் கொற்கை நகரத்தில்தான் இறங்குவர்.முத்தை வாங்கிக் கொண்டு செல்லுவர். அம்முத்தையொத்த கண்களே இள நங்கையர்க்கு இருக்கின்றனவென்று செவிலியர் பேசிக் கொள்வது விந்தையாக இருந்தாலும் உண்மைபொதிந்துள்ளது. பாண்டியனை நினைத்துப் பெண்கள் விடும் கண்ணீர்த் துளிகளை முத்துக்களாக்கிக் காட்டும் முறை சிறந்த உவமைக்குரியது.

இப்பி ஈன்று இட்ட எறிகதிர் நித்திலம்-சிப்பி பெற்ற ஒளிக் கதிரைப் பெற்றுள்ள முத்துக்கள்;

* * *

ஊடலும் கூடலும்!

தோழி வந்தாள். தலைவியைக் கண்டாள். ஏதோ துன்பப்படுவதுபோல் அவளுக்குத் தெரிகிறது. ''ஏம்மா! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?''

''போடீ! என்னை ஒன்றும் கேட்காதே! நான் அறிவில்லாதவள்; அனுபவமில்லாதவள்!''

''அதுதான் பேச்சிலிருந்தே தெரிகிறதே!...போகட்டும்! மனம் உடையும் அளவிலே என்ன நடந்தது. அதைச் சொல்லுங்களேன்!''

''என் பைத்தியக்காரச் செய்கையை என்னவென்று உனக்குச் சொல்வது? என்னைக் கூடிச் சுகிக்க வந்த கோமானுடு அறிவின்றி ஊடினேன். அவன் எவ்வளவோ முனைந்து வந்து இன்பச் சொற்களைப் பரிமாறினுன். பாதகியான நான்,

அப்போதும் இணங்காது மறுத்தேன். அவன் என் அருகில் வந்து எதை எதையோ உணர்த்திப் பேசினன். கேட்டால் தானே! பிறகு என் மனம் இளகியது. அப்போது அவன் ஊடத் தொடங்கி விட்டான். அவனை அணைத்து ஒரு முத்தம் பெற நெருங்கிச் சென்றேன்; நெருப்பாகி நின்ருன்! அவன் சொன்னதுபோல நானும் சொல்லிப் பார்த்தேன். தெளிவு பெறவில்லை. என்னுடைய அறிவின்மையான செய்கையால் புத்தம் புதிதான பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையில் தேனூறிக் கிடக்க, அதையணிந்துள்ள மார்பிலே சந்தனம் புரள அதைத் தழுவாமல் இரவு முழுமையும் இருந்தேன். அதே மனக்கவலைதான்!" எனக் கூறி முடிக்கிருள்.

97. யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
தானூட யானுணர்த்தத் தானுணரான்—தேனூறு
கொய்தார் வழுதி குளிர்சாந் தணியலகம்
எய்தா திராக்கழிந்த வாறு.

(வி-ரை) இரவு முழுமையும் ஊடலே! உறவாட வந்தவனோடு போராட்டம்; குலவி மகிழ வந்த கொற்றவன்மீது சீற்றம். என்ன ஆயிற்று? அவனோடு இன்புற எவ்வளவு நாள் காத்திருந்தாளோ! கடைசியில் என்ன ஆயிற்று? கைக்குக் கிட்டியது, வாய்க்கு எட்டாமல்தானே போயிற்று?

* * *

## உறவின் முறை!

நொந்துபோன குடும்பத்தை ஏறெடுத்துப் பார்க்காத சுற்றத்தினர், எதிர்பாராத வகையில் வந்து துன்பத்தில் பங்கெடுத்துக் கொள்வதுண்டு. அப்படித்தான் அவள் அணிந்திருந்த வளையல்கள் நெகிழ்ந்து கீழே விழுவதற்கு முன்னமேயே வலம்புரி வளை கேட்டு அப்படியே நின்றது. இப்போது பாருங்கள், அந்த சோகச் சித்திரத்தை!

"அனைவருடைய உள்ளத்திலும் ஒருவிதக் கிளர்ச்சி மிளிரும் வண்ணம் அணிகலன்களை அணிந்துள்ள என [illegible] தோழியே! ஏறெடுத்துப் பார்க்காதவர் காலத்தால் பாதி[illegible]

கப்பட்டுக் கிடக்கும் குடும்பத்தை ஆதரிக்க முன்வருவது போலத்தான், மாறன்மீது நான் கொண்டிருந்த காதலால் வளையல்கள் கீழே நழுவி விழ இருந்தது. இதற்குள், அந்த இனத்தைச் சேர்ந்த வலம்புரிவளை இரக்கங் கொண்டு, 'ஐயோ! புறப்பட்டு விட்டான், தார்வேந்தன்!' என்பதற்கு அறிகுறியாகச் சத்தத்தை எழுப்பியது. என் வளையல் அந்த ஒலியைக் கேட்டதோ இல்லையோ சட்டென்று நின்று விட்டது. எப்படி இருக்கிறது இது?" என்று கேட்கிறாள்.

98. செய்யார் எனினுந் தமர்செய்வ ரென்னுஞ்சொல்
மெய்யாதல் கண்டேன் விளங்கிழாய் - கையார்
வரிவளை நின்றன வையையார் கோமான்
புரிவளை போந்தியம்பக் கேட்டு.

(வி-ரை) வளையலுக்கு வளையல் காட்டும் இரக்கம் என்னும் முறையில் அவளுக்குள்ள காதல் நெகிழ்வை விளக்குகிறார், புலவர். தெள்ளிய முறை! சுவையான தேன், இப்பாடல். 'நான் எங்கு உயிர்விட்டு விடுவேனோ? என்று அஞ்சி புறப்பட்டு விட்டேன், நான்!' என்ற முறையில்தானே தலைவி குறிப்பிடுகிறாள். அமைத்துக் காட்டும் அழகுதான் என்ன! இஃதன்றோ பாடல்! இதுதானே கவிதை, மேன்மேலும் இன்பத்தையல்லவா ஊட்டுகிறது.

* * *

## கைம்மாறு கருதாத கொடையாளன்!

பாண்டியன் பவனி வருகிறான் என்ற செய்தி, தெருவின் முனையிலேயே செவிக்குக் கேட்டுவிட்டது. உடனே ஓடோடி வந்தாள். பெண்ணை உள்ளே இருக்கச் சொல்லிவிட்டு, தாளிட்டு வெளியே போய் விடுகிறாள்.

இப்போது அந்தப் பெண் என்ன செய்யமுடியும்? எப்படி அவனைக் காண முடியும்? நமக்கே, 'ஐயோ பாவம்!' என்ற அனுதாபம் பிறக்கிறதல்லவா!

தாளிட்ட கதவை உற்று நோக்குகிறாள். ஒரு துளை தெரிகிறது. அதுவும் ஒரு பெரிய துளை. எல்லையற்ற இன்பம் அவள்

இதயத்திற்கு ஏற்பட்டுவிடுகிறது. அப்போது அங்கு அவள் தோழி வருகிருள். மூடப்பட்ட கதவைத் திறக்க முடியாத வாறு கதவைத் தட்டுகிருள்.

''யாரது?''

" நான்தான்...உன் தோழி!

''அடீ...கதவிலே ஒரு துளை இருக்கிறது பார். அதன் வழி யாகப் பேசு! என் வளர்த்த அன்னை செய்த சதியால் ஏற் பட்ட கதி'' என்கிருள்.

தோழியோ, அந்தத் துளையின் வழியாக அவளைக் காண் கிருள்.

''தோழி! சிறைக்குள்ளே அடைபட்ட மானுனேன். எல்லாம் செவிலியின் வேலை. ஆனுலும், இக்கதவைச் செய்த தச்சன், என் மீது இரக்கங் கொண்டு ஒரு துளையையே உண் டாக்கி வைத்துப் போயிருக்கிருன். அவன் செய்துள்ள இந்த உதவிக்கு என்ன பொருள் கொடுப்பது? இந்தத் துளையின் வாயிலாகத்தான் உன்னைப் பார்க்க முடிகிறது; சிறிது நேரத் திற்கெல்லாம் காவலனையும் பார்க்கப் போகிறேன்'' என்கிருள்.

99. காப்படங்கென் றன்னை கடிமனை யிற்செறித்
தியாப்படங்க வோடி யடைத்தபின்-மாக்கடுங்கோன்
நன்னலங் காணக் கதவந் துளைதொட்டார்க்
கென்னைகொல் கைம்மா றினி.

(வி.- ரை) தச்சனை வாழ்த்தும் தையல்! காதலுக்கு ஒரு சிறு துளை இருந்தால்கூடப் போதும்போல் இருக்கிறது. பாருங்களேன்! கதவிலே உள்ள சிறு துளையைக் கூடக் காத லுக்குப் பயன்படுத்திக் கொள்கிருளே! நுண்ணிய அறிவல் லவா இது. அந்நேரத்திற்கு நினைவு வந்து பார்க்கப் பயன் படுத்திக் கொள்ளவேண்டுமே! இந்தத் தலைவி என்னவோ சற்றுத் துரிதமுடையவள் என்ருலும் அறிவுடையவள் என்பது தெளிவாகிறது. சமயத்திற்கேற்ற யோசனை!

முடிவு காணமுடியாத காதலைத் துருவிப் பார்க்கும் முறை! என்ன அருமை!

## யானையே, இரங்கு !

தெருவழியாக யானையொன்று வருகிறது. அது மெல்ல நடந்து வருகிறது. அந்த யானை யாருடையதுமல்ல, மாறனுடையது! வளநாட்டுப் போரணில் வீற்றிருக்கக் கூடியதாகும். அதைப் பார்க்கிறாள் ஒருத்தி. ஏதோ சொல்ல வாய் எடுக்கிறாள். சற்றுத் தடுமாற்றத்தில் எதையும் சொல்லாமல் இருக்கிறாள். பிறகு சொல்லியே விடுகிறாள்.

"அன்பிற்குரிய யானையே! உடுக்கையொத்த அடியினையும், தோலையொத்த செவியினையும், தொங்குகின்ற கையினையுமுடைய பெண் யானையே! நின் தாள் பணிந்து வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். நீ நல்ல மணம் பொருந்திய மாலையைச் சூடிக் கொண்டு, செந்தூரப் பொட்டணிந்து சிங்காரமுகத்தான் உன் மீது ஏறிவரும் போது என் வீட்டு வாசற்படிக்கருகில் சன்னல் வழியாக மெல்ல நடந்து செல். அப்போதுதான் அவன் பார்ப்பான். நான் மகிழ்வேன், நீ, என்னையொத்த பெண்ணுயிற்றே என்பதற்காகத்தான் இதைச் சொல்கிறேன். இரக்கங்கொண்டு செய்!" என்று யானையைப் பார்த்துச் சொல்வது போல் நிற்கிறாள்.

100. துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்
பிடியேயா னின்னை யிரப்பல் — கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமெஞ்
சாலேகஞ் சார நட.

* * *

## இது தகுமா ?

'இவளொருத்தி! வேலை இல்லாதவள்' என்று நினைப்பார்கள், அவள் செய்கையைக் காண்பவர்கள். பாவம்! அவளென்ன செய்வாள். அப்படிக் காதலல்லவா செய்யச் சொல்கிறது.

அவள் வீதிவழியாகப் பெண்யானையொன்று போகிறது. அதன்மீது மாறன். அந்த யானை மெல்லப் போனாலும் பாதகமில்லை. மிகவும் துரிதமாகச் செல்கிறது.

அதுகண்ட அவள், ''என்னையொத்த இளமையான யானையே! உன்னுடைய நடையைக் கண்டு நான் கற்றுக் கொள்வதற்காக முன்பெல்லாம் மெல்ல நடந்து காட்டினுய். இன்று மட்டும் ஏன் ஒரு மாதிரியாக மாறிவிட்டாய். கூடற் பெருமானுகிய பாண்டியனுடைய வேலில் புலால் தோல் தொங்க உன்மீது ஏறி உலா வருகிருன், வெற்றியடைந்து வாகைமாலே சூடிக்கொண்டதால்! நீயோ இன்றுதான் வேக மாகச் செல்கிருய். உன் பெண்மைத் தன்மை குறித்து அச்சப் படக்கூடிய அளவில் நடந்து செல்வது ஏனே? இது முறையா ?'' என்கிருள்.

யானையின் செவியிலே எங்கு விழப்போகிறது ? அவள் சொன்னது அத்தனையும் விழலுக்கு இறைத்த நீரேதான்! இதை, அவள் எங்கே உணரப் போகிருள்? பித்தமல்லவா தலைக்கேறி இருக்கிறது!

101. ஏலாஅ மடப்பிடியே யெங்கூடற் கோமான்
புலாஅல் நெடுநல்வேல் மாறன்—உலாஅங்கால்
பைய நடக்கவுந் தேற்ருயால் நின்பெண்மை
ஐயப் படுவ துடைத்து

(வி - ரை) கற்பனைக்கண் விசாலமானது. அது நோக்கத் தொடங்கினுல் ஒவ்வொரு சிறிய பொருளும் பெரியதாகவே தெரியும். மிகைப்படுத்திக் காட்டும்! அதனுல்தானே என்னவோ புலவர்தம் கற்பனையாவும் பரந்த நிலத்தைப் போலவே காட்டிக் கொண்டிருக்கிறது!

* * *

## மெல்ல நட!

குதிரை மீது உலா வரும் மாறன்! அதைக் காணும் மங்கை. கண்களோ சிறிது; கண்ணேட்டமோ பெரிது. அதுவும் காதற் கண்ணேட்டமாயிற்றே! சொல்லவா வேண்டும்!

குதிரையைப் பார்க்கிருள். அது ஓடி வருவதாகவே புலப்படுகிறது. அப்போது சொல்கிருள்.

மு. 10.

''வீரக் குதிரையே! விரைந்து செல்கிறாயே! போர்க் களத்திலே தான் இத்தகைய வேகம் தேவை. தெருவிலுமா? கூடாது! குறைத்துக்கொள்! ஏனென்றால், எனக்குத் தொல்லையாக இருக்கிறது. எனக்குள்ள வருத்தம், உனக்குத் தெரியுமோ, தெரியாதோ! ஆனாலும் சொல்கிறேன். அப்போதாகிலும் மெல்லச் செல்கிறாயா பார்ப்போம். நானோ கூரிய வேல் படைத்தவனும் மதயானையைத் தன்னகத்தே கொண்டவனுமான மார்பனை-நல்ல மாறனைக் காணவேண்டுமெனக் கதவின் ஓரமாக நின்றுள்ளேன். காரணம் அவன் மேல் காதல் கொண்டுவிட்டேன். வெட்கத்தைவிட்டு உன்னிடம் சொல்கிறேன்! அவனுடைய அழகைக் காண வேண்டும் என்பதற்காகவே உன்னை மெல்லப் போகச் சொல்கிறேன். ஊர் திரும்பும் வரையிலும் மெல்லச் சென்று என் உள்ளத்திற்கேற்ப நட!'' என்கிறாள்.

குதிரைக்குத் தெரியுமா?

அது, அப்போதும் வேகமாகச் செல்கிறது!

102. போரகத்துப் பாயுமா பாயா துபாயமா
ஊரகத்து மெல்ல நடவாயோ—கூர்வேல்
மதிவெங் களியானை மாறன்றன் மார்பங்
கதவங்கொண் டியாமுந் தொழ

(வி - ரை) அவா கொண்ட அணங்கு, புரலவன் ஏறி வரும் புரவியிடம் தன் குறையைச் சொல்லும் முகத்தால் அமைந்திருக்கும் முறை போற்றத் தகுந்ததாகும். எல்லாமே எண்ணத்தின் பிரதி பிம்பந்தானே!

* * *

நெஞ்சமே, சொல்!

'' வழி விடுங்கள்! பொன்னனை செல்வன் புலியாளும் வேந்தன்—புகழ்சேர் வீரன், தென்னவன் வருகிறான்...வழி விட்டு ஒதுங்கி நில்லுங்கள்!'' என்கின்றனர், வீரக் காவலர்கள்.

குதிரை மீது ஏறி வருகிறான், மாறன்! வேகமாகக் குதிரை வருகின்ற காரணத்தால் தெருவெல்லாம் ஒரே புழுதி. முகத்திலே அள்ளித் தெளிக்கும் வகையிலே புரவி போகிறது. அங்கு நின்றிருந்த பாவை, ''ஏ, நெஞ்சே! மலர்த் தோட்டத்திலே பூத்தப் புது மலர்களை மாலையாகத் தொடுத்து அணிந்துள்ளவனும், பொன்னால் செய்யப்பட்ட தேரையுடையவனுமாகிய தென்னவன்—தீம்புனற் காவலன் ஏறிவந்த கனவட்டம் என்ற பெயரைக் கொண்ட குதிரை—வேகமாக ஓடியதால் ஒரே புழுதியாக உள்ளது. இப்படிக் கிளறிவிட்ட புழுதியில் என் ஆசை என்னும் குளத்திலே விழுந்து புரளுவேனோ? புழுதியை அள்ளித் தலையிலே வைத்துக்கொள்வேனோ? மணம் பொருந்திய பொருள்களோடு குழம்பு போல் குழைத்து, மலரிதழை எழுதுகோலாக்கி மார்பிலும் தோளிலும் எழுதிக்கொள்வேனோ? எப்படிச் செய்தால் எனக்குள்ள நோய் நீங்கும்?'' என்கிறாள்.

103. ஆடுகோ சூடுகோ ஐதார் கலந்துகொண்
டேடுகோ டாக எழுதுகோ—நீடு
புனவட்டப் பூந்தெரியல் பொற்றேர் வழுதி
கனவட்டங் கால்குடைந்த நீறு

* + *

## காலையும் மாலையும்

தேய்பிறையின் மூன்றும் நாள்! அன்று தேய்ந்த நிலவு வானத்து வீதியிலே வருவதற்குச் சற்று நேரமாகியது. எப்படியோ ஊர் உறங்கும் சமயம் வரமுடியாமல் வந்தது. அந்த ஒளியில் அக்கம் பக்கத்துச் செவிலியர்கள் மணலில் உட்கார்ந்து பேசலானார். இந்த இளம் நங்கையர்களைப் பார்த்தீர்களா? எப்படி இருக்கிறார்கள்? பாண்டியன் வரும் நேரமான பிற்பகலிலெல்லாம் பாவையர்களின் காமமானது குடத்தினிலிட்ட விளக்காக இருக்கிறது. பிறர் கண்களுக்குத் தெரிவதில்லை. ஆனால் பாண்டியன் உலா வரும் பொருட்டு வெளி வந்து விட்டான் என்ற செய்தி கேட்டதும், அவர்

களுக்கு என்ன இன்பம்! எத்தனை மகிழ்ச்சி! காட்டிடத்தே மேயச் சென்ற பசுக்கள் வீட்டிலே நுழையும் மாலைப் பொழுதில், அருகிலே இருக்கும் மலைமீது ஊரார் அறியும் வண்ணம் எரிகின்ற தீயைப் போலல்லவா அவர்களுடைய காமம் பலர் அறிய ஏதுவாகிறது. இது என்ன கூற்று!" என்கிறாள், ஒரு செவிலி.

மற்றொரு செவிலித்தாய், எல்லாவற்றிற்கும் 'ஊம்! கூட்டிக் கொண்டே இருக்கிறாள்.

104. குடத்து விளக்கேபோற் கொம்பன்னார் காமம்
புறப்படா பூந்தார் வழுதி - புறப்படின்
ஆபுகு மாலை யணிமலையில் தீயேபோல்
நாடறி கௌவை தரும்

(வி - ரை) பகலெல்லாம் காமமானது குடத்திலிட்ட விளக்கு போல் உள்ளுக்குள்ளேயே இருக்கிறதாம். மாலைப் பொழுது வந்துவிட்டால் ஊரார் அறியும்படி மலைமேல் ஏற்றிய தீயைப் போல் தெரிந்துவிடுகிறதாம், ஆகா! நான்கே வரி! இரண்டு உவமை. உயிருட்டும் செய்யுளன்றோ இது!

* * *

## கொற்றவனே குற்றவாளி!

இரண்டு நாளாக அவள் யாரிடத்திலும் பேச மனமின்றி இருந்தாள். உண்ணவும் மனமில்லை. உறங்கவும் வழியில்லை. என் செய்வாள்! காதல் என்றாலே கடுந் தண்டனைதானே. அது அவளுக்கு அவனைச் சந்திக்கும் முன் தெரியவில்லை; பிறகுதான் அறிந்துகொண்டாள். அவள் முகமே அலங்கோலமாகத் தென்பட்டது. பார்த்தாள், தோழி! நெருங்கி வந்தாள். "துயரென்னம்மா?" என்கிறாள்.

தலைவி பேசாமல் கண்ணீர் சிந்துவதைக் கண்ட அன்னை வள் மனம் புண்ணாகியது.

"அம்மா! நீங்கள் இப்படிக் கண்ணீர் விடுவது என்னவோ ஒரு மாதிரியாக இருக்கிறது. குறையைச் சொல்

லுங்களம்மா! நிறைவேற்ற முடிந்தால் நிறைவேற்று கிறேன்.''

''தோழி! நீ மிகமிக நல்லவள். எனக்கு நன்ருகத் தெரிந் ததே. என் பொருட்டு எந்தெந்த வேளையில் பாடுபட்டு இருக்கிருய் என்பதை என்னுல் மறக்க முடியவில்லை. உண்மை யிலே மறக்க முடியாத உதவிகளே அவை! தவறுதல் செய் யாத நம் தெரு வழியே வலம் வந்தான் வேந்தன். எல்லோ ரும் வணங்கும்போது நான் மட்டும் வணங்காமல் இருக்க முடியுமா? வணங்கினேன்! அப்போதே என்னிடத்தில் குடி கொண்டிருந்த வெட்கம், பெண்மைக்குள்ள நலன், தோளின் அழகு, அத்தனையும் கவர்ந்து கொண்டு போய்விட்டான் பாண்டியன்! அதனுலேயே உணவு செல்லவில்லை; உறக்கம் வரவில்லை. என் துயரத்திற்கு ஏற்ருற்போல கருங்கடலும் 'ஓ' வென ஓசை செய்து கொண்டே இருக்கிறது. அது வேறு! கருங் கடலுக்கும் கொற்கைக்கும் அவன் தானே மன்னன்! தவறுதலுக்கு, அவன்தானே காரணம். அப்படி இருக்கும் போது என் குறையை யாரிடத்தில் சென்று முறையிடுவது? நீதியின்கீழ் அமர்ந்துள்ளவனே அநியாக நடக்குப்போது யாரிடத்தில் இக்குறையைச் சொல்லி மனத்திற்கு ஆறுதல் தேடிக் கொள்வது?'' என்கிருள்.

105. வழுவிலெம் வீதியுள் மாறன் வருங்கால்
தொழுதேனைத் தோணலமுங் கொண்டான்—
இமிழ்திரைக்
கார்க்கடற் கொற்கையார் காவலனுந் தானேயால்
யார்க்கிடுகோ பூச லினி

(வி - ரை) கள்வனிடத்திலேயே சென்று நீதி வழங்கு!' என்று எப்படிக் கேட்பது என்பதே இச்செய்யுள் தரும் விருந்து. காதலால் வந்த கோளாறு! அத்தனையும் தித்திக்கும் தேனுக அமைந்துள்ளது.

இமிழ்திரை-ஒலிக்கின்ற கடலோசை; அலையோசை; கார்க்கடல்-கருமையான கடல்.

* * *

நேர்மைதானா ?

தோழியிடம் சொல்லும் கூற்று இது! கொடுமைதான்! என்னதான் இருந்தாலும் அரசன் அவளிடத்தில் அப்படி நடந்து கொள்ளத்தான் கூடாது. சேச்சே! துரோகமில்லையா? இதோ, பாருங்கள் : -

"தோழி! மன்னுயிர்க்கெல்லாம் காவலனாம்! எல்லோரையும் சரிசமமாக நினைப்பதே அவனது நெறி முறையாம். கேள்விப்படுகிறேன்! ஆனால் உண்மையில் என்ன நடக்கிறது? ஒரு பக்கத்தில் அமர்ந்து உணவு அருந்துபவர்களுக்குப் பாலும், மறுபக்கத்தில் அமர்ந்து உணவருந்துபவருக்கு வெறும் நீரும் தருவது போலல்லவா மன்னனும் என் விஷயத்தில் நடந்து கொண்டிருக்கிறான். எல்லா உயிர்களையும் காக்கும் போது இந்த ஓர் உயிர் மட்டும் என்ன பாவம் செய்தது? எனக்கு மட்டும் ஏன் துயரத்தை அளிக்கிறான்? இது அவனுள்ள நெறிக்கு முறையா? தகுமா? நீதிதானா?" என, படபடவெனப் பேசி முடிக்கிறாள்.

106. மன்னுயிர் காவல் தனதான அவ்வுயிருள்
என்னுயிரும் எண்ணப் படுமாயின்—என்னு
யிர்க்கே
நீரொழுகு செங்கோற் செழியற்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா வாறு

(வி - ரை) உருக்கமான பாடல்! உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வகையிலே பொருள் அமைந்துள்ளது. பாலையும் நீரையும் உதாரணமாக்கி, மன்னனுடைய நேர்மையில் குற்றங் காணுகிறாள். அப்படி அவன் குற்றம் புரிந்தவன் தானா என்று கேட்டால் இல்லையென்றுதான் சொல்லவேண்டும். காதல் கொண்ட காரணத்தால் தலைவியின் உள்ளம் அப்படி நினைத்து உருகவேண்டியதாக உள்ளது. வேறொன்றுமில்லை.

* * *

## யார் சொல்வார் ?

பாண்டியனைக் காதலித்த பெண்கள் பலர். அவர்களிலே இவளும் ஒருத்தி. இவள் பாண்டியன்பால் மனதைப் பறி கொடுத்தவள். ஒரு நிலை நில்லாத இவள் மனநிலை, ஏதேதோ எண்ணுகிறது. தோழியிடம் சொல்கிறாள்; "பாண்டியனைப் பற்றி யாது சொல்வதெனத் தோன்றவில்லை. அவன் யாருக் கும் உட்படாத தன்னிகரற்ற முடிமன்னன். உலகத்தையே கட்டி ஆள்பவன் என்றால் மிகையாகாது. ஆனால் நானே எளியவள். அதிலும் பெண்ணாகப் பிறந்துவிட்டவள்; என்னை அவனாக மனம் வைத்து ஏற்றால் உண்டு. இல்லையென்றால் துபற்றி யார் அவனிடம் மறுத்துரைக்க முடியும்!" என்று நொந்து கொள்கிறாள்.

107. தானேல் தனிக் குடைக் காவலனார் காப்பதுவும்
வானேற்ற வையகம் எல்லாமால்—யானோ
எளியேன் ஓர் பெண் பாலேன் ஈர்ந்தண்தார்
மாறன்
அளியானேல் அன்(று) என்பார் ஆர்

வானேற்ற வையகம் - நாலா பக்கமும் வான்முட்ட நிற் கும் பூவுலகம்; அளியானேல் - கருணைகொண்டு காதலிக்காம லிருந்தால்;

* * *

## ஒழுக்கமுள்ளவன் !

ஒழுக்கம். உயிரினும் பெரிது என்று அன்றே கண்ட தமிழகம் இது. ஒழுக்கத்திற்குத் தருகின்ற மதிப்பைப்போல வேறு எதற்குமே தந்தது கிடையாது. அதுதான் 'சரி' என்பது ஆன்றோர்தம் முடிந்த முடிபு. மன்னன் அப்படித்தான் ஒழுக்க முள்ளவனாக விற்றிருந்தான். நீதியைவிட்டுப் பிறழாத நேர்மையாளன்! அத்தகையவன் மீது ஒருத்தி காதலுற்று, கவலைப்பட்டுக் கொண்டிருப்பதை அவளுடைய தோழி காண்கிறாள். தன் நெஞ்சோடு சிலவற்றைச் சொல்லிக் கொள்கிறாள்.

"ஏ, மனமே! என் தலைவியின் நிலையைப் பார்த்தாயா? எவ்வளவு மோசமாக இப்போது காணப்படுகிருள். ஐயகோ! தேனேடுகூடிய பூமாலையை அணிந்துள்ள இவள், பாண்டிய னைக் குறித்து எவ்விதமெல்லாம் ஏக்க முறுகிருள். எழிலைக் கவர்ந்து கொண்டு திருப்பித்தர மறுக்கும் வஞ்சி நாட்டு வேந்தனல்லவே, கொற்கை நாட்டுத் தலைவன்! ஒழுக்கத்தை விட்டு பிறழாமல் நடக்கும் புரவலனல்லவா? அவன்மீதுஇவள் காதல் கொண்டு என்ன செய்ய? வீண்தானே! அவனருள் இவளுக்கெங்கே கிடைக்கப் போகிறது?" என நினைந்துருகு கிருள்.

தலைவியைப் பார்க்கிருள். அவளுக்கு பரிதாபமாகத்தான் இருக்கிறது. அதைவிடப் பரிதாபகரமாகத் தெரிகிறது, அவன் மீது அவள் காதல் கொண்டது.

108. நறுவேந்து கோதை நலங்கவர்ந்து நல்கா
மறவேந்தன் வஞ்சியான் அல்லன் - துறையின்
விலங்காமை நின்று வியன்தமிழ்நா டைந்தின்
குலங்காவல் கொண்டொழுகுங் கோ.

(வி-ரை) இப்பாடலிலிருந்து தெளிவாக இரண்டு கருத்து விளங்குகிறது. ஒன்று வஞ்சி நாட்டுக்கும் பாண்டிய நாட்டிற் கும் பகையிருக்க வேண்டும் என்பது. மற்ருென்று வஞ்சிக் குரிய சேரன் சற்று ஒழுக்கத்திற்கு மாறுபட்டு நடப்பவன் என்பது. இல்லையென்ருல், 'வஞ்சியான் அல்லன்!' என்று வந்திருப்பதற்கு நியாயமில்லை.

தமிழ் நாடு ஐந்திற்கும் தலைவனுக விளங்கினுன் என்பதும் ஒழுக்க சீலனுகத் திகழ்ந்தான் என்பதும் தெரிய வருகிறது.

* * *

## கண்ணேடு காதல்!

இருவரை ஒருவர் சந்திக்கும்போது கண்கள்தான் பேசும் அதன்பிறகு பேச்சு வார்த்தைக்கு இடம் ஏது? அவளும் அவனை அப்படித்தான் பார்த்துக் காதல் கொண்டாள். பிறகு கவலைக்குள்ளாக வேண்டியவளானுள்.

அது சமயம், 'ஏ, உள்ளமே! பாண்டியன் பவனி வரும் நேரத்தில் நம் கண்கள் அவனை உற்று நோக்கின. அதனால் அவற்றிற்கு யாதொரு தீங்கும் நேரவில்லை. ஆயினும், தோள்கள் மட்டும் அழகு கெட்டு காண்பதென்ன? புரியவில்லையே! மூங்கிலையொத்த தோள்களல்லவா மெலிந்து காணவேண்டிய சூழ்நிலைக்கு இலக்காகியுள்ளது.

அதுவன்றி பசலை நிறமுமல்லவா பெற்றுள்ளது. உழுத் தாங்காய் பறித்துவிட்ட பிறகு அந்நிலத்தில்...உழுத வயலில் விளையும்புல்லை, ஊரிலுள்ள கன்றுகள் மேய்ந்து விடுகின்றன. ஆனால் கடைசியில் என்ன ஆயிற்று? அந்த வழியாகப் போய்க் கொண்டிருக்கும் கழுதையைப் பார்த்தவர்கள் அரிவாளால் அதனுடைய செவியை அறுத்தது போலல்லவா என் தோள்களும் நெகிழ்ந்து காணப்படுகின்றன. இதென்ன மோசம்?'' என்று குறிப்பிடுகிறாள்.

109. உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்—வழுதியைக்
கண்டநங் கண்கன் இருப்பப் பெரும்பணைத் தோள்
கொண்டன மன்னோ பசப்பு.

(வி-ரை) கன்றுகள் மேய்ந்து செல்ல கழுதைக்கு ஆபத்து நேர்ந்தது போலல்லவா எந்தன் கதியும் என்று தலைவி சொல்வதாகப் புலவர் வரைந்து காட்டும் முறை புகழ்ந்து பேசத் தக்கவற்றுள் ஒன்று. கன்றுகள் போல் கண்கள் மேய்ந்தன; தோள்களோ வீணாக மெலிவு பெறுகின்றன. என்ன வியப்பு!

* * *

## மனமோடு மங்கை!

உலா வந்த உலகாளும் மன்னன் பின்னாலே அவள் மனம் சென்றது; மீண்டும் வரவில்லை. மிகவும் வருத்தப்பட்டாள் அவள். மற்றொரு நெஞ்சோடு பேசிக் கொள்கிறாள்.

''மனமே! மாறனோடு சென்ற இன்னொரு மனம் திரும்பி வர வில்லையே! முற்றத்தில் நின்று முழங்கும் வெறி பிடித்த

யானையைக் கண்டு அஞ்சி அரண்மனைக்கு வெளியே கையூன்றி நின்றுவிட்டதா? அல்லது அங்கு போய்ச் சேர்ந்ததா? சேர்ந்து, செய்தி அறிந்துதான் வந்துகொண்டு இருக்கிறதா? எனக்கு எதுவுமே தெரியவில்லையே!" என்கிறாள்.

110. சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி
பெறுந்துணையும்
நின்றதுகொல் நேர்மருங்கில் கையூன்றி-முன்றில்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்
குழந்துபின் சென்றவென் னெஞ்சு

(வி-ரை) மன்னன் பின்னே சென்ற மனத்தைக் குறித்து மனம் வருந்தும் மங்கையைக் காட்டும் கருத்துள்ள பாடல். "சென்றதோ? கண்டு பேசி வருகிறதோ? மதயானையின் பேரொலி கேட்டு நின்றதோ?' என வரும் இச் செய்யுள் சுவைமிக்கதாகும். கவிஞரின் கையிலே தவழ்ந்து விளையாடும் எழுத்தாணியின் திறன்தான் என்னே!



*குறிப்பு: 108, 109, 110 வரை உள்ள பாடல்கள் முத்தொள்ளாயிரம் என கருதத் தக்கவை.

# பாட்டு முதற் குறிப்பு

## சேரன்



## சோழன்

## பாண்டியன்



32516